உ

கடவுள் துணை.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவர்

திருவாய்மலர்ந்தருளிய

# பஞ்சபாண்டவர்

## வனவாசம்.

இவை

திருத்தணிகை

ஆறுமுகதேசிகரவர்களால்

பார்வையிடப்பட்டு

ஆதிபுரி

இரத்தினவேலுமுதலியாரது

வாணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

**1905.**

சென்னை - நாராயணமுதலிவீதி 52-ம், வீடு.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# பஞ்சபாண்டவர் வனவாசம்.

---

## விநாயகர்தோத்திரம்.

ஐந்துகரத்தோனே அரனார்திருமகனே
ஆறுமுகற்குமூத்தவனே ஆனைமுகப்பிள்ளையரே
தொந்திவிநாயகரோ தொப்பைக்கணபதியே
பானைவயித்தோனே பழமேந்துங்கையோனே
மூலமுதலேநீர் முன்னடக்கவேணுமையா

## சரஸ்வதிதோத்திரம்.

நாவிற்சரஸ்வதியேநான்முகனார்தேவியரோ
சதுர்முகனார்தேவியரோதாயேசரஸ்வதியே
வாக்குவரமருள்வாய்மறையவனார்தேவியரோ
இந்தகதைசொல்வதற்குஎன்கருத்தில்வாருமம்மா
தப்புகளில்லாமல்தாயேநீவாக்கருள்வாய்
பஞ்சவர்கள்தன்கதைக்குபார்வதியேமுன்னிருந்து
குற்றமதுவாராமல்கொண்டணைத்துக்காருமம்மா

## கதையின்வரலாறு,

### முதலாவது சூரியன்வனம்-

காரானைக்கண்ணேகணபதியேமுன்னடவாய்
ஐவர்பஞ்சபாண்டவர்கள்ஆரணியம்போனபின்பு
தேசத்தழகுமன்னன்திரியோதிரப்பெருமான்
வனவாசம்போனபின்புமகாராசனென்னசெய்தான்
அம்மான்சகுனியைஅருகாகத்தானழைத்து
மாமன்சகுனியின்மதிமுகத்தைத்தான்பார்த்து
மாநாகங்கொண்டதொருமகாராசனேதுசொல்வான்
சபைகள்நிறைந்திருக்கச்சர் பக்கொடியோனுரைப்பான்
ஐவர்வனவாசம்போயஞ்சாறுமாதமுண்டு
செத்தாரோபிழைத்தாரோசேதிதெரியவில்லை
வனம்போனபஞ்சவர்கள்மாண்டாரோவறியேன்
அம்மான்சகுனியைஅரவத்துவசன்கேட்கையிலே

மாமன்சகுனியுந்தான் மருமகனுக்கேதுரைப்பான்
தூதனைபோகவிட்டுதொலைதூரமேதேடில்
வனமாய்வனங்களிலேவனவாசஞ்செய்கிறாம்
செத்ததுவும்பிழைத்ததுவும்சேதிதெரியுமென்றான
என்றதுகேட்டவுடனேழுந்தான்திரியோதிரனும்
அங்கிருந்ததூதர்களை அரசுமன்னன்தானழைத்து
ஐவர்வனம்போய்அனேகநாளாச்சுது
வந்தவனத்திலிருக்கிறாரென்றறிந்து
ஐவர்களைகாணுதே அதிசிக்கிரம்வாரும்
காற்றாய்பறந்துகடுகியேவாருமென்றான்
தாம்பூலம்வாங்கித்தானடந்தார்தூதுவர்கள்
கோட்டைகடந்தார்கள்கொத்தளமுந்தான்கடந்தார்
பட்டணமுந்தான்கடந்துபாறவனம்போகலுற்றார்
செந்நாய்புலிகரடிசிறும்வனங்கடந்தார்
வேங்கையடர்ந்தவனம்வெண்களாப்பூத்தவனம்
கோங்குசெருத்தவனம்கொன்றைகளாட்பூத்தவனம்
பாதிரிமுல்லைபெருத்தவனங்கடந்து
ஓருநாளைக்கிரைதேடுங உயர்ந்தகொம்பில்தானிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங்கதலிவனங்கடந்து
சூரியவனந்தனிலேபோய்ச்சேர்ந்தார்தூதுவர்கள்
பாணசாலைக்குள்ளிருக்கும் பஞ்சவரைக்கண்டார்கள்
இருக்குமிடமறிந்து வகிகடந்தார்கள்
வனமாய்வனங்கடந்துவாறார்அம்பலத்தே
திரியோதிரனிருக்குஞ்சிங்காதனத்தின்முன்பால்
சாஷ்டாங்கமாகவேதான்சரணமிட்டார்தூதுவர்கள்
மகாராசர்மெச்சுகின்றமன்னவனேநீர்கேளும்
சூரியவனத்திலவாசுகமாயிருக்கிறார்கள்
பாணசாலைமேலாகப்பஞ்சவரைகண்டோமென்றார்
அவ்வார்த்தைகேட்டுஅரசுமன்னனேதுசொல்வான்
மாமாசகுனிமன்னவனேநீர்கேளும்
எந்தவிதப்பண்ணுலும்இறவாமல்பஞ்சவர்கள்
தப்பிப்பிழைத்துயிருக்கிறார்தறணியில்
வனவாசந்தீர்ந்துவந்தார்களாமானுல்
பங்குள்ளபிரகாரம்பாதிராச்சியங்கேட்பாரே
வாராமல்பஞ்சவரைவனத்திலேகொல்லுகைக்கு
ஆலோசனைசொல்லுமையா அம்மாமனைவுரைத்தான்
மாமன்சகுனிமருமகனுக்கேதுரைப்பான்
செல்வமருமகனேதிரியோதிரா அஞ்சாதே
ஐவரைக்கொல்லவென்றால்ஆலோசனைசொல்லுகிறேன்
தேவலோகத்திருக்குஞ்சினமுற்றதுருவாசர்
அவரை வருந்திதபசுபண்ணுல்வந்திடுவாரிப்பொழுதே

அந்தபொழுதில்வருந்திச்சரணஞ்சொல்லி
அடிசில்சமைத்து அமுதுபடைத்திருனல்
போசனமிட்டுபுகழ்வேந்தேபொற்பதத்தில்
சரணமடைந்திட்டால்சந்தோஷப்பட்டிடுவார்
துருவாசர்தன்மகிமைசொல்லிமுடியாது
தேவராலாகாது ஜெயிக்கமுடியாது
ஆருனுமாகாது அந்தரிஷியைச்செயிக்க
அப்படிக்கொத்தவனை அழைத்துநீரன்னமிட்டால்
சந்தோஷப்பட்டிடுவார்தபசில்பெரியவரும்
ஐவரைக்கொல்லுதற்கு அவரைமனுக்கேட்டால
நல்லதென்றுசொன்னை இராச்சியமுமுன்னுதடா
யாருலேயாகும் ஐவரைக்கொல்லவென்றால்
என்றுசொல்லக்கேட்டுஇருச மது ரியோதிரனும்
உள்ளங்குளிர்ந்து உடனேகத்தானெழுந்தார்
அங்கொருவர்தானறியாதறவக்கொடியோனடந்தான்
முத்துமிதியடியைத்தொட்டுநடந்தசந்தான
பூங்காவனம்புகுந்துபுதுக்கங்கைநீராடி
ஸ்நானங்கள்செய்துசெபதபமுந்தான்முடித்து
நினைந்துசிவனைநெற்றியில்வெண்ணீறணிந்து
அரகரவென்றுஅள்ளியிட்டான்வெண்ணீறு
சலங்களைக்கொண்டுலிங்களைச்சுத்திபண்ணி
தெற்பாசனம்போட்டுதிரியோதிரராசன்
துருவாசமாரிஷியை அருகுவரத்தானினைந்து
கண்ணிரண்டுமூடிக்கருத்தில்நினைந்தானே
அருந்தபசுபண்ணுறானே அரவக்கொடியோனும்
அப்போது அந்தரிஷியறிந்துஞானதிருஷ்டியினால்
சர்ப்பக்கொடியோன்தபசுநிலையறிந்து
சந்தோஷமாகிதான்வருவாரந்தரிஷி
சடையுஞ்சடைமுடியுந்தப்பிரானைப்போலே
கையில்கமண்டலமுங்காஷாம்பரமணிந்து
தெண்டுகமண்டலமுந்திருநீறுக்கோபியுடன்
வருகிறாந்தரிஷிவானுலகந்தான்கடந்து
வனமாய்வனங்கடந்துவாழ்மலையுந்தான்கடந்து
திரியோதிரன்தபசுநிலைசேரவந்தரிஷி
கண்டவுடன்மன்னன்கடுகியேதானெழுந்து
முக்காலுமன்னன்முடிவணங்கித்தெண்டனிட்டு
ஆண்டவனேஐயாவே அடியேன்சரணமென்றான்
சிறந்ததுருவாசரிசிசித்த மகிழ்ந்தகுளிர்ந்து
என்னையழைத்தது தானேதுகருமமென்றார்
மனதில்நினைத்ததெல்லாம்மன்னவுரையுமென்றார்
அஞ்சிப்பயந்தவனும் அரசமன்னனேதுசொல்வான்

அமுதுபடைக்கவென்று அநேககாலென்மனதில்
எண்ணியிருந்தேன்காண் இதுவேகருமமல்ல
வாரும்மகாரிஷியேவருவீரமுதுசெய்வீர்
வருகவியழைத்துவந்தான்மாளிகைவாசலிலே
வட்டமணைபோட்டுவந்திருமென்றுசொல்லி
கைக்குச்சலஞ்சொடுத்தான்கட்டழகர்கோமானும்
தலைவாழையிலைபோட்டுதண்ணீருந்தான்தெளித்தான்
முக்கனியஞ்சர்க்கரையும்முன்படைத்தான்திரியோதிரன்
கட்டுவர்க்கமுடனேகாவலனுந்தான்படைத்தான்
உண்ணுமுனைனுமென்றுவுபசாரணைபண்ணலுற்றான்
அத்தனைபோசனமு:: அருந்தினார்ரிஷி
உண்டுபுசித்தாரும்வுள்ளங்குளிர்ந்தாரும்
கையலம்பிக்கொண்டுமவர்க[illegible]புஞ்சுத்திபண்ணி
சிங்காதனத்திலேசேர்ந்தாரேயந்தரிஷி
தென்னமுடிவேந்தன்திரியோதிராசன்
பொற்றா:பளங்கனிலேபுட்பமுஞ்சந்தனமும்
தங்கதாம்பாளத்தில் தாமபூலந்தான்கொடுத்தான்
மெத்தமகிழ்ந்தாரே மேன்மைதுருவாசரிஷி
சர்ப்பக்கொடிபடைத்தசகிமன்னனைப்பார்த்து
உனக் கென்னமனதில்இஷ்டமெல்லாங்கேட்டுவிடு
மனதில்நினைந்தொருவரங்கேளுந்தாரேனென்றார்
என்றுமவருரைக்கவேதுரைப்பான்திரியோதிரன்
ஏதுவரந்தருவீரென்றுரைத்தான்திரியோதிரன்
அப்போதுமாமுனியும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
நீ கோரும்வரங்களெல்லாம்கெப்பெனவேதாரேனென்றார்
அப்போதுதிரியோதிறன் ஆணழகனேதுசொல்வான்
பங்காளிபிள்ளைகளோபஞ்சவர்களைவருண்டு
ஐவர்வனவாசம் ஆரணியம்போனார்கள்
சூரியன்வனத்திலேதான் இருக்கிறார்பஞ்சவர்கள்
ஐவரைக்கொல்லவென்று அனேகமனதாகி
உம்மைவருந்தினேன்உண்மையுள்ளமாமுனியே
பஞ்சவரைக்கொல்லவென்றுபாலசமாய்ச் சொல்லுமென்றான்
எந்தவகையாலும்இறக்கவகைபண்ணுமென்றான்
பாதம்பணிந்தானேபாமபுக்கொடியோனும்
துருவாசமகாரிஷியுஞ்சொல்லுகிறா வாய்திறந்து
ஏதுகாணும்மைசெய்தாரிராஜாக்கள்பஞ்சவர்கள்
எப்படிக்கொல்வேனினிராஜாக்கள்பஞ்சவரை
திரியனதுகேட்டுசெப்புவான்வாய்திறந்து
ஆரணியந்தன்னிலேஐவரருகிற்சென்று
போஜனங்கேட்டாலேபுகழ்வேந்தர்பஞ்சவரை
ஐவருக்கும்போஜனங்களங்கேகிடையாது

வெந்தசோறுண்டுவிதமறியார்பஞ்சவர்கள்
போசனமில்லையென்றால்பொட்டெனவேசாபமிட்டு
நல்லாகமன்னருக்காவலாய்செய்தாவிட்டு
கூடிவந்துசேதிசொல்லுங்கனத்தரிஷியாரே
போய்வாருமென்றுபொந்தவேதெண்டனிட்டான்
துருமகாரிஷியுந்துருக்காகவேயெழுந்து
தெண்டுகமண்டலமுஞ்செம்புலிமேதாலாசனமும்
கூடுகிடந்தாரேகாடுசெடிநோக்கி
ஆலந்திருப்புரந்தாண்டி ஆறுஞ்சுனைதாண்டி
காடுஞ்செடிதாண்டிகரியமலைதான்தாண்டி
இல்லையென்றுசுத்தசெடியும்வனாந்திரமும்
கடுகிவருகிறார்கனத்தரிஷிபலரும்
வழுல்லையாண்டையெம்பெருமாளிதையறிந்தார்
அடியளந்தமாயவனார்ஆதிமூலமேதுசெய்தார்
நம்பினவகைக்கார்க்குநாரணனெழுந்து
காவலர்கள்பஞ்சவர்க்குகனமோசம்வந்ததென்று
அவர்பஞ்சபாண்டவர்க்குஅனர்த்தம்வருகுதென்று
செல்வதிரவியங்கள்சிரழிந்துபோகுதென்று
தோளிற்செபமாலைசோரவிடநாளாச்சே
பாவிகெடுத்தானேபஞ்சவரைசொல்லவென்று
என்றுபகையாளிஏற்பட்டான்பஞ்சவர்க்கு
இங்கேயிருந்தோமென்றால்இறந்திடுவர்பஞ்சவர்கள்
நம்பினேமென்றவனைநாமல்லேகாக்கவேணும்
என்றுஎழுந்தாரேயெம்பெருமாள்மாயவரும்
துவாரகாபுரிதாண்டிதுழாய்மவுலிதான்வாரார்
காடுசெடிதாண்டிகரியமலைதான்தாண்டி
வந்ததுருவாசருடன்சேர்ந்தாரேயெம்பெருமாள்
ஆலிங்கனம்பண்ணினார்ஆயர்பெருமாளும
இந்தவனத்துக்குயேதுகவையாய்ப்போறீர்
எங்கேநீர்போறீர்காண்என்றார்பெருமாளும்
மாரிஷிதுருவாசர்வாய்திறந்தேதுசொல்வார்
மாயன்பெருமாளேவந்தேனிவ்வனத்தே
பாரிவேட்டையாகவேபாரவனங்கள்வந்தேன்
வனசாரியாகவேவந்தேன்காணிவ்வனத்தே
அவ்வார்த்தைதான்கேட்டுஅந்தரிஷியேதுசொல்வார்
பஞ்சர்கள்தாமிருக்கும்பாரவனங்களிலே
அவரிருக்குமந்தஅடவியிலேபோய்சேர்ந்து
புண்ணியவானேவரையுமபோசனங்கேட்கவந்தேன்
என்றுசொல்லக்கேட்டுஎம்பெருமாளானவரும்
நாமும்வருகிறோம்ராசாக்களைப்பார்க்க
கூடவந்தாரேகோபாலசுவாமியார்

இருவருமாகவேயிருண்டவனந்தாண்டி
ஓங்கிவளர்ந்த தொரு மூங்கில்வனந்தாண்டி
செந்நாய்புலிகரடிசேரும்வனந்தாண்டி
பாதிரிமுல்லைபருத்தவனந்தாண்டி
ஒருநாரைகிருநாரைநவுயர்ந்தகொம்பிலேயிருக்கும்
கருநாரைக்கிரைதேடுங்கதலிவனந்தாண்டி
கடுகிவருகையிலேகரியமாலென்னசெய்தார்
பலாமரத்தைக்கண்டதுவும்பாரளந்தரேதுசொல்வார்
மெத்தப்பெரியவரேவேணதவஞ்செய்தவரே
இந்தப்பலாயிலைதானேதுக்குதவுமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமல்லோ அரியரிஷியேதுசொல்வார்
இந்தப்பலாயிலையினியபோசனங்களுண்டால்
பலாயிலையிற்போசனங்கள்பண்ணவர்க்கு இட்டாலே
அமரருக்கு அற்புதங்காண் ஆர்க்குங்கிடையாது
எல்லோர்க்குங்கிட்டாதுஸ்ரீராமாவென்றுசொன்னார்
உச்சிதங்கள்தான்கேட்டுஉவந்துநடக்கையிலே
அந்தவனங்கடந்து அடுத்தவனம்போகையிலே
காமதேனுப்பாலைகருங்கல் லுபாரையிலே
கறந்துயிருக்கிறதைக்கண்டார்பெருமாளும்
மாயன்பெருமாளும்வார்த்தையவர்க்கேதுரைப்பார்
மெத்தபெரியவரேவேணதவஞ்செய்தவரே
தூயதவத்திற்சிறந்த துருவாசமாமுனியே
காமதேனுவின்பாலும்காரியத்துக்காகுமோதான்
(இது)ஏதுக்குதவுங்காணென்றார்பெருமாளும்
அவ்வார்த்தைதான்கேட்டு அந்தமுனியேதுசொல்வார்
தேவலோகந்தன்னிலேதேவருக்குங்கிட்டாது
ஆர்க்குங்கிடையாது அமரருக்குங்கிட்டாது
(இது)எடுத்துபுசித்தாலேஈஸ்வரருக்கற்புதங்காண்
என்றுசொன்னவார்த்தைகளையெம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டுமவர்சுவாமிநடந்தாரே
அடுத்தவனந்தனிலே அவரிருவர்போகையிலே
தாமரைதடாகத்தைசாமிகண்டேதுசொல்வார்
அய்யாபெரியவரே அமரர்க்கரிதானவரே
இந்தஜலந்தானும்ஏதுக்குஆகுமென்றார்
துருவாசமாரிஷியுஞ்சொல்லுகிறார்பொட்டெனவே
தாமரைபொய்கையிலேஸ்நானங்கள்செய்தாலும்
தபங்கள்ஜெபங்கள்பண்ணிதாகத்துக்குண்டாலும்
சிவனேயவனுக்குஞ்செப்பமுடியாது
என்றுசொன்னவார்த்தையெம்பெருமாள்தான்கேட்டு
சந்தோஷப்பட்டுமப்போசாமிநடந்தாராம்
இருவருமாகவேஏகிவழிநடந்தாராம்

சூரியவனந்தனிலேசேர்ந்தாரிருவருமாய்
பரணசாலைமேலிருந்தபஞ்சவர்கள்கண்டுவிட்டார்
மாயன்பெருமாளும்மாமுனிபாணவரும்
வருகிறதென்றுபஞ்சமகாராசர்தானெழுந்து
நடுக்கிட்டுத்தான்பதைத்துச்சீக்கிரமாய்த்தானெழுந்து
எதிர்கொண்டேவந்துஇறங்கியேதெண்டனிட்டார்
சாஷ்டாங்கமாகவேசரணமென்றுதெண்டனிட்டார்
கைமுடிகியே சாட்டித்தனையெடுத்து
ஐந்துக்குமெத்தையதாய்ஆசனம்போட்டார்கள்
இட்டசிங்காசனத்திலிருவருமாய்
பச்சிலைமெத்தையிலேபதியக்கொலுவிருந்தார்
தக்கப் பசமுடையதருமர்கூறுவார்
துரியோதனன்செய்தசேதிதனைக்கேட்டீரோ
நாம்டாடிருந்தவென்னைராசமன்னன்தானழைத்து
விருந்தருந்தவாருமென்றுவிருந்தோலைதானனுப்பி
வருந்தியெனையழைத்துவஞ்சனைகள்பண்ணினானே
கொல்லநினைத்தானேகுருடன்மகன்சத்ராதி
வாரவழிதனிலேவசிட்டோதான்புதைத்தான்
அதுக்குப்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
வச்சாயிதண்ணீர்பந்தல்வழியில்வைத்தான்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆண்டவனேயுன்னருளால்
பொற்குழிவெட்டியேபொற்சிங்காதனங்களிட்டு
கொல்லநினைத்தானேகுடிகேடன்மாபாவி
அதுக்கும்பிழைத்தோமே ஆயருடபுண்ணியத்தால்
தீர்த்தமுநாட்டிநீராடிவாருமென்றான்
குளத்திலவிநாட்டிக்கொப்பெனவேபோங்களென்றான்
அதுக்குப்பிழைத்தோமே அரிராமர்புண்ணியத்தால்
தீர்த்தமுநாட்டிநீராடிவாருமென்றான்
குளத்திலவிநாட்டிக்கொப்பெனவேபோங்களென்றான்
அதுக்குப்பிழைத்தோமே அரிராமர்புண்ணியத்தால்
உண்ணுகிறசாதத்திலேநச்சாலைநஞ்சையிட்டான்
குடிக்கிறதண்ணீரில்கொலைக்காறன்நஞ்சையிட்டான்
கொல்லநினைத்தானேகுடிகேடன்சத்ராதி
அதுக்குப்பிழைத்தோமே ஆண்டவனேயுன்னருளால்
ஆசாரசபைதனிலே அம்பலத்தார்தங்கள்முன்னே
சொக்கட்டானம்போட்டான்காண்சோழிவிளையாடி
பகடசாலைபோட்டுபந்தயங்கள்பேசினான்
நாடுகளுஞ்சீமைகளுமராச்சியமும்பேசினான்
ஆபச்சமையேயழுதுனாக்கமுடிதான்பறித்தான்
பெருத்தவிலங்குபூட்டிப்பெருவிடங்கிலேயடைத்தான்

ஐவரையுங்கொன்றுதுதம்பண்ணிப்போட்டீரோ
கல்லாய்சபித்தீரோகடுகிவேவந்தீரோ
என்றுசொல்லிக்கேட்டானேஇயலரானராசதுரை
துருவாசமாமுனிக்குக்கோபமேபொறுக்கொள்ளாமல்
கோபமிகக்கொண்டுகெப்பனவேயேதுசொல்வார்
ஐவரையுங்கொல்லவென்றுஅனுப்பினமன்னவனே
ஐவர்போனுபசாரனைஆரொருவர்செய்ததில்லை
தேவர்கள்தானருந்தும்திவ்யமாபோசனங்கள்
போதப்படைத்தார்பொன்னடியைத்தான்வணங்கி
சரணமடைந்தார்கள்சந்தோஷமாகிவந்தே
ஐவரையுங்கொல்லவென்றனுப்பினையபாதகனே
உன்னுடையலக்ஷ்த்திலென்றும்விளங்காது
ஐவருடையாலேஅனர்த்தமாய்போகவென்று
சாபங்கொடுத்தாரேசமர்த்துள்ளமாமுனியும்
செப்பிநடந்தாரேதெய்வலோகந்தனிலே
துருவாசமாமுனியுந்தெய்வலோகம்போனபின்பு
அப்போதுரியோதிரன்அனேகவிசனமதாய்
எண்ணுதளனமெண்ணி இருந்தான்துரியோதிரன்
ஐவருக்கங்கேவேதுயரிருக்கும்போது
மாயன்பெருமானும்வார்த்தைகளேதுசொல்வார்
தென்னமுடிவேந்தன்துரியோதிரபெருமான்
தூயகேவலகிருக்குந்துருவாசமாமுனியை
அரவக்கொடியோனுமனுப்பினானும்மைக்கொல்ல
துரியோதிரன்சொற்படிக்குச்சினந்துருவாசமுனி
உம்மை கொல்லவனதாகக்கோபித்துவந்தாரே
அதுவறிந்துநானதறிக்கஇங்குவந்தேன்
அல்லாதேயாமானலஅநீதமாய்மாண்டிடுவீர்
என்றுரைக்கமாயவனுமனதுவைப்பார்தருமருமே
உமைநம்பியல்லோஉயிர்கொண்டுலாவுகிறோம
நீரேதுணையில்லால்வேறுதுணையுண்டோ
நம்பினபேர்களைரட்சிக்குந்தேவனல்லோ
அடியாரைக்காக்கின்றஆதிபரமபொருளே
ஏழைகளைக்காக்கின்றஎம்பெருமானாண்டவரோ
பன்னிரண்டுதன்வருஷம்பாரவனந்திரியுமட்டும்
ஏதொன்னைவருமோவெம்பெருமான்காணறியேன்
இன்னமென்னவஞ்சனையோஎம்பெருமான்காணரியேன்
வருமவினையாவுக்கும்மாயவரேதுணைவாரும்
அரக்குமாளிகையில்ஐவரைக்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்குஅட்சயத்துகில்கொடுத்தீர்
உன்மகிமையாரறிவார்உலகளந்தமாயவரே
சரணஞ்சரணமென்றுதான்பணிந்தார்பஞ்சவர்கள்

சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார் பஞ்சவர்கள்
மாயன்பெருமாளும் மனதுமிகக்களித்து
அவர்மேல்பட்சம் அதிகப்பிரியமுமாய்
சந்தோஷப்பட்டுசுவாமிதன்னுடமனங்குளிர்ந்தார்
மாயன்பெருமாளும் வார்த்தைதனைத்துசொல்வார்
இந்தவனந்தாண்டி இந்தவனம்போங்களென்றார்
மற்றொருவனத்திலேதான் முன்னேபோங்களென்றார்
அடுத்தவனந்தனிலே ஐவருமேபோய்வாசம்பண்ணோர்
தெற்குமேற்குகிழக்கு சேனதூரஞ்சென்றாலும்
வடக்குதிசையிலேதான் மன்னவரேபோகவேண்டாம்
ஏதுவினைவந்தாலும் என்னைநினைத்திடுங்கள்
என்றுமவர்சொல்லிஎம்பெருமான் தானேமறைந்தார்
வட்டமாங்கருடனேறிமாயவருமேபோய்நடந்தார்
காடுசெடிதாண்டிகிரியமலைதான் தாண்டி
அழகாம்துவாரகைக்கு ஆண்டவரும்போய்நடந்தார்

முதலாவது சூரியவனம் முற்றிற்று.

---

## உ-வது இராமரிஷிவனம்.

இரண்டாமவருஷம்பிறந்ததுபஞ்சவர்க்கு
அந்தவனந்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
ராமரிஷிவனத்தில்நடந்தார்கள்பஞ்சவர்கள்
கோவிலைவசதியாடுகூடைதலைமேலேவைத்தார்
கூடைதலைமேலேகுடிவாழ்க்கைகானகத்தில்
முன்னைமுசுட்டையும்முடன்விரிந்ததாதுவளை
பண்ணைகல்லையும்பரட்டைபுளிகறணை
தின்றுதிரிகிறார்கள்தேசாந்திரிபோலே
ராமரிஷிவனத்தில்நடந்தார்கள்பஞ்சவர்கள்
ஐந்தடுக்குபரணசாலை அவ்வனத்துண்டுபண்ணோர்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணோர்
பர்ணசாலைமேலாகப்பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்த வனத்திலேஐவர்வனவாசம்செய்தார்கள்
தபசில்பெரியவரும்தபிராணவருமே
பாணங்கள்பண்ணினாலே சாதங்கறியிடுவான
போஜனங்களிட்டுமல்லோபுஷ்பங்கள்தான் கொடுப்பான்
காவிகாஷாயம்பரமும்கைமணியுந்தாங்கொடுப்பான்
புலித்தோலுமாசனமும்பொருந்தவேதான் கொடுப்பான்
சன்னமடைந்துசாமிபோய்வாருமென்பான்
தாதர்பெரியவர்கள் தப்பெடுத்துவந்தாலும்
அரிராமாவென்றுசொல்லி அனந்தமபேர்வந்தாலும்

ராமாராமாவென்றசத்தமாராமரிசிகேட்டாலும
அரிகரியென்றசத்தம அந்தரிசிகேட்டாலும்
கோவிந்தாவென்றசத்தம்குருமுனிதான்கேட்டாலும
கோபித்துக்கண்சிவந்துகொட்டமெனவேதானெழுந்து
சீறிவரும்புலிபோல்சிவ்வெனவேதானெழுந்து
கையிற்றடியெடுத்துககுங்கியடிப்பானே
வாரியெடுத்துமவர்வல்லுயிரைக்கொள்ளைகொள்வான்
அப்படியாகவே ஆனேகநாளிருக்குமபோது
மாயன்பெருமாளுமவார்த்தையதுவறிந்து
தள்ளாடுங்கிழவனைப்போல்தானேவடிவெடுத்தார்
பாந்தமுகம்நிறைந்தபழுத்தமரமபோலே
தாதவடிவாகசாமிவருவாரர்ம
ராமரிசிகாணிருக்கும்நல்லவனந்தனிலே
அந்தரிசியிருக்கும ஆச்சிரமமுட்புகுந்து
ஹரிஓம் ஹரிஓமென்று அடிதகாராகதப்பதனை
சாரங்கபாணியென்றுசங்குகளைத்தானூதினார்
அந்தசத்தந்தான்கேட்டுஅரியரிசிதானெழுந்து
கோபித்துகண்சிவந்துகொப்பெனவேதடியெடுத்து
ஆனையினமேலேதான் ஆண்சிங்கம்பாய்ந்தாப்போல
தாதனொருவனையுந்தடியாலடிக்கலுற்றான்
மாறியடித்தானேமதம்பெரியராமரிசி
அந்த அடிபட்டுக்கொண்டுஅரிகரிராமாவென்றார்
மறுகாலொருதரமும்மாறினான்ராமரிசி
அவ்வடியுமபட்டுக்கொண்டு அரிகரிராமாவென்று
அவன் மாறியடித்தானேமாயனென்றறியாமல்
சுழட்டியடித்தானேசுவாமியென்றறியாமல்
அவ்வடியுப்பட்டவுடன் அரிராமர்கோபமாகி
கண்கள்சிவந்துமல்லோகாந்தாளமுமெழுப்பி
ஆகாயமாகவேவளர்ந்தாரேஆயரங்கே
விஸவரூபமாகவேமேகவண்ணர்தான்வளர்ந்தார்
கண்டானேராமரிசிகால்கைதடுமாறி
அடிதொடையுங்காலும் அதிரவிட்டவிடென்ன
மெத்தப்பயந்துவிழுந்தானடிபணிந்தான்
சுவாமிசரணமென்றுதாள்பணிந்தான்ராமரிசி
முக்காலுந்தெண்டனிட்டுமுடிவணங்கிபோற்றிசெயதான்
அப்போதுமாயவருமஅருளாளரேது சால்வார்
மாயன்பெருமாளும்வார்த்தைகளேதுசொல்வார்
போஜனங்கள்போடுறதுமபோதப்பணியுரதும்
மயேஸவராடியாருக்குவணங்குவதேயல்லாது
எந்தனடியாரை இகழ்ச்சியாய்பேசுறதும
மாறியடித்துமேவாயாத்தம்பண்ணுரதும்

ஆக்ஞைகள்பண்ணுவாதும் ஆகுமோ ராமரிஷி
ஆகிர்தகாரியங்கள் அனர்த்தங்கள்தேடிக்கொண்டீர்
அவ்வார்த்தைதன்கேட்டுமே இயலானராமரிஷி
மெத்தபயமாகி விஷ்ணுவைத்தான்பணிந்து
கைகட்டிவாய்புதைத்து கடுகியேயேது சொல்வான்
ஆதிசிவன்பாதம் அடியேனறிந்திருப்பேன்
உன்னுடையபாதம் ஒருக்காலும் நானறியேன்
தேடியுங்காணுதால் தேவரீருன்பாதம்
ஆண்டவனேயுமைக்காண அனேகநாள் தவமிருந்தேன்
கேடித்தவமிருந்துங் கோவிந்தனைக்கண்டதில்லை
ஆகையினுலேதான் ஆயர்வுமைகாண
உம்முடையவடியாரை உதாசினைப்பண்ணுறதும்
இந்தவிதமாகவே இருந்தேன்நெடுநாளாய்
என்வினையகன்றதின்று எம்பெருமானும்மாலே
(உன்)பாதமதைக்கண்டபோதே பாவங்கள்போக்கிவிட்டேன்
அஞ்சிபயந்தவனும் ஆசாரம்பண்ணினுன்
காயாம்புவண்ணருமே கரியமாலேது செய்வார்
ஆக்ஞைகள்செய்ததனால் அநேகபாவமுந்தனுக்கு
சாபம்பிடியுமென்றூர் சௌரிபெருமானும்
ஆயிரம்வருஷமட்டும் அரவமாய்ப்போகவென்றூர்
தாராழக்கன்மலைப்பாம்பாய்சாபமிட்டாரெம்பெருமான்
அப்போது ராமரிஷி ஆமனையேதுகேட்பார்
எம்பெருமானிச்சாபமெப்போதுதீருமென்றூர்
அப்போதுமாயவரும் அருளாளரேது சொல்வார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அடவியிலேதான்வருவார்
மன்னர்பஞ்சபாண்டவர்கள்மாயவனுந்தான் வருவார்
தருமர்தம்பிநால்வர்களைத் தானெடுத்து விழுங்கிடுவீர்
வெறிமதயானை வீமனருச்சுனரை
நகுலர்சகாதேவர்ராசாக்கள்நால்வரையும்
எடுத்துவிழுங்கியே இருக்கின்றவேளையிலே
அருச்சுனன்வில்லாலுன் அங்கம்பிளந்துவிடும்
அந்தசமயத்திலே அங்கேநான் வந்திருப்பேன்
நானும்வந்திருந்துமே நற்காட்சிதாரேனென்றூர்
அப்போது ராமரிஷி ஆயரிட்டசாபத்தால்
அரிராமர்சாபத்தால் அப்பாம்புமுண்டாச்சு
அனேகநாளப்பாம்பு அவ்வனத்திலேயிருக்கும்
அதுவரியார்பஞ்சவர்கள் அவ்வனத்திலேயிருந்தார்
இராமரிஷிவனத்தில் இராஜாக்கள் தானிருந்தார்
பர்ணசாலையுண்டுபண்ணி பஞ்சவர்களங்கிருந்தார்
காய்ப்பழமுங்கன்மூலங்களுண்டு
ஐவருமங்கேதான் ஆயித்திருக்கும்போது

தெற்குமேற்குக்கிழக்குந்தேடிகனிபறிப்பார்
வடக்குதிசைநோக்கிமன்னவர்கள்போவதில்லை
அவ்வனத்திலேயொருநாள் அடங்காதவீமனவன்
மெத்தவகங்காரமுடன் வீமனுமங்கேசுநினைவாய்
சடுகியெழுந்திருந்தான்கனிகள்பறிக்கவென்று
வடக்குதிசைதனிலேமாயவன்போகாதென்றா
காயுங்கனியுமங்கேகடுகியேகிட்டாதோ
வேண்டியமாட்டாள்வேதமுனிகளுண்டோ
அவ்விடத்தில்திசயங்களெல்லாமறிவோமென்று
சடுகியெழுந்திருந்தான்கட்டழகவீமனவன்
சல்லடங்கள்போட்டுமெல்லோதட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டிதாமரைப்பூச்சுங்குவிட்டு
கையில்கொதயெடுத்துகடுகியேதானடந்தான்
வடக்குதிசைநோக்கிவாரான்மதகரியன்
காயுங்கனியுமங்கேசகடுகபழுத்திருக்கும்
அவ்விடத்திலேகனியும்அனேகம்பழுத்திருக்கும்
அருநெல்லிசிறுநெல்லி அழகாந்தமர்த்தைகளும்
கொச்சித்தமர்த்தையுடன்குடகுபலாப்பழமும்
மாங்கனியுந்தேங்கனியும்வண்ணப்பலாப்பழமும்
மட்டில்லாபழங்களெல்லாம்வந்ததிற்சொரிந்திருக்கும்
அளவில்லாக்கனிகளெல்லாம்அவ்வனத்தில்தானிருக்கும்
கண்டானேவீமனவன்கண்கள்குளிர்ந்தான்
அங்கேகனிகள் அனேகம்பழுத்திருக்க
மெத்தக்கனிகளங்கேவெணதெல்லாந்தானிருக்க
உண்டுபிழைபார்க்களென்றல்லேஉலகளந்தார்
தின்றுபிழைப்பார்களென்றுதிருமாலும்
வடக்குதிசைபோகாதேயென்றேமாயவரும்
சாமிபெருமாளவர்சதினைக்கவேண்டாமே
என்றுமனதிலெண்ணிஏகிநடந்தானே
என்னதுமென்னளினான்இயலானவீமனவன்
அந்தவனத்தில்வுருகவுள்நுழைந்து
மரத்தின்மேலேறினான்மதவீமராசனவன்
இச்சிறுகனிபறித்துஉகந்துபுசித்தான்காண்
காயுங்கனிபறித்துகடுகவேதான்புசித்தான்
வாயாரதின்றுமேவயிராறதானபுசித்தான்
அண்ணனுக்குந்தம்பியர்க்கும் அனேககனிபறிக்க
அறுநெல்லிசிறுநெல்லி அழகாந்தமர்த்தையுடன்
சோலைபலாக்கனியும்தூய்யவிளாங்கனியும்
கிளையைவளைப்பானும்கிள்ளியொருபழம்பறிப்பான்
செடியைவளைப்பானும்சிவந்தபழம்பறிப்பான்
அங்கேகனிகள் அனேகம்பசிக்கையிலே

அடுத்தபுதரிலேதானரவமெழுந்திருந்து
சரிந்தவனத்திலேதான்சர்ப்பமெழுந்திருந்து
மதவீமராசனைவன்பாலைப்பாம்புகண்டதுகாண்
தாரமுக்கன்மலைப்பாம்புசந்தோஷமாகவேதான்
மனதுமிகக்குளிர்ந்துமதகரியானருகில்வந்து
வாயைத்திறந்துமங்கேமதவீமனையெடுத்து
எடுத்துவிழுங்கிற்றுஞ்சயலானவீமனைத்தான்
பாம்பென்றுபார்த்ததில்லைபாரமதவீமன்
சர்ப்பமென்றுபார்த்ததில்லைசமர்த்துள்ளவீமனவன்
காலகொண்டதூரமட்டுங்கடுகெனவேதானடந்தான்
விசைகொண்டதூரமட்டும்வீமனடந்தானே
வழியுந்தெரியாமல்வந்தவிடங்காணாமல்
பாதைதெரியாமல்பாம்பென்றறியாமல்
பெருங்குடல்மேல்சார்ந்துகொண்டானபெருபாகிகர்வீமன்
அடிக்குடல்மேல்சார்ந்துகொண்டான்அங்குமதவீமன்
பாமபென்றறிந்தானேபாரமுடிவேந்தன்
சர்ப்பமென்றறிந்தானேசமர்த்துள்ளவீமனவன்
என்னதுமெண்ணி இருந்துவிசாரமிட்டான்
அண்ணனைத்தப்பியனை அல்லவனைநான்பிரிந்து
கூடப்பிறந்தவனைக்கொற்றவனைநான்பிரிந்து
ஒக்கப்பிறந்தவனைஉடற்பிறப்பைநான்பிரிந்து
மாளும்விதியன்றோவந்தேனறியாமல்
ஆகையினாலேதான்ஆயர்போகாதேயென்றார்
அறியாமல்வந்திங்கேயகப்பட்டேனென்செய்வேன்
மாயன்சொற்கேளாமல்வந்துவிட்டேனிப்போது
அண்ணர்தருமராயர்அழுதுபுலம்புவரோ
தம்பிமாரைத்தேடியவர்தானேபுலம்புவரோ
அறியாமல்வந்தேனென்டவரோயென்னசெய்வேன்
ஆயரோகோவிந்தா ஆதிமூலம்வந்தருளும்
மாயரோகோவிந்தாமகாதேவர்காத்தருளும்
என்றுபுலம்பியிருந்தானேவீமனவன்
தக்கபுகழுடையதருமராவரென்னசெய்வார்
அருச்சுனன்கனிபறித்து அண்ணரண்டைவந்தபின்பு
வாய்திறந்துதருமராயர்மதிகலங்கியேதுசொல்வார்
வெற்றிமதயானைவீமன்கனிபறிக்க
மதவீமன்போயுமல்லோமன்றுநெடும்போதாச்சு
போனவிடத்திலேபுதுமையொன்றுநானறியேன்
மதவீமன்போனசெய்திவார்த்தையொன்றுதானறியேன்
அண்ணனைத்தேடியே அழைத்தோடிவாராயோ
ஓடியழைத்துமேகுருகொடியிலவாராயோ
கண்டு அழைத்துமேகடுகெனவேவாராயோ

சிந்தைதகலங்காமல்தேறுதலைசொல்லுமப்பா
மனதுகலங்காதேவார்த்தைகளைச்சொல்லுமப்பா
வனவாசம்தீர்ந்தவேளையைத்தீதபோனபின்பு
சேனைபரிவாரம்துரியோதனன்பாளயத்தை
சென்றுபட்டமாட்டிவைத்தசேனைகளைக்கொன்றழித்து
கர்ணன்சகுனியையுந்துண்டுதுண்டமாகவெட்டி
துரியோதனன்முதலாய்ச்சேர்ந்ததம்பிநூற்றுவரை
பற்றும்படைகளெல்லாம்மண்ணோடேசாய்த்துவெட்டி
அண்ணருக்குப்பட்டங்கட்டிஅரசாண்டிருங்களப்பா
தருமருக்குப்பட்டங்கட்டிதரணியையாண்டிருங்கள்
எப்போதும்போலேஇராச்சியத்தையாண்டிடுங்கள்
பெற்றாள்வயிறுதனில்இட்டேன்பெரிநெருப்பை
குந்தியம்மாள்தன்வயிற்றிற்கொடியதணல்வைத்தேனே
எழுத்துப்படியல்லால்எவரால்விலக்கவசம்
தலையிலெழுத்துந்தான்தவறாதுதம்பியரே
ஆரெழுதுங்கர்த்தனவன்அழித்தெழுதப்போறதில்லை
விதிவசத்தையாரும்வெல்லவேகூடாது
இனிப்பிழைப்போமென்றுநீரெண்ணாதேதம்பியரே
விட்டேவாராதேநாட்டிலும்தம்பியரே
போய்வாருமென்றேனபோதக்கடங்காவீமனவன்
அவ்வார்த்தைதான்கேட்டுஅர்ச்சுனன்துயரமுற்று
கண்ணீரைச்சொரவிட்டானேபற்குணனார்
பெத்தச்சவித்துமேசொரம்பெரிதாசி
அண்ணரேவெயன்வீமாஅடியேனொருவார்த்தை
பாம்பின்வயிற்றிலேநீர்பார்வேந்தாமாண்டதுவும்
அரவத்தின்வயிற்றிலேநீர்ஆணழகாமாண்டதுவும்
அண்ணன்தருமருடன்அடியேனொருவார்த்தை
உரைத்தேனேயாருக்கால்உள்ளம்பதறி
துள்ளிப்பதைத்துயிரைதுடிதுடித்துவிட்டிடுவார்
எப்படிக்குநானுரைப்பேனென்னுடையஅண்ணாவே
போகமனம்வருமோபோர்வேந்தாஅண்ணாவே
உன்னைவிட்டுநான்பிரிந்துஉயிருந்தரிப்பேனோ
இப்பெரியபாம்பதனைஇட்சணத்திற்கொன்றிடுவேன்
வயிற்றைக்கிழித்திடுவேன்வந்துவிடுமண்ணாவே
எனவுமெழுந்தானேஎழில்சேரருச்சுனனும்
வில்லைத்தூக்கிப்பூட்டிவில்லைக்குணந்தொனிசெய்து
அம்புறாத்தூணியிலேஅஸ்திரமெடுக்கையிலே
பாரமலைப்பாம்புபார்த்ததுஅர்ச்சுனனை
கனமலைப்பாம்புகண்டதுஅர்ச்சுனனை
அப்போமலைப்பாம்புஆவலுடன்ஓடிவந்தே
அருச்சுனனைதான்பார்த்துஅருகில்வந்துவாய்திறந்து

வாள்விஜயனைப்பார்த்துவாணையத்திறந்துவந்து
எடுத்துவிழுங்கிற்றுஇயமருச்சுனனை
பார்த்தனெனுமர்ச்சுனனைப்பாம்புவிழுங்கியது
எடுத்துவிழுங்கியதுவப்பாவிட்டுதானிருக்கும
அப்போதுவில்வளைத்த அருச்சுனனுமேதுசெய்தான்
அரவத்தின்தன்வயற்றில் அருச்சுனனுமேதுசெய்தான்
அண்ணாவே அண்ணாவே அடியேனும்வந்துவிட்டேன்
உந்தனுடனேகவந்துவிட்டேன் அண்ணாவே
நானுமிங்கேவந்துவிட்டேன் அண்ணாவே
அண்ணன்தர்மராயருக்குஆர்போயுரைப்பார்கள்
எழுத்துப்படியல்லோ இருவருக்குமொன்றாச்சு
என்னசெய்வேனென்செய்வேனென்றுபுலம்புகையில்
வெற்றியதயானைவீமனவனேதுசொல்வான்
வில்விஜயர்வந்தேகண்விதிவிதியிப்படியோ
என்றுஇருவருமிருந்துபுலம்புகிறார்
அநேகநெடும்பொழுது ஆனபிறகாக
தக்கபுகழுடையதருமராவரேதுசொல்வார்
தம்பிநகுலாநீ தாமமுடியானே
வெற்றிமதயானைவீமனைத்தான்தேடி
போனதோரருச்சுனனையின்னேரவரக்காணேனே
இன்னம்வரக்காணேனெதென்றும்யானறியேன்
ஆரோடசண்டைகள் அமரது செய்கிறாரோ
இக்காட்டில்ராட்சதாள்எத்தனையோகோடியுண்டு
எவரோடேசண்டைகள்யிடுகிறாரென்றறியேன்
காணவும்போரேனோபார்மன்னரிருவர்களை
பார்க்கவும்போரேனோபாராமன்னரிருவர்களை
தேடியழைத்துசீர்நகுலாவருவீரோ
பார்த்துஅழைத்துப்பருநகுலாவருவீரோ
என்றேஉரைத்துமவரெண்ணமிட்டுக்கொண்டிருந்தார்
இவ்வார்த்தைதான்கேட்டெழுந்தான்நகுலனுமே
பட்டுதட்டிஒட்டியாணம்பசும்பொன்னுற்சமுதாடு
நீண்டிடுங்கால்களுக்குநெரிஞ்சிப்பூசல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்குமாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குதுத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்கள்போட்டலவோதட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டித்தாமரைப்பூச்சுங்குவிட்டு
தன்னுயுதங்கடனைத்தானெடுத்துச்சீர்நகுலன்
காடுசெடிதாண்டிகரியமலைதான்தாண்டி
செங்காய்புலிகரடிசிரிம்லனைத்தாண்டி
காலடியைப்பார்த்துபல்லோகடிகியேதேடிவாரான்
அக்கானகத்திலே ஆராய்ந்துதேடினபின்

அன்றேவெயென்னிமா அருச்சுனனென் றழைத்தான்
கூவியழைத்தானே சோடைநகுலனுமே
அழைத்ததால்கேட்டது அருச்சனநதும்வீமனுக்கும
வெறநிமதயானே வீமனுமேமதிசொல்வான்
ஆறுலமுறுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
தம்பிநகுலா நீதாமமுடியானே
அண்ணனையும் என்னையும் அரவம் விழுங்கினது
மலைப்பாம்புக்கிறையானோம் மன்னவனே தம்பியரே
இட்டநீவாறு தேளட்டவில்லு மென்பிறப்பே
அண்ணனுக்குச்சொல்லு அரவமவிழுங்கினதாய்
அஸ்தினாபுரத்துக்கு அன்றேவ கூடிப்போய்
திரியோதிரனுடனே செய்திகள் சொன்னாலும்
அருச்சுனனை வீமனை அரவமவிழுங்கிற்றென்றால்
மெத்தமகிழ்ந்திடுவார் வித்தாரக்கொண்டவனும்
தருமாபுரமுள்ளதெல்லாம் தருமனையாளுமென்பான்
எப்போதும்போலும்நீங்கள்ராச்சியத்தையாண்டிருங்கள்
நாங்கள் இனிபிழைப்போமென்றுஎன்றுதே தம்பியரே
போங்கானும் நகுலா கீர்த்தியுள்ள கண்மணியே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வான் நகுலனுமே
அன்றுவே நீர் கேளுமரவத்தைக்கொல்லுகிறேன்
வெட்டியெறிகிறேன் வெளிப்படுங்களண்ணர்களே
உங்களைவிட்டெனக்குப்போகமனம் வருமோ
விட்டுப்பிரியவே வேறுமனம் வருமோ
அண்ணருடன்பிற்றில் அனலைச்சொரிவேனே
சிறுவன்போய்ச்சொன்னே செவிலனைவிட்டிடுவார்
மாளிகைப்பாரேம்திகெடுவந்துவிடும்
போகமனம்வருமோ புண்ணியரே எந்தனுக்கு
அவ்வார்த்தைதான் கேட்டு அருச்சுனனுமேதுசொல்வான்
நீர் தலையிலெழுதினதைதள்ளிவைக்கப்போறீரோ
நீர் எட்டியெழுதினதையெடுத்தெறியப்போறீரோ
ஒருவினைகள்வந்தாலே மடியேந்தவேண்டாமோ
ஆயனெழுத்தவ்வளவு ஆசையால்மாண்டுவிட்டோம்
இனிநாம்பிழைப்போமென்றெண்ணாதே தம்பியரே
மற்றும்பிழைப்போமென்று மன்னவரேயெண்ணாதே
போடாநகுலாவென்று புகன்றானருச்சுனனும்
செப்புமொழிகேட்டுசிராய்நகுலனுமே
இப்பாம்பைவெட்டியெறிகிறேனிப்போது
பாம்புதனைக்கொல்வேனென்று பட்டாவுருவிநின்றான்
மலைத்தது அப்பாம்புபாரமுடிமன்னவனை
கண்திறந்துபார்த்ததுகடுமலைப்பாம்பு
வாய்திறந்தவனைவாரிவிழுங்கினது

பாம்பின்வயிற்றிலே தான்பரிநகுலன் போய்விழுந்தான்
அண்ணாவேயென்னையும் அரவம் விழுங்கிற்றென்றான்
என்னையுங்கூட எடுத்துவிழுங்கிற்றென்றான்
உங்களுடனேகலந்தவனுஞ்சோகமேனென்றான்
ஏழ்வருக்குமொரெழுத்தாய்முடிந்ததேதென்ன செய்வோம்
அண்ணரைததப்பினை அரணைக்கைகைவிட்டோம்
என்றுபுலம்பியே இருக்கின்றவேளையிலே
வில்லாளிபார்த்தனுமே வீமனங்கேதுசொல்வான்
என்வார்த்தைகேளாமல் இங்குவந்தீர் தம்பியரே
வந்தவிடந்தனிலேவல்வினையைக்கண்டீரோ
என்றுமவர்கள்சொல்லிருந்துவிசாரமிட்டார்
இப்படியாகவேதானிருக்கின்றவேளையிலே
அனேகநாழிசென்றபின்பு அழகானதர்மலிங்கம்
மெத்தவிசாரப்பட்டுவெகுவாய்மனங்கலங்கி
சகாதேவனைப்பார்த்து தருமருரைக்கலுற்றார்
வீமன்கனிபறிக்கப்போய்வெகுநேரமாச்சுதப்பா
அழைத்தோடிவாருமென்று அர்ச்சுனரைப்போகவிட்டேன்
அருச்சுனன்தேடிப்போய் அனேகநெடும்பொழுதாச்சு
போனதோரறுச்சுனனுடபின்புவரக்காணேனே
நகுலனைப்போகவிட்டுராஜர்களைப்பாருமென்றேன்
காணநகுலனுமேகடுகவரக்காணேனே
செத்தார்பிழைத்தாரோசெய்திதெரியவில்லை
மாண்டாரோயானறியேன்மன்னவனே என்னசெய்வேன்
ஆரோடேசண்டை அமர்துசெய்கிறாரோ
எவரோடேசண்டைவடாகூடங்களுண்டோ
அவர்களைப்பார்த்துநீயழைத்தோடிவாராயோ
ஓடியழைத்துநீ ஒருநொடியில்வாராயோ
கண்டுஅழைத்துநீகடுகெனவேவாராயோ
அண்ணருரைகேட்டுகடுகெனவேதானெழுந்து
அப்போசகாதேவன் ஆயுதங்கள் வாங்கரே
சல்லடங்களிட்டுமேல்லோதட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டிதாமரைப்பூச்சுங்குவிட்டு
கச்சைவரிந்துகட்டிகருங்கச்சைதொங்கவிட்டு
ஆயுதந்தானெடுத்து அடவாய்நடக்கலுற்றான்
காலடியைத்தேடியேதான் நடந்துநடக்கலுற்றான்
காடுஞ்செடியுங்கனத்தமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமதிசவனந்தாண்டி
சிலலென்றகாடுஞ்செடியும்வனந்தாண்டி
தேடியேவாரானேதிசைநேருங்கானகத்தில்
எங்கெங்குந்தேடினானே இனியவிடமாராயந்தான்
கண்ணாலேகண்டதிலலேகாளைகளானவரை

பாருவிட்டுங்களில்லை பாரமுடிராசர்களை
தேடியேவந்துமவன் திகைத்தாற்போல் நின்றுவிட்டான்
அடியளந்தபாம்பரோ ஆதிமூலம் வந்தருளும்
அண்ணைமேவீமா அருச்சுனரோ சீர்நகுலா
என்று கூவியழைக்கானே கொற்றமன்னவீரியனும்
கூவியழைத்ததால் கேட்டதாமவருக்கும்
என்காண சகாதேவா எங்குவந்தீர் தம்பியரோ
அரவம்விழுங்கினது ஆனமுகாமூவரையும்
ஆராகிலுந்தம்பியரோ சேரவாரீரே
எட்டவில்லுந்தம்பியரோ கிட்டநீவாருமே
அரவம்விழுங்கினதாய் அண்ணர்க்குச்செப்பிசொல்லும்
நீ வழுதுபுலம்பாதே அண்ணனைக்கூட்டிப்போய்
அஸ்தினாபுரிக்கு அண்டைவுடனேபோய்சேரும்
வீமாருச்சுனனைமிக்கநகுலனையும்
அண்ணன்மார்மூவரையுமரவம்விழுங்கினதாய்
துரியோதனனுடனேசெய்திசொன்னாலே
சந்தோஷமாவானே சர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்திடுவான் விடநாகக்கொடியோனும்
அருமைப்பட்டணத்தையெல்லாம் சர்ப்பக்கொடியோன்கொடுப்பான்
சீமைதருவானே சிறந்ததுரைத்தனமும்
பூமிதருவானே பொல்லாச்சுயோதனனும்
அண்ணருக்கீருமே அவ்வரசைபாண்டிருங்கள்
போங்களுந்தம்பியரோ புகழ்பெரியராசாவே
என்றுமவருரைத்துயிருக்கின்றவேளையிலே
இவ்வார்த்தைதான்கேட்டு இளையசகாதேவன்
அண்ணருரைகேட்டு ஆனமுகமேறதுசொல்வான்
மன்னனுரைகேட்டு மறுவார்த்தையேதுசொல்வான்
போயுரையுமென்றுசொல்லி புண்ணியரேசொல்வார்கள்
புகழ்வேந்தரண்ணர்க்குப்போய் நானுரைத்தாக்கால்
சொன்னேனேயானாகில் சொர்க்கபதிசேர்ந்திடுவான்
இவ்வார்த்தைதான்கேட்டு இன்னமிருப்பாரோ
மூவரைபறிகொடுத்து முடிசூட்டியாளுவாரோ
அவர் செத்துமடிந்திடுவார் சிவலோகஞ்சேர்ந்திடுவார்
மாண்டுமடிந்திடுவார் வைகுந்தஞ்சேர்ந்திடுவார்
சென்றுயான்சொன்னாலே சீவன்விடுவாரே
ஒடித்தபூப்போலே துள்ளிவிழுவாரோ
அடித்தமயில்போலே அலறிவிழுவாரே
சாகத்துணிவாரே தர்மலிங்கமண்ணனும்
வேகத்துணிவாரே பொறுமையுள்ள தர்மலிங்கம்
எப்படிக்குபோயுரைப்பேன் என்னுடைய அண்ணர்களே
என்றுசகாதேவன் ஏங்கிப்புலம்பலுற்றான்

அடியற்றமரமபோலேயலறிபுரண்டழுவான்
மலையைப்பருவத்தேமாண்டுமடிந்தீரோ
செம்மலைப்பருவதமேசெத்துமடிந்தீரோ
உங்களைப்பறிகொடுத்துஒருத்தனாய்ப்போவேனோ
அண்ணர்களேயென்றுசொல்லிஅலறிப்புலம்பினான்
அழுதகுரல்கேட்டுஅம்மைவீரேதுசொல்வார்
தலையிலெழுதினதைத்தள்ளிவைக்கப்போறீரோ
ஏட்டிலெழுதினதையெடுத்தெரியப்போறீரோ
ஈசனெழுதியதில்எள்ளளவுங்குறையாது
சொல்லாமேத்ததம்பிநீசுருக்காயெழுந்திரென்றார்
பேசாதேதம்பிநீபோயபிழையுமவையகத்தில்
இவ்வார்த்தைதான்கேட்டுஏதுசொல்வான்சகாதேவன்
உங்களைப்பார்த்துநடக்கவேதான்பாவிமனமவருமோ
கண்டுநடக்கவேதான்காலைமனமவருமோ
பொறுத்துநடக்கவேதான்போகமனமவருமோ
இப்பாமடைக்கொன்றிடுவேன்இபலானருசர்களை
பாம்புகளைகொல்லுகிறேன்பாருமென்றுவாளெடுத்தான்
என்றுஉருவினான்இளையசகாதேவன்
கதிவுருவையிலேகண்டதுஅப்பாம்பு
கண்டதுமலைப்பாம்புகணிதநூற்கோமானை
வாயைத்திறந்துவாரிவிழுங்கினது
எடுத்துவிழுங்கினதுஇளையசகாதேவனையும்
அப்போசகாதேவன்ஆணழகுமன்னன்
என்னையும்விழுங்கினதுஎன்னுடையஅண்ணாவே
உங்களுடனேஒருவனும்வந்துவிட்டேன்
அவ்வார்த்தைதான்கேட்டுஆணழகரேதுசொல்வார்
என்வார்த்தைதள்ளியிருந்தீரோதம்பியரே
நால்வருக்குமோரெழுத்துகான்முகனெழுதிவைத்தான்
அண்ணர்தர்மராசாவைஅல்லவருங்கைவிட்டோம்
ஆட்சிதுரோபதையைஅரியவரைகைவிட்டோம்
என்றுபுலம்பியேதானிருந்தார்கள்நால்வருமே
அங்கேநெடுநேரமானபிறகாக
தக்கபுகழ்பெரியதருமரவரேதுசொல்வார்
அன்னமேசொர்ணமேஅமிர்தப்பசுங்கிளியே
தேனேமடமயிலேதித்திக்குந்தெள்ளமுதே
கன்னல்பிழியாமேகற்கண்டேசர்க்கரையே
சாந்துகழுத்தியரேசந்தனப்பூமேனியரே
கோர்வைகழுத்தியரேகுங்குமப்பூமேனியரே
குங்குமமொத்ததொருகொம்பேரிடையாளே
நெருப்பிற்பிறந்தபெண்ணேநீலவண்ணன்தங்கையரே
கைமேயாசம்வந்ததுவேகண்மணிகளைக்காணோம்

போகவழியறியேன்புதுமைகளென்றறியேன்
செத்தார்பிழைத்தாரோசேதியொன்றும்நானறியேன்
மாண்டார்பிழைத்தாரோமறுவார்த்தைநானறியேன்
கடுகியெழுந்திருங்கள்கானகத்தில்தேடுவோம்
என்றுபுலம்பியெழுந்தாரிருவருமாய்
காலடியைப்பார்த்துமேகடிகியேவாரார்கள்
தேடியேவாரார்கள்சீரானகானகத்தில்
அப்பாமதவீமா அழகாமருச்சுனரே
தாமமுடிநகுலாதம்பிசகாதேவனெனக்
கூவிப்புலம்புகையில்குரல்கேட்டுதம்பியற்கு
அண்ணன்குரல்கேட்டுஅருச்சுனனேதுசொல்வான்
என்காணுமண்ணாவேஇடையகில்லுமென்பிறப்பே
சோரநீவாராதேதூரகில்லுமென்பிறப்பே
அருகேநீவாராதேஅண்ணாவேதூரகில்லும்
பாம்புவிழுங்கினதுபாரவனந்தனிலே
இங்கேமலைப்பாம்புஎடுத்துவிழுங்கினது
நால்வருக்குமோரெழுத்துநான்முகனெழுதிவைத்தான்
அங்கஞ்சலியாதீர்அழுதுபுலம்பாதீர்
இனிபிழைக்கபோறோமென்றெண்ணாதேஅண்ணாவே
இவ்வார்த்தைதானைக்கேட்டுஇயலான தர்மலிங்கம்
துள்ளிப்புலம்புகிறார்சொரணைதெரியாமல்
வெற்றிமதயானைவீமாமதகரியே
ஏழுபிராயத்தில்இடும்பனைகொன்றாயே
பத்துப்பிராயத்திற்பகாசூரனைக்கொன்றாயே
அரக்குமாம்மாளிகையிலேவளாயும்நீஎடுத்தாய்
ஐவரையும்நீயெடுத்தாய்அந்தபலனடங்கி
பாபுக்கிரையாகஇருந்தீரோபார்வேந்தா
எழுபதுலட்சம்யானைஇழுக்கவொண்ணாகதையெடுத்து
ஆடாதுசெய்கின்றஆண்மையுள்ளவீமாநீ
மலைப்பாம்புகொல்லுதற்குமறந்தாயேவீமாநீ
சந்தனமிருபுயத்தைசாய்த்தாயேபூமியிலே
குங்குமமிருபுயத்தைகொள்ளென்றுசாய்த்தாயே
கல்லானதூணைகரையான்அரிக்குமோதான்
இரும்பானதூணும்யித்துவிழுமோதான்
நீமடியுங்காரியத்தைநிண்ணயத்தைநானறியேன்
ஆச்சாப்பருவதமேஅழிவில்லையென்றிருந்தேன்
ஆச்சாப்பருவதமும்அழியுமநாளாச்சுதே
கற்பகத்தூணுக்குகலக்கமில்லையென்றிருந்தேன்
கற்பகதூணுங்களாயுநாளாச்சுதே
என்னையலையவிட்டுஇப்பாம்புக்கிரையானாய்

நாலார்கடுந்திரளார் நூறுபேர் மன்னர்களை
கொல்லுவனென்று சொன்ன கொடியசபதமெல்லாம்
மறந்தாயோ தம்பி நீ பாம்புக்கிரையாக
எனைமறந்து நீயிறந்து விடஞாயமுண்டோ
என்றுபுலம்புகிறார் இயலான தருமருமே
மாரடித்து தோளடித்து மண்மேல் விழுந்தலறி
களைத்து விழுந்தாரே கட்டழகர் மூர்ச்சையானார்
அப்போது சௌபதையுமாரணங்குமேது செய்தாள்
பச்சைதழையொடித்துப் பார் தருமருக்கு வீசலுற்றாள்
காட்டுத்தழையொடித்துக் கடுகெனவே வீசலுற்றாள்
வீசினாள் தருமருக்கு விடாய்கள் மிகத்தெளிய
வீசக்களை தெளிந்து மேவந்தர் புலம்புகிறார்
அப்பாடா அப்பாடா ஆண்டழகா தம்பியரே
காளை அருச்சுனா கடுங்காளை சேவகனே
எடுக்காத வில்வளைத்து இளங்கொடியை மாலையிட்டாய்
நீர்பார்த்து மீனெய்தாய் சிற்றிலங்குமுடியை
அழகில் மிகுந்தவனோ அருச்சுனா தம்பியரே
நீபடியுங்காரியமுந் நின்னையரும் நானறியேன்
இடதுபுயமான இயலான அருச்சுனனே
என்னை மறந்தீரோ இப்பாம்புக்கிரையாக
உங்களை மடியவிட்டு ஒருநாழிதங்குவேனோ
கூடமடிந்திடுவேன் ராசர்களே உங்களுடன்
நானுமடிந்திடுவேன் ராசர்களே உங்களுடன்
அங்கமுறுகுதையா ஆவிதணலாகுதையா
நெஞ்சந்தனிலேயே நெருப்பாயெரியுதப்பா
ஈரலுக்குள்ளே இருந்து தணல்பத்துதடா
கும்பியினுள்ளேயல்லோ குடவிளக்காயெரியுதடா
மனது தரிக்கவில்லை வயிற்றெரிச்சல் தீரவில்லை
உங்களைப் பறிகொடுத்து உலகத்திலிருப்பேனோ
நானுமடிந்திடுவேன் ராசர்களே உங்களுடன்
உங்களைப் புசித்தபாம்பு எங்களைப் புசியாதோ
உன்னைப் புசித்தபாம்பு என்னைப் புசியாதோ
என்று மனந்தளர்ந்து எழுந்தாரே தர்மலிங்கம்
மலைப்பாம்பு தன்னருகே வந்து தலைகொடுத்தார்
இறங்கினார் தருமலிங்கமென்னை விழுங்குமென்றார்
தாருவுக்கமலைப்பாம்புதனிலிருந்துதங்க
எதிரிலே வந்தானும் இடைமிடந்து விடுத்து
பக்கத்தில் வந்தானும் பார்த்துமே பாய்விடுத்து
தக்கப்புகழுடைய தருமர் வருகைப்பார்
சமர்த்துள்ள மலைப்பாம்பே தம்பியரை விழுங்கிவிட்டாய்
என்னை விழுங்குமென்று எதிரே வந்தானும
எல்லாவலுஞ்செய்தேன் என்னை விலக்கிவிட்டா

ஏதாலும்பாவிநான்இருந்தாலுமாகாது
ஐயோவெனத்தருமர்அழுதுபுலம்புகிறார்
குய்யோமுறையோவென்றுகூவிப்புலம்புகிறார்
தோராவடிவழகிதுரோபதையுங்கூறுவாள்
ஆண்டவரேஐயாவேஅழகுள்ளதருமரேநீர்
மாயவனைநீருமிப்போமனதில்நினையுமிப்போ
எம்பெருமான்வந்தாலேஎல்லாந்தெரியுமென்றாள்
அப்போதுதருமருக்குஅந்தநினைவுவந்து
அவ்வார்த்தைதான்கேட்டுஅழகானதருமலிங்கம்
மாயனைத்தானினைந்துவருந்திபுலம்புகிறார்
மாயன்பெருமாளேவந்தருளவேண்டுமையா
ஆலிலைமேல்பள்ளிகொண்டஆதிமூலவாநமையா
பாற்கடலில்பள்ளிகொண்டபாரளந்தாரெம்பெருமாள்
மச்சவடிவுகொண்டமாயவரேநின்சரணம்
கூர்மவடிவுகொண்டகோபாலாநின்சரணம்
கல்லானஆகலிகையைநல்லபெண்ணாக்கிவைத்தாய்
எல்லையளந்தீரேஎதிரில்லையென்றீரே
அம்பலவாசலிலேஐவரையுங்காத்தீரே
மூலமென்றகுஞ்சரத்தைமுகில்வண்ணாகாத்தீரே
இராமராய்ப்பிறந்துஇராவணனைச்சங்கரித்தீர்
இலங்கையழித்தீரேஇராட்சதரைவென்றீரே
அரக்குமாமாளிகையில்ஐவரையுங்காத்தீரே
அபயமென்றதுரோபதைக்குஅட்சயதுகில்கொடுத்தீர்
உன்மகிமையாரறிவார்உம்பர்பிரான்தானறிவார்
தஞ்சமென்றபஞ்சவரைதற்காக்குந்தெய்வமல்லோ
செல்வதிரவியங்கள்சீரழிந்துபோறோமையா
கையில்செபமாலைகளுங்குலைந்துபோறோமையா
உள்ளங்கைநெல்லிபழம்உருக்குலைந்துபோறோமையா
இத்தனைநாள்காத்தீரேஇன்றல்லோமாண்டுவிட்டோம்
ஏழையழுதகண்ணீர்கூரியவாள்பத்தாது
நாளழுதகண்ணீருமாம்பங்கொண்டறுக்குநா
வாரீரோகிருஷ்ணாவென்மனத்துயரந்தீராயோ
(என்று)அபயமபயமென்றுவழுதுபுலம்புகிறார்
தோராவடிவழகிதுரோபதையாளேதுசொல்வாள்
அண்ணாமணிவண்ணாஅடியேனுக்குதவிசெய்யும்
மஞ்சளிழந்தேன்மணமிழந்தேன்பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்தேன்தலைவிரிக்கநாளாச்சே
ஐவரிட்டமங்கிலியமழியவில்லையென்றிருந்தேன்
மங்கிலியந்தானிழந்துமண்ணில்விழநாளாச்சே
ஆரக்கழுத்தியரைக்கழுத்தியானேனே
கோரைக்கழுத்திகுறைக்கழுத்தியானேனே

செல்வங்குன்றுநான்சிருமழிந்தேனே
ஐவருங்கைவிட்டாரே அலைந்தவிழநாளாச்சே
பங்கிலியப்பிச்சைநீதாரயோமன்னவரே
என்குறைதீராயோ இங்கேநீவாராயோ
அபயகுரலிட்டுமங்கே அழுதாள் துரோபதையும்
மார்கொண்டகண்ணீரைவழிதெரிந்தாள் மண்மேலே
அப்போதுமாயவரும் ஆதிமூலந்தானறிந்தார்
அழுதகுரல்கேட்டு ஆயன்பெருமாளும்
செல்வதிரவியங்கள்சீரழிந்துபோகுதே
பெட்டியிலேபூஷணம்பெருமைகுலையுதே
தோளிற்செபமாலைதோடவீழ்ந்துபோகுதே
மூங்கிலடர்ந்திருக்கும் முல்லைவனந்தாண்டி
சூரியன்தன்வனத்தைசுருக்காகததான் தாண்டி
இராமரிசிவன நதில் இராமருமவந்துவிட்டார்
மாயன்வருகிறதைவழியிலேதான்பார்த்து
தருமருந்துரோபதையுமதாமெதிரேவோடிவந்தார்
தருமருந்துரோபதையுஞ்சரணமிட்டார்மாயவனை
மூக்கால்வலமவந்துமுடிவணங்கிதெண்டனிட்டார்
நாற்கால்வலமவந்துநமஸ்கரித்துதெண்டனிட்டார்
அறுகால்வலம்வந்து அடிவணங்கிதெண்டனிட்டார்
சிங்காதனம்போட்டுஸ்ரீராமர்வீற்றிருக்க
ஆசனமும்போட்டார்கள் அரிராமர் தானிருக்க
இட்டசிங்காதனத்திலெமபெருமாள் வீற்றிருந்தார்
மாயன்பெருமாளுமவாய்திறந்தேதுசொல்வார்
அடியனந்தமாயவருமஆதிமூலமேது சொல்வார்
அழுதகுரலேது அழைக்கவந்தகாரணமேன்
வேண்டியழைத்தவிபரமென்னசொல்லுமென்றார்
வருந்தியெனையழைத்தவகையதனைச்சொல்லுமென்றார்
வீமரருச்சுனர்கள்வேந்தர்களெங்கேயென்றார்
தமபிமார்நால்வர்களுந்தார்வேந்தயெங்கேயென்றா
கையிற்செபமாலைகனங்குலைந்துபோகுதே
வருந்திபுழம்புகிறமனத்துயரந்தீர்க்கவென்று
அழுதுபுலம்புகிற துத்துரந்தீர்க்கவென்று
ஏழைகள்தன்துயரம்தீர்க்கவென்றுஎம்பெருமாள்
வாரார்பெருமாளும்வட்டமாங்கருடனேறி
துவாரகாபுரிதனைவிட்டுசுவாமியவர்வாராரே
காடுஞ்செடியுங்கரியமலைதான்தாண்டி
வேங்கையடர்ந்தவனமவெள்ளைகளாபூத்தவனம்
கோங்குபெருத்தவனமகொன்றைகளாபூத்தவனம்
பாதிரிமுல்லைபருத்தவனங்கடந்து
சில்லென்றகாடுஞ்செடியும் வனந்தாண்டி

அழுதுபுலம்புவதேன் ஆரணங்குதுரோபதையும்
ஏதுக்கழுதீர்காளெனக்கரியசொல்லுமென்றார்
தக்கபுகழுண்டயதருமரவரேது சொல்வார்
தம்பிமார்காலரையும்சர்ப்பம்விழுங்கிற்றென்றார்
என்னையழைத்தவகையெனக்கரியகூறுமென்றார்
தாராமூக்கன்மலைப்பாம்புதானுமவிங்கிற்றென்றார்
தம்பியரைப்பறிகொடுத்து தரிப்பேனோபூமியிலே
மலையைபரிகொடுத்துமண்மேலிருப்பேனோ
அங்கம்பொறுக்குமோ அரிராமாஎன்னசெய்வேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைதஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேனினியாரைத்தஞ்சமென்பேன்
ஆகையினாலேதான் ஆண்டவரேயுமையழைத்தே
என்றுரைக்கதான்கேட்டுஎமபெருமானேதுசொல்வார்
எழுத்துவிதிதன்னைஎவரால்விலக்கவசம்
தலையிலெழுதினதைத்தள்ளிவைக்கபோறேம்மோ
எட்டிலெழுதினதைஎடுத்தெரியப்போறேம்மோ
அன்றெழுதுங்கர்த்தாவல்லோ அழித்தெழுதப்போருரோ
இட்டபடியொழியஎள்ளளவுங்குறையாது
வரும்வினைவந்தாலோமடியேந்தவேண்டாமோ
ஆராலேயாகுமிது ஆயுசுக்குகர்த்தருண்டோ
எவராலேயாகுமிது இவர்களைத்தானெழுப்ப
என்றேலேதாகு இயலானதர்மலிங்கம்
இவ்வார்த்தைதான்கேட்டுஏதுசொல்வார்தருமலிங்கம்
என்றாலேயாகாதென்றேனேகழித்துவிட்டீர்
உம்மாலேயாகாதொன்றுண்டோவையகத்தில்
எல்லாமுமதுசெயல்என்றறிந்தேயாயவரே
தம்பிமார்தான்பிழைக்கச்சாமிநீகண்பாரு
உடப்பிறப்புதான்பிழைக்கஉம்பர்பிரான்கண்பாரும்
என்பிறப்புதான்பிழைக்கஎம்பெருமாள்காத்தருளும்
கண்பாரிவ்வேளையெனக்கண்ணனையுந்தெண்டனிட்டார்
புண்ணியமாய்போகுதெனபெருமானைதெண்டனிட்டார்
அப்போதுரோபதையாளாரணங்குஏதுசொல்வார்
முந்தானையேந்திநின்றாள் முருகுழாள் துரோபதையும்
மங்கிலியபிட்சையல்லோமாயாவெனக்கருளுஞ்
வடாதமங்கிலியம்வல்லவாவெனக்கருளும்
என்றுமவள்சொல்லிஇளங்கொடியாள் துரோபதையும
மாயனுடபாதத்தைவணங்கிதொழுதுநின்றாள்
இவ்வார்த்தைதான்கேட்டுஎம்பெருமாள்மனமிறங்கி
அங்குமொருகிருஷ்ணன் ஆயரிருக்கையிலே
சின்னஎலிபோலேசவாமிவடிவுகொண்டார்
மலைப்பாம்புதன்செவியில்மாயவரும்போய்நுழைந்தார்

அருச்சுனன் வில்நாணி தனை அறுத்தாரே மாயவரும்
வில்நாணி தானறவே வில்லிமிர்ந்து வாய்கிழிந்து
நகுலன் சகாதேவன் நல்விஜயன் வீமனுமே
ராமரிஷியுடனே நன்றாய்வெளிப்பட்டார்கள்
ஐவருமகாதேவர் னப்பாம்பில் வெளியானார்
மாயன்பெருமாளை வந்துநமஸ்கரித்தார்
தக்கபுகழுடைய தருமருக்குதெண்டனிட்டார்
தக்கபுகழுடைய தருமரவர்பார்த்து
வாழ்த்தி மனமகிழ்ந்து மன்னன்தர்மராயருமே
மனதுகுளிர்ந்தாரே மகாராசர் கர்மலிங்கம்
துரோபதைநாயகியுஞ்சிந்தைமிகக்குளிர்ந்தாள்
மலர்ந்தசெந்தாமரைபோல்மனதுமிகக்குளிர்ந்தார்
அலர்ந்தசெந்தாமரைபோல் அகமிகவேகுளிர்ந்தார்
ராமரிஷிபார்க்குநற்காட்சிதந்தாராம
மாயன்பெருமானுமவார்த்தைகளங்கேதுசொல்வார்
இந்தவனந்தாண்டி இனியவனம்போங்களென்றார்
அப்போது தர்மலிங்கம ஆயரைபார்த்துரைப்பார்
இந்தரிஷியாருமிங்குவந்தசன்மமென்ன
வந்தசன்மந்தனையுமவாய்திறந்துசொலலுமென்றார்
அப்பொழுதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
இந்தரிசிகாரியததை இயம்புவேன்நீர்கேளும்
மாயாண்டிதன்னடியார்வந்தால்வணங்குவார்காண்
எந்தனடியார்வந்தால் இகழ்ச்சிகள்பண்ணுறது
எடாகோடங்கள்பண்ணி எட்டியடிக்கிறது
இப்படியாகவே இருந்தார்வெகுகாலம
அப்போதுநானொருநாளங்கேவடிவெடுத்தேன்
தாதவடிவெடுத்துதப்புகொட்டி பிச்சையென்றேன்
அரிகரிராமாவென்று ஐயாவேபிட்சையென்றேன்
அப்போதுராமரிசி அவசரமாயோடிவந்து
என்னையடித்தாரே இயலானராமரிசி
அடிபட்டுகொண்டந்தாரு ஆக்ருஷமானதினால்
(நான்)பட்டஅடியாலே இட்டேன்பெருஞ்சாபம்
அப்போதுராமரிசிஆயரேஎன்றழுது
வல்லாளராமரிசிவாய்திறந்தேதுசொல்வார்
என்சாபமெப்போதுதொலையுமையாசுவாமியென்றான்
ஐவர்பஞ்சபாண்டவர்களாரணியம்வந்தாக்கால்
நாலுபேரையெடுத்துநன்றாய்விழுங்கிடுவாய்
அப்போதுஉன்சாபம அடைவுடனேதீர்த்திடுவாய்
என்றுமவர்க்குரைத்துஎன்பதிக்குபோய்நடந்தேன்
அப்போதிட்டசாபமது இப்போதுலைந்ததுகாண்
(நீங்க)ளிந்தவனத்தைவிட்டுஇனியவனம்போங்களென்றார்

அப்போதுஎம்பெருமாள் அரிராமர்தானெழுந்தார்
ராமரிஷிஐவர்களும்நங்கைதுரோபதையும
எமபெருமாயவற்குஎல்லோருந்தெண்டமிட்டார்
பஞ்சவர்களைவரையும்பாஞ்சாலிதன்னையுமே
மாயன்பெருமாளுமமனங்குளிரவாழ்த்தியபின்
எந்தவனங்களிலேஇடராதுவந்தாலும
இடராதுவந்தாலேஎன்னைநினையுங்கள்
என்றுமவருரைத்துஎமபெருமாள்போகலுற்றார்
வட்டமாங்கருடனேறிமாயவருமபோகலுற்றார
காடுஞ்செடிதாண்டிகரியமலைதான்தாண்டி
ஆறுஞ்சுனையுமதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம வெள்ளைகளாப்பூத்தவனம
கோங்குபெருத்தவனமகொன்றைகளாப்பூத்தவனம
வனமாய்வனந்தாண்டிவந்துவிட்டார்மாயவருமம
துளபமணிமார்பன்துவாரகைபோய்ச்சேர்ந்தார்
இப்படியாகவேஇவரிருக்குமவேளையிலே
மாயவனார்போனபின்புமகாராசர்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாண்டவருமஆரணங்குதுரோபதையும
மன்னர்பஞ்சபாண்டவருமயிலனையாள்துரோபதையும
அந்தவனத்திலனேகநாள்சென்றபின்பு
இப்படியாகயிவரிருக்குமவேளையிலே
மூன்றும்வருஷமிறந்தபஞ்சவர்க்கு

இரண்டாவது இராமரிஷிவனம

முற்றிற்று.

௩-வது முருக்கமகாரிஷிவனம்.

அவ்வனத்தைவிட்டுஅப்பாலேபோகலுற்றார்
கூடைதலைமேலேகுடிவாழ்க்கைகானகத்தே
கோர்வைத்தசிமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசிமாடுவனமாய்நடித்தனமாய்
முருக்கமகாரிஷிவனத்திலேமுடிகிவந்தார்பஞ்சவர்கள்
அந்தவனத்திலேதான்அல்லோருமவந்தார்கள்
ஒருடிக்குபர்ணசாலைஉண்டுபண்ணார்பஞ்சவர்கள்
மூன்றடிக்குபர்ணசாலைமுடிமன்னர்நன்றுபண்ணார்
ஆறடிக்குபர்ணசாலைஅழகருண்டுபண்ணார்
ஏழடிக்குபர்ணசாலைஎழிலாகவுண்டுபண்ணார்
பர்ணசாலைமேலேயல்லோபஞ்சவர்கள்வீற்றிருந்தார்
இப்படியாகயிவரிருக்கும்வேளையிலே
தென்னமுடிவேந்தன்துரியோதனன்துசொல்வான்
சபைதன்னிறைந்திருக்குஞ்சதப்பக்கொடியோனும

ஆர்காணுமராசர்களே அழகானமன்னர்களே
முத்துக்கிரீடமமுடிசூடுமன்னர்களே
வச்சிரக்கிரீடந்தரித்ததொருமன்னர்களே
மாணிக்ககிரீடந்தரித்ததொருமந்திரிகளே
அத்தண்டவேரையுமேஅனைவரையுங்தான்பார்த்து
மாநாகங்கொண்டதொருமகாராசனேதுரைப்பான்
ஐவர்வனவாசமபோய் அனேகநெடுநாளாச்சே
மூன்றுமவருஷமதுமொழியலாமபஞ்சவர்க்கு
அவர் எந்தவனத்திலேஇருக்கிறுரென்றறியேன்
செத்தார்பிழைத்தாரோசேதிதெரியவில்லே
மாண்டார்பிழைத்தாரோமறுவார்த்தைதெரியவில்லே
ஆரடா தூதுவரோ அறுகிருக்குமல்லர்களே
பாரப்புலிபோலேபஞ்சவர்களேவருமே
வீரப்புலிபோலேவேந்தர்களேவருமே
எந்தவனத்திலிருக்கிருரென்றறிந்து
ஐவருமைப்பாராதேஅறிந்தோடிவாருமென்றான்
காவலர்களும்மையவர்காணுதேவாருமென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டுஎழுந்திருந்தார்தூதுவர்கள்
ஒற்றுளொருவனவனோடிநான்கானகத்தே
காடுஞ்செடியுங்கரியமலேகான்தாண்டி
ஆறுஞ்சுனேயுமல்லோ அதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனமவெண்களாப்பூத்தவனம
கோங்குபெருத்தவனமகொன்றைகளாப்பூத்தவனம
வனமாய்வனந்தாண்டிவாரார்கள் தூதுவர்கள்
சூரியன்தன்வனத்தேசுருக்காய்நடந்துவாரார்
ராமரிசிவனத்தேநடந்தார்நலமாக
முருக்கமகாரிசிவனத்தேமுடிமன்னர்போய்நுழைந்தார்
அந்தவனத்திலேஐவரையுங்கண்டார்கள்
பர்ணசாலேமேலாசப்பஞ்சவரைக்கண்டார்கள்
அவருதரியாமல்ஆணழகர்திருமபிவந்தார்
காடுஞ்செடியுங்கரியமலேதாண்டிவந்தார்
அஸ்திணபுரந்தேடிஆணழகர்திருமபிவந்தார்
தென்னமுடிவேந்தன்திரியோதிரன்முன்னேவந்தார்
ஆண்டவரேஐயாவே அடியேன்சரணமென்றார்
தென்னமுடிவேந்தன் திரியோதனனேதுசொல்வான்
போனீரோ தூதுவரோ புதுமையென்னசொல்லுமென்றார்
காளிபேரண்டனவன்கடிகியேயேதுசொல்வான்
முருக்கமகாரிசிவனத்தேமுடிமன்னரைக்கண்டுவந்தோம
பர்ணசாலேமேலேயல்லோபஞ்சவரைக்கண்டோமையா
அவ்வார்த்தைகேட்டானே அரவக்கொடியோனும
சிந்தைகலங்கியவன்திடுக்கிட்டுமெய்மறந்து

சீமைகளும்பூமிகளும்செல்வமும்நான்தருவேன்
எல்லாண்மைக்காரருண்டோமந்திரியெழுந்திருங்கள்
போரதுரைகளுண்டோபுண்ணியசேனைகளே
பிடியுங்கள்தாம்பூலம்போர்பெரியராசர்களே
என்றுசொல்லத்தான்கேட்டுஇயலானராசாக்கள்
ஆனைமேவோரும்பேசாமலஞ்சிப்பயந்திருந்தார்
சிந்துதேசாதிபதிதிரன்மகன்சயிந்தவனும்
சொல்லுவான்வாய்திரந்துதுரைகளிருக்க
மைதுனரேநீர்கேளும்மகாராசபூபதியே
தோருவடிவழகிதுரோபதைநாயகியை
பத்துநாள்குள்ளாகப்பைங்கிளியைகொண்டுவாறேன்
எட்டுநாட்குள்ளாகஇளங்கொடியைகொணடுவாறேன்
ஐவரறியாமல்ஆரணங்கைகொண்டுவாறேன்
மன்னரறியாமல்மயிலணையைக்கொண்டுவாறேன்
தாம்பூலந்தான்பிடித்தானதாமமுடியானும்
அந்தமொழிதான்கேட்டுஅரவக்கொடியோனும்
சந்தோஷப்பட்டானேசர்ப்பக்கொடியோனும்
மெத்தமகிழ்ந்தானேவேந்தன்துரியோதனனும்
உள்ளங்குளிர்ந்துசிலிர்த்துடம்பெங்கும்பூரித்தான்
அள்ளியேதாம்பூலம்ஆணழகன்கைக்கொடுத்தான்
போட்டிருந்தஆபரணம்பொட்டெனவேதான்கொடுத்தான்
இட்டிருந்தபூஷணங்களிஷ்டமுடன்தான்கொடுத்தான்
பொன்னிழைத்தபட்டாடைபோர்த்தானேமேலாக
போய்வாருமென்றுசொல்லிபுகழ்வேந்தன்தானுரைத்தான்
வெகுமானம்பெற்றுமல்லோவிடைபெற்றுமன்னவனும்
பயணம்பயணமென்றுபயணபேரியடியுமென்றான்
ஆனைசேனைபரிவாரம்அடங்கலும்பயணமென்றான்
ஆனையின்மேல்சண்டாவும்அழகுநிசான்பிடியுமென்றார்
ஆனையின்மேல்பேரிகையடியுமென்றான்ஜெயமுடன்
குதிரையின்மேலடங்காவும்கொடிமுரசுசீலைகளும்
பாஞ்சசன்யம்தேவதத்தம்பலவாத்தியமுழங்க
சச்சரிகைவீராணம்தாக்கிமுரசறைய
அக்ரோணிசேனைஅடங்கலும்பயணமென்றான்
அமரதரும்சமரதரும்அர்த்தரதத்தானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும்காஷ்மீரக்கன்னடரும்
யீழத்துவங்கணரும்இளநாட்டுச்சோனகரும்
சட்டைசழட்டாதசாலவாரணவரும்
போட்டசட்டைவாங்காதபொர்க்கிலியமன்னவரும்
இட்டசட்டைவாங்காதஎழிலாணமன்னவரும்
குப்பாசமவாங்காதகுச்சிலியர்மன்னவரும்
ஆனையரசரிமைஅளவற்றவன்னியரும்

வெள்ளித்தடிக்காரர்வேணலட்சங்கோடியுண்டு
மகுடமுடிதரித்தமன்னவர்களானவரும்
பட்டணத்துராசர்களும்பார்மகுடவர்த்தனரும்
அத்தனைபெயருடனே ஆணழகன்பயணமானான்
நீண்டிடுங்கால்களுக்குநெருஞ்சிப்பூசல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குதுத்திப்பூசல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்குகுறிஞ்சிப்பூசல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்குமாதளம்பூசல்லடமாம
சல்லடங்கள்தான்போட்டுதட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டிதாமரைப்பூசுங்குவிட்டு
பட்டுதட்டிகட்டியல்லோபாம்கெடுத்துதான்சொருகி
முத்தினுரும்மாலைமுகத்தழகாய்கட்டினனே
இட்டான்திருநாமம்எரிகின்றசூரியன்போல்
பொன்னிழைத்ததுப்பட்டாவைப்பார்த்தானேமேலாக
அம்புவில்லுங்கைபிடித்து ஆணழகன்வெளியானான்
தேரையலங்கரித்துதேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேரைச்சுற்றிதெண்டனிட்டுசிவ்வென்றுஏறினன்
ஏறினபோதேஎடுத்தார்நெடுங்குடையை
பக்கத்தில்வெண்சாமரைபட்டுக்குடைகவிய
இருபக்கம்வெண்சாமரைஇரத்தினக்குடைகவிய
முத்துக்குடைகவியமுடிமன்னர்தான்சூழ
மேளதாளம்முழங்கவேந்தர்களுமபயணமிட்டார்
வாரான்சயிந்தவனுமமச்சுரதமகுலுங்க
தெற்குத்தெருதாண்டிதேரோடும்வீதிவிட்டு
ஆயிரந்தெருதாண்டி அங்காடிதான்தாண்டி
கடையுங்கடைதெருவுமகருமாரவீதிவிட்டு
பட்டணத்தெருதாண்டிபார்மன்னன்வாரானே
செந்தூளெழும்புகுதுதெருவெல்லாங்கப்புகுது
கருந்தூளெழும்புகுதுகதிரோனைக்கப்புகுது
வாரான்சயிந்தவனுமமச்சுரதங்குலுங்க
அப்போசயிந்தவனும ஆலோசனைபண்ணி
துரோபதையைகொண்டுவறத்துரித்தமுடன்போறோமே
போரவிடத்தினிலேபுதுமைகளைநாமறியோம
வழியற்சகுனங்கள்மனதிலகுறிப்போமென்று
தரும்தேவதையேநீசாட்சிசொல்லவேண்டுமென்றார்
அப்போசகுனங்கள் ஆகுதுமன்னனுககு
பொல்லாச்சகுனங்கள்பொருந்துதுமன்னனுக்கு
வாயசமஇடமாச்சுவலியனும்வலமாச்சு
கீரிடைவலமாச்சுகள்ளரெதிர்பட்டார்கள்
சாரைகுறுக்காச்சுசயிந்தவன்மேற்பல்லிசொல்லும
குத்துப்பிடியுமென்றுகோட்டானுமஓலமிடும

வட்டமணைபோட்டுமெத்தைதடுக்குதான்போட்டாள்
இருமிருமென்றுசொல்லிளங்கொடியாள்வருந்திடவே
அப்போசயிந்தவனும்ஆனைமுகன்தாளைதொழுது
வட்டமணைமேலேவந்திருந்தான்சயிந்தவனும்
தோரவடிவழகிதுரோபதையாளேதுசொல்வாள்
இந்தவனத்திலேஏதுக்காய்வந்தீர்கள்
வனசாரிவந்தீரோமகாதவசாய்வந்தீரோ
அண்ணாவெநீவந்தஅதிசயத்தைசொல்லுமென்றாள்
மாலைமுடியோனும்வாய்திறந்தேதுசொல்வான்
ஐவருட்பேருமாகஆரணியம்வந்தீர்கள்
வனவாசம்வந்தீரொன்றுமண்டலத்திற்போராச்சு
பார்க்கும்படியாகப்பைங்கிளியேவந்தேனே
உங்களுடைமையையும்உலகத்தைவிட்டுவிட்டு
வனவாசம்வந்ததொருவகையென்னதங்கையரே
இங்கேபரதேசம்ஏதுவந்தீர்-தங்கையரே
ஒன்றுமெரளியாமல்உரையுங்காண்தங்கையரே
அப்போதுரோபதையாளாரணங்குதான்கேட்டு
தோராவடிவழகிதுரோபதையாளேதுசொல்வாள்
அண்ணேநாங்கள்வந்தஅதிசயத்தைநீகேளும்
பரதேசமவந்தோமெங்கள்பரிதாபங்கேளுமென்றாள்
தருமாபுரத்தையல்லோதாரணியையாண்டிருந்தோம்
ஐவரையுங்கொல்லவென்றுஅரசனதுரியோதனனும்
பஞ்சவரைக்கொல்லவென்றுபாவிதுரியோதனனும்
விருந்தருந்துமென்றுசொல்லிவேந்தனைக்கொல்லவென
போன்குமாரனென்றுபூநூற்கலியாணமென்று
பூநூற்கலியாணம்பொருந்தத்தப்பிபோகுதென்று
உடனேவாத்தருமருக்குஓலையெழுதிவிட்டான்
மெய்யானும்ஓலையென்றுவந்தார்மனதிலெண்ணி
ஐவர்பஞ்சபாண்டவர்கள்அஸ்தினபுரம்நாடி
வாரவழிதனிலேமன்னவரைக்கொல்லவென்று
வசனாவிதண்ணீர்பந்தல்மன்னவர்க்குப்போடுமென்றான்
தப்பிப்பிழைத்தார்கள்சுவாமியுடபுண்ணியத்தால்
நடக்கும்வழிதனிலேநச்சுமுள்ளைநாட்டினான்
ஊசிமுருகுகாச்சிஒரு டிநாட்டினான்
கூரம்புகத்திகளுங்குறுகவேபுதைத்துவைத்தான்
கொடிமுள்ளுகத்திகளுமகுறுக்கேபுதைத்துவைத்தான்
தண்ணீர்குடித்துமேசாவார்களென்றுசொல்லி
பாரவிதன்னையேபருவதமபோல்நாட்டிவைத்தான்
[illegible]லவிலைத்தானேகுருகுடன்மகன்சத்ராதி
அதுக்கும்பிழைகதார்கள்ஐவர்பஞ்சபாண்டவர்கள்
தப்பிப்பிழைத்தார்கள்சுவாமியுடபுண்ணியத்தால்

அண்ணர்களையெழுப்பி அழைத்துநாம்போவோமென்றார்
குளத்திலிறங்கினனே கொப்பெனவே நகுலனவன்
மாயர்பெருமாளும் மலராமர்தான்பார்த்து
அந்தரமாகின்று ஆயாவரேதுசொல்வார்
ஆரடாதம்பியரே அள்ளிசலமுண்கிறவன்
சாலையுஞ்சோலையும் தாமரைப்பொய்கைகளும்
இதனையுமென்னுதடா இறங்கிஜலமுண்ணுதே
தண்ணீர்குடியாதே தாமரைப்பொய்கையிலே
குளத்தைவிட்டிப்புறம்வா கொற்றவாவென்றுசொன்னார்
இவ்வார்த்தைதான்கேட்டுஏதுசொல்வான்நகுலனவன்
ஆரோதெரியாது அந்தரமாய்ப்பேசுகிறீர்
எவரோதெரியாது எங்கையோபேசுகிறீர்
வார்த்தைகள்கேட்குது வயணந்தெரியவில்லை
சொன்னசொல்கேட்குது சொரூபந்தெரியவில்லை
அந்தரதேவதையோ சந்திரசூரியரோ
ஆகாயதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
ஆரோதெரியவில்லை அருகில்வந்துபேசுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமாளும்
எங்கள்குலத்திலேநீ இறங்கிஜலமுண்ணவென்றால்
வையகத்திலதிசயமும் வருத்தமானபாரங்களும்
வாடாப்பயிரின் வானமுறைத்தாயானால்
இறங்கிசலமுண்ணும் இல்லையென்றால்போய்நடவும்
சொன்னாலேநீர்குடியும் சொல்லாமற்போனாலே
தண்ணீர்குடியாதே தாமமுடியானே
குளத்திலடிவையாதே கொற்றம்பேர்மன்னவனே
என்றதோர்சொற்கேட்டு ஏதுசொல்வான்சீர்நகுலன்
நீகேட்டவார்த்தைக்கு நான்கேட்குந்தன்மையென்ன
நீதியல்லநீர்தூர நின்றுதான்பேசுறது
என்னெதிரில்வந்தாலே இருதுண்டாய்போட்டிடுவேன்
என்றுசிலவார்த்தை சின்னமவன்பேசினனே
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயர்பெருமாளும்
மறுவார்த்தைசொல்லாமல் மாயவருந்தானிருந்தார்
அப்போநகுலனுமே ஆனந்தமாகவேதான்
குளத்திலிறங்கியே கொப்பெனவேநகுலனவன்
தாகந்தெளியவே தண்ணீருந்தான்புசித்தான்
தாகந்தெளிந்தானே தருமர்தம்பியானவனும்
தண்ணீர்புசித்தவுடன் தாறுமாறாய்விழுந்து
தலையைச்சுழட்டுது தார்வேந்தராஜனுக்கு
உடம்புபறக்குதே உத்தண்டவீரனுக்கு
சாணாறுதுமென்னுகிறான் இயலானநகுலனுமே
ஆரோதெரியாது அந்தரமாய்ச்சொன்னார்கள்

அவ்வார்த்தைகேளாமல் அள்ளியேதீர்த்தமுண்டேன்
சொன்னசொற்கேளாமல்சுருக்காகதீர்த்தமுண்டேன்
கண்ணுருக்தெரியவில்லைகாரணமுந்தோணவில்லை
நிலமுந்தெரியவில்லைதிண்ணைவையறக்குதே
அறியாதநான்புசித்தேனென்றல்லோ ஆனைமுகன்
அண்ணர்க்குந்தம்பியர்க்குமாரணந்ததுபோடதைக்கும்
அந்தவனத்தாண்டி ஆர்தான்போய்சொல்வார்கள்
இந்தவிசேஷமதைஎவர்போயுரைப்பார்கள்
தருமரிதையறிந்தால்சற்றும்பொருக்காரோ
அண்ணுவுந்தம்பியருமழுதுபுலம்புவார்கள
இங்கேஉயிர்வாங்கிப்பிவர்களிருக்கையிலே
அங்கேநகுலனுமே அண்ணைவண்டையாண்டானை
மாண்டானைசிநகுலன்வசநாயிதீனையுன்டு
செத்தான்நகுலனுமேசீராணகானகத்தில்
இப்படியாகவேயிவரிருக்கும்வேளையிலே

வீமனையு மர்ச்சுனனையு மழைக்கபோன நகுலனையுங்
காணுமென்று தருமர்புலம்புகிறது

அப்போதுமன்னவருமாணழகனேதுசொல்வார்
சகாதேவனையழைத்துதருமாவரோதுசொல்வார்
அப்போசகாதேவர் அதிசயத்தைநீர்கேளும்
மான்பிடிக்கபோனதொருமதவீமராசனையும்
வீமனைக்காணவென்றுவில்விசயராசாவும்
தேடியேபோனானேதேர்விசயனர்ச்சுனனும்
நல்விசயனைத்தேடநகுலனும்போய்நடந்தான்
மூவர்களும்போனாரோமுடிவேந்தராசாக்கள்
ஒருவரையுங்காணேனேஉத்தரவுநானறிய
மான்பிடிக்கபோனவர்கள்வந்தின்னஞ்சேரவில்லை
தேடியேபோனவர்கள்திரும்பிவந்துசேரவில்லை
தம்பிசகாதேவாதாமமுடியானே
தேடியேபோராயோசேதிவந்துசொல்லாயோ
செத்தார்பிழைத்தாரோசேதிதெரியவில்லை
மாண்டாரபிழைத்தாரோமறுவார்த்தைநானறியேன்
மானைப்பிடிக்கையிலேமான்வளர்த்தார்கண்டாரோ
மானைவளர்த்தவர்கள்வந்துவதைபண்ணுரோ
சத்தரிஷிகளோசந்நியாசியானவரோ
சத்திரியவர்கள்சபித்துமேபோட்டாரோ
காணவும்போறேனேகட்டழகர்தம்பியரை
பார்க்கவும்போறேனேபாவியென்கண்ணுலே
இன்னமொருக்கால்இங்கேவந்துசொல்வாரோ
இளையசகாதேவா இட்டிங்கேவாராயோ

இத்தனையுமென்னடா இறங்கினாலுமுண்ணாதே
இறங்கினானுந்தனுக்கு யிடறுகள் வந்துவிடும்
என்னவுரைகேட்டுஏதுசொல்வான்சகாதேவன்
அந்தரத்தில்நின்றுகொண்டுஆர்காணும்பேசுறவன்
தூரத்திலிருந்துகொண்டு சொல்கிறவனார்காணும்
அந்தரதேவதையோ சந்திரசூரியபரா
ஆகாசதுர்க்கைகளோ ஐயன்பிடாரிகளோ
பேயோபிசாசுகளோபிலந்திலாழுங்கழுகுகளோ
ஆரோதெரியாது அதட்டிக்கேட்கிறவர்
எவரோதெரியாதுஎந்தனைக்கேட்கிறவர்
மற்றுமொருக்கால்தான் வாய்திறந்துபேசுங்கள்
இன்னமொருக்கால்தான் எதிரில்வந்துசொல்லுங்கள்
என்றசொற்கேட்டு எம்பெருமானேதுசொல்வார்
தண்ணீர்குடிக்கவென்றால்தாரணியில்புதுமைசொல்லும்
வாடாப்பயிருமெது வருந்தபாரமெது
அந்தவதிசயங்க ளறிந்தாலுரையுமென்றார்
அறிந்துநீர்சொன்னாலே அள்ளியேதீர்த்தமுண்ணும்
சொல்லுவாயாமானால் சுருக்காகதீர்த்தமுண்ணும்
இல்லாமற்போனாலே யிப்பாலேவந்துவிடும்
தாமமுடியான் சகாதேவராசனவன்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்சகாதேவன்
ஆரோதெரியாதுஅந்தரத்தில்மிரட்டுகிறீர்
எவரோதெரியாது என்னையிரட்டுகிறீர்
அருகாகவந்தாலே அடித்தெறிந்துபோட்டிடுவேன்
எதிரிலேவந்தாக்கால் யிருதுண்டாய்ப்போட்டிடுவேன்
சரியாயிருக்கவேணும் சண்டைபண்ணிப்பார்க்கவேணும்
மறைவாயிருந்துகொண்டு வாதாடநீதியுண்டோ
என்றுமவனுரைக்க எம்பெருமான்தான்கேட்டு
ஒன்றுமேசொல்லாமல்உலகளந்தார்வீற்றிருந்தார்
மறுவார்த்தைபேசாமல் மாயவருந்தானிருந்தார்
அப்போசகாதேவன் ஆனந்தமாகவேதான்
குளத்திலிறங்கினானே கொப்பெனவேதீர்த்தமுண்டான்
அள்ளியேதீர்த்தமுண்டான் ஆவல்தெளிந்திடவே
தண்ணீர்குடித்தானே தாமமுடியானும்
அள்ளிசலமுண்டபின்பு ஆனந்தமார்பனுக்கு
தண்ணீர்குடித்தவுடன் தலையைச்சுழற்றுகுது
உடம்புமறக்குது உள்ளங்குலையுது
நாவுகுளறுகுது நாமமுடியானுக்கு
தன்னைமறக்குது தார்வேந்தராசனுக்கு
ஆரோதெரியாது எந்தனுக்குச்சொன்னார்கள்
எவரோதெரியாது எந்தனுக்குச்சொன்னவர்கள்

தண்ணீர்குடியாதேயென்றுசத்தம்பிறந்ததங்கே
அவர் சொல்லைக்கேளாமல் அள்ளிநான் தீர்த்தமுண்டேன்
சொன்னசொற்கேளாமல்சுருக்காகதீர்த்தமுண்டேன்
தெரியாமல்நீர்குடித்தேன் சிந்தைகலங்குது
அறியாமல்நீர்குடித்தேன் அங்கம்பிரட்டுகுது
என்றுநடந்தானே இளையசகாதேவன்
அண்ணமார் தன்னருகே அனமுகன் வந்துநின்று
அப்போசகாதேவன் ஆலோசனைகள்பண்ணி
தம்பிகளைக்காணுமென்று தருமரிங்கேவந்தாக்கால்
வசநாபிதண்ணீருண்டுமாண்டிடுவார்தப்பாது
என்றுமனதிலெண்ணி யெழுதுகிறான்மரத்தடியில்
அண்ணுவேமரத்தடியில் அதிசயமானவார்த்தை
இந்தக்குளத்திலே எவர்தாகமுண்டாலும்
வசநாபிதண்ணீரிது குடித்தால்மடிந்திடுவார்
அண்ணுவே இக்குளத்தி லள்ளிநீர்குடியாதே
நாங்களிதைக்குடித்துநாலுபேருமடிந்தோம்
செத்துமடிந்துவிட்டோம் சிவலோகஞ்சேர்ந்துவிட்டோம்
மாண்டுமடிந்துவிட்டோம்வைகுந்தம்சேர்ந்துவிட்டோம்
என்றுமவன்சொல்லி எழுதினான்மணமேலே
தலையைச்சுற்றுகையில் தானும்படுத்துக்கொண்டான்
அந்தச்சமய மறிந்தாரேயெம்பெருமாள்
மாயன்பெருமானும் வார்த்தைகளேது சொல்வார்
காலனையெச்சரித்து கடுகவுயிர்வாங்குமென்றான்
எமனையெச்சரித்து யிவனுயிரை வாங்குமென்றான்
எம்பெருமாள்சொற்கேட்டு ஏமனவனோடிவந்து
சூலத்தால்குத்தியே பாசத்தால்கட்டினானே
பாசததால்கட்டியேபதைக்கவுயிர்பிடித்தான்
சூலத்தால்குத்தியே துடிக்கவுயிர்பிடித்தான்
மாண்டுபடிந்தானேமன்னன்சகாதேவன்
இப்படியாகஇவரிருக்கும்வேளையிலே

ஆரணியத்தில்எம்பெருமாள் குதிரைமேலவீமன் அருச்சுனன் நகுலசகாதேவன் இன்னான்குபேரும்மாண்டபின்பு காளமகாரிஷி யாகத்திலுண்டாகியவேதாளம ஏந்தும்பேரையுங்கொல்லவருகிறது.

அந்தச்சமயத்தில் ஆங்காரமாகவேதான்
காளமகாரிஷியுங் கருதிதபசுபண்ணி
அக்கினிக்குழியிலே ஆங்காரவேதாளம்
உண்டாகிவந்துதங்கே உலகந்திடுக்கிடவே
கருத்தநிறமுடனே கைதனிலேவாளுடனே
பொருத்தநிறமுடனே பொருந்தொப்பைதன்னுடனே
செவந்தமயிருடனும் சிம்வடிந்தவாயமுடனும்

கல்களைப்பார்த்தாலே காக்குன்றுபோலிருக்கும்
ஊக்கையோகாதவழிகால்கள்வெகுதூரம்
அகண்டபுஜங்களதுஐந்நூற்றுக்காதவழி
பல்லழகைப்பார்த்தாலே பனைமரம்போலிருக்கும்
மூக்கழகைப்பார்த்தாலே முதலைகளைப்போலிருக்கும்
இப்படியாகவேயிருக்குமந்தவேதாளம
பொல்லாதவேதாளம பிறந்தது அக்கினியில்
காளமகாரிஷியருகேகிட்டவந்துதெண்டனிட்டு
என்னையழைத்ததுதானேதுவனையாக
ஆரைநான்கொல்கிறது அடித்துப்போர்செய்கிறது
எவரைப்போய்கொல்கிறது எந்தனுக்குச்சொல்லுமையா
கைகள்பதைக்குது காளமகாமுனியே
வயிறுபசிக்கிறது மாமுனியேசொல்லுமையா
அப்போதுமாமுனியும் அதுசொல்லத்தான்கேட்டு
காளமகாமுனியுமக்கவெடுத்தவரைப்பார்
அக்கினியில்வந்துதித்த அங்காரவேதாளமே
நான்சொல்லக்கேளுமடா ராஜாக்களைவருண்டு
இந்தவனத்திலே இருக்கிறார்பஞ்சவர்கள்
வீரப்புலிபோலே வேந்தர்களைவருண்டு
பாரப்புலிபோலே பஞ்சவர்களைவருண்டு
ஐவரையுங்கொன்றுதின்று அரைநொடியில்வாருமென்றார்
வேதாளந்தான்கேட்டு வெகுவாய்மனங்குளிர்ந்து
அவ்வளவுபோதுமென்று ஆர்ப்பரித்துப்பறகடித்து
ஆர்ப்பரித்துப்பறகடித்து அதட்டிவருகுதங்கே
எங்கெங்கேயென்றுசொல்லி எழும்பியேகொக்கரித்து
கொக்கரித்துவேதாளம் குமாளமாய்வருது
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துவருகையிலே
செந்தாமரைப்பொய்கையண்டைசேர்ந்திருக்கக்கண்டது
மாமரச்சோலையில்கீழ்மாண்டிருக்கக்கண்டது
இறந்தவரல்லாம லின்னமொருவரில்லை
செத்தவரல்லாமல்மற்றுமொருவரில்லை
செத்தபிணந்தின்னா மாமுனியேபோகச்சொன்னார்
எத்தனைநாளைக்குமுன்னே செத்தபிணமிதுவோ
செத்தபிணத்தையோநான்சென்றுபுசிக்கிறது
நாறும்பிணமெடுத்து நானோபுசிக்கிறது
மாண்டபிணத்தையோநான்வயிறாரவுண்பேனோ
என்றுமேசொல்லிஎழுந்ததுவேதாளம்
அங்கேதிரும்பி அகோரகோபத்துடனே
மகாவேகந்தனுடனே வருகுதுவேதாளம்

சாணமகாரிஷிபருகே கடுகளர்ந்துவுக்கிரமுடன்
எடுத்துமகாமுனியையிரண்டாய்க்கிழித்தது
வாரியெடுத்துமல்லோ வயிற்றைக்கிழித்தது
செந்தைப்பிளந்தது நெருப்புத்தணலெழும்ப
மாமுனியைக்கொன்றபின்பு மனதுமிகக்குளிர்ந்து
சந்தோஷமாகியல்லோ வேதாளந்தானடக்க
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோகுது
மனதுமிகக்குளிர்ந்து மற்றோர்வனந்தனிலே
போனதுபிழைத்திருக்கும் பொல்லாதவேதாளம்
இப்படியாக இருக்கின்றவேளையிலே

தருமராசர் தம்பிமார்நாலுபேரைங்காணோமென்று
துரோபதையுடன் சொல்லிப்புலம்புறது.

வேதாளம்போனபின்பு வேலவேந்தர் தருமரவர்
சாயாம்புமன்னவனோர் தருமரவரேதுசொல்வார்
பாஞ்சாலன்பெண்ணேபைங்கிளியேதுரோபதையே
நெருப்பிற்பிறந்தவளேநீலவர்ணர் தங்கையரே
அனலிற்பிறந்தவளோ அபிஷேகப்பத்தினியே
தேவரையும்பாவிட்ட ஆதிபரஞ்சுடரே
தோரணவழகுதுரோபதையேகீர்சேரும்
மான்பிடிக்கப்போனதொரு மதவீமனைக்காணோம்
வில்லேந்தித்தேடிப்போன விஜயனவனைக்காணோம்
இருவரையுந்தேடிப்போனநகுலன்வரக்காணோம்
மூவரையுந்தேடிப்போன சகாதேவனைக்காணோம்
நால்வரையுங்காணோமே நாயகமேயென்னசெய்வோம்
செத்தார்பிழைத்தாரோதெரியவில்லை
மாண்டார்பிழைத்தாரோ வார்த்தைதெரியவில்லை
ஆரோடேசண்டைகள் அமராது செய்கிறாரோ
எவரோடேசண்டைகள் எப்படிப்போர்செய்கிறாரோ
மனைவளர்த்தவர்கள் வந்துவதைபண்ணாரோ
எந்ததபோதனர்கள் எவர்கள்கொன்றுபோட்டாரோ
தபசிற்பெரியவர்கள் சபித்தாரோதானறியேன்
வரத்திற்பெரியவர்கள் வதைசெய்துபோட்டாரோ
போனவிடமறியேன் போர்செய்ததாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
தேடியேபோவோமவா தேன்மயெயென்றழைத்தார்
அணங்குதுரோபதையாள் அப்படியேநல்லதென்றாள்

தருமருந்துரோபதையும்வீமன் அருச்சுனன்
நகுலன்சகாதேவன் இவர்கள்நாலுபே
ரையுந்தேடிக்கொண்டுபோனது.

துரோபதையுந்தருமருந்தானெழுந்திருந்து
தேடிப்புறப்பட்டார்கள் சிரானகானகத்தில்

கூவிப்புலம்பியே சொப்பனமேவாரார்கள்
அழுதுபுலம்பியே அந்தவனந்தேடிவாரார்
இருண்டவனங்களெல்லாம் எங்கெங்குந்தேடினாரே
தம்பியைக்காணாமல் தயங்கினார்தருமரங்கே
பாராமல்தம்பியரைப் பதைத்துப்புலம்பினார்கள்
தக்கபுகழுடைய தருமரங்கேதுசொல்வார்
தோராவடிவழகிதுரோபதையேபாஞ்சாலி
இந்தவனத்திலே எங்கெங்குந்தேடினோமே
காலையத்தனைவரையுங் காட்டிலேகாணவில்லை
இந்தவனந்தாண்டி இனியவனம்போவோமென்று
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோய்நடந்தார்
தேடியே வாரார்கள் சோலைவனந்தனிலே
தருமருக்குந்துரோபதைக்குந் தாகமெடுக்குது
நாவுலர்ந்தது நாமநடியாதற்கு
ஆரணங்குதுரோபதைக்கு அதிகதாகமுண்டாச்சு
தண்ணீர்கவனமுந் தாகவிடாய்ச்சு
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
என்செய்வோம்பெண்ணேநாம் எங்குஞ்சலங்கிட்டாது
மன்னவரைக்காணேனே மாதரசேயென்னசெய்வேன்
தம்பிகளைக்காணோமே தாகவிடாய்கொள்கிறதே
என்னசெய்வேனென்றுசொல்லி இளைத்துப்புலம்புகையில்
அந்தச்சமயத்திலே அதிசயமேதுசெய்தார்
மயிலுங்குயிலுமிங்கேமரத்தின்மேலிருந்தே
வனத்திற்குயிலு மயில்களுங்கூவுகுது
அந்தக்குரல்கேட்டார் ஆணழகர்தருமலிங்கம்
கூவுங்குரல்கேட்டுக் கொப்பெனவேவந்துசொல்வார்
முன்னேபெரியவர்கள் சொன்னமுறைப்படியே
குளிர்ந்தவிடந்தனிலே குயிலுமயிலிருக்கும்
என்றுநடந்தாரே இளந்தோப்புதன்னருகே
தாமரைப்பொய்கையண்டை தம்பிமார்தானிருந்தார்
பள்ளிகொண்டிருக்கிறதைப் பார்த்தாரே தருமலிங்கம்
தக்கப்புகழுடைய தருமரவரேதுசொல்வார்
தோராவடிவழகி துரோபதையேகண்டாயோ
தம்பிமார்பள்ளிகொண்ட துயிலத்தைப்பார்த்தாயோ
மானும்பிடியாமல் வந்தசேதிசொல்லாமல்
குளிர்ந்தநிழலருகே கூசாமற்பள்ளிகொண்டார்
தண்ணீர்குடித்துநாம் தாகவிடாய்தீர்ந்தபின்பு
தம்பிமாரைத்தானெழுப்பித் தையலேபோவோமென்றார்
என்றுமவருரைத்து இளந்தோப்பிற்போய்புகுந்து
தாமரைப்பொய்கையிலே இறங்கினார்தருமரவர்
அப்போதுமாயவரும் அரிராமர்தான்பார்த்து

பல்லிலேபரசவீணை பாதத்தில்செந்தாமரைப்பூ
முதுகிலேமச்சரேகை முழங்காலில்முத்துமாணிக்கம்
இடதுகால்விருதுபொம்மை வலதுகால்வீரதண்டை
சலவிருதுகுலவிருது சத்ராதிபேர்விருது
எதிர்த்தவன்தன்விருதும் எதிராளிமுகவிருதும்
இத்தனைவிருதுகளை எடுத்துநீபூட்டிககொண்டு
கட்டியெதிர்த்தாலே கலங்குமேசேனையெல்லாம்
சத்ராதிகளைசெயிக்கும தனஞ்செயரேஅர்ச்சுனரே
எதிரிகளைசெயிக்கும என்பிறப்பேஅர்ச்சுனரே
என்னைப்பிரிந்துநீ இறந்துமடிந்தாயோ
அழகையெழுதினவர் ஆயுளைஎழுதாரோ
வடிவமெழுதினவர் வயதைஎழுதாரோ
பெற்றளேகுந்தியம்மாள் பிரபளங்கள்காணவென்று
பெற்றாள்வயிற்றிலேநீ பெருநெருப்பையிட்டாயோ
என்னைத்தவிக்கவிட்டு இறந்துவிடஞாயமுண்டோ
என்றுசொல்லிதருமரவ ரேங்கிமனந்தளர்ந்து
அழுதுபுலம்பியே அங்கனேமூர்ச்சையானார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருலிங்கம்

தருமராசர் மூர்ச்சைதெளிந் தெழுந்திருந்து நகுலனைப்பகர்த்துப் புலம்புகிறது.

களைத்ததருமரையே கண்டந்ததுரோபதையாள்
துள்ளியெழுந்திருந்து துரிதமுடனோடிவந்து
காட்டில்தழையொடித்துக் கடுகெனவேஓடிவந்தாள்
தருமராகாகத் தையலரும்வந்துநின்று
பசைத்தழையொடித்து பைங்கிளியாள்வீசுகிருள்
காட்டுதழையொடித்துககடுகெனவேவீசிஞளே
மற்றுமொருநாழி யுற்றபிரகாக
வீசக்களைதெளிந்து முனைனின்றுபுலம்புகிறுர்
அப்பாநகுலாவென் னற்வன்னகண்மணியே
மலேயேடருவதமே வாழ்மலையேகுஞ்சரமே
நீமடியுங்காரியங்கள் நிண்ணயத்தைநானறியேன்
மாண்டிடுவீரென்றுநான் மனதில்நினைத்ததில்லை
செத்துமடுவீரென்று சற்றமறியேனே
எனைநீங்கையைவிட்டு இறந்துவிடஞாயமுண்டோ
(நீங்கள்) போவதறியாமல் பூரித்துநானிருந்தேன்
சாவதறியாமல் சந்தோஷமாயிருந்தேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
ஏவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேர்த்துமுகங்காணுதையா
கண்டமுகங்களெல்லாம்வடுத்தமுகமாகுதப்பா

கூடப்பிறந்தீர்களே கூட்டுப்பாலுண்டீர்களே
ஒக்கப்பிறந்தீர்களே ஒருஸ்தனப்பாலுண்டீர்களே
காட்டுக்குள்ளேயேவிட்டு கைலாசமபோனீரோ
தங்கத்தரிக்கவில்லை தரையிற்கால்பாவவில்லை
நிற்கத்தரிக்கவில்லை நிலத்திற்கால்பாவவில்லை
உங்களைநான்பிரிந்து ஒருநாழிதங்குவேனோ
கூடமடிவேன்காண் கொற்றவரேஉங்களுடன்
ஒக்கமடிவேனே உங்களுடனாக
அலண்டுபிரண்டழுதார் அடித்துக்கொண்டார்தலைமேலே
முட்டிக்கொண்டார்பூமியிலே மோதிக்கொண்டாரப்போது
மார்கொண்டகண்ணீரை வழித்தெரிந்தார்மண்மேலே
துடித்துப்பதைத்தலறித் துள்ளிப்புரண்டழுதார்
களைத்துவிழுந்தாரே கட்டழகர்தருமலிங்கம்
மூர்ச்சையாய்விழுந்தாரே முடிமன்னராசாவும்

தருமராசர் மூர்ச்சைதெளிந்து சகாதேவனைப்
பார்த்து புலம்புகின்றது.

தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
களைத்ததருமருக்கு களைகள்தெளியவென்று
காட்டில்தழையொடித்து கட்டழகிவீசலுற்றாள்
பச்சைதழையொடித்து பைங்கிளியாள்வீசலுற்றாள்
வீசக்களைதெளிந்து வேந்தரெழுந்திருந்தார்
மூர்ச்சைதெளிந்தெழுந்து மோதிப்புலம்புகிறார்
சாஸ்திரக்கொடிவேந்தர் சகாதேவராசாவே
முன்னேவருங்காரியத்தை முதலறிந்துசொல்வாயே
இனிநடக்குங்காரியத்தை எந்தனுக்குநீயுரைப்பாய்
அப்படிக்கொத்ததொரு அறிவுள்ளகண்மணியே
உன்னைப்பறிகொடுத்து உலகத்தில்வாழ்வேனோ
பன்னிரண்டுதன்வருஷம் பாரவனந்தீர்ந்தபின்பு
அக்கியாதவாஷம் அதுவுங்கழிந்தபின்பு
பாரவனந்தீர்ந்து பட்டணம்போய்சசேர்ந்தால்
குந்தியம்மாளோடிவந்து குழந்தைகளெங்கேயென்றாள்
மைந்தர்களெங்கேயென்று மாதாவுங்கேட்டாளே
என்னவென்றுசொல்லி எடுத்துரைப்பேன்தாயார்க்கு
கட்டிக்கரும்பேயென் கண்மணியேயெங்கொளித்தாய்
முடிக்கமுடியானாலும் முத்துமுடியாகுமோதான்
தங்கமுடியானாலும் உங்கள்முடியாகுமோதான்

தருமராசனும்பேர் தம்பியரையும் நினைத்துபுலம்ப அப்போது
துரோபதைதன்புருஷர்களைப்பார்த்துப்புலம்புகிறது.

தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
மாலையிட்டமன்னர்கள் மாண்டுவிடநீதியுண்டோ
தாலிகட்டும்ராசாக்கள் தரையில்விழலாச்சோ

மகிலியமூண்டு மணமுணடுஎன்றிருந்தேன்
உலகத்துபெண்டுகள் ஒருவனுக்குவகைகொடுப்பார்
(நான்)ஐவருக்குக்கைகொடுத்து அம்பலத்துக்காளானேன்
செலவத்தலையிலே செப்பேடெழுதின ஈமை
அல்லற்படுந்துயரம் அமைத்தாரேபிரமதேவன்
ஆரைக்கழுத்தி அரைக்கழுதகியானேனே
கோரைக்கழுத்தி குறைகழுத்தியானேனே
தங்கக்கழுத்தி தலைவிரிக்கநாளாச்சோ
மல்லிகைச்சாலையிலே மயிர்விரிக்கநாளாச்சோ
குங்குமச்சாலையிலே குழல்விரிக்கநாளாச்சோ
ஐயையோதெய்வமே அனியாயஞ்செய்தீர்களோ
பார்த்துமிருந்துமென்னைப் பரதவிக்கவிட்டீர்களோ
கண்டுமிருந்துமென்னை கனங்குலைபவைத்தீர்களோ
தோள்சார்ந்தராசாக்கள் சோர்ந்துவிடகாரணமேன்
மார்சார்ந்தராசாக்கள மடிந்துவிடக்காரியமேன்
காட்டிலேமடிந்தலோ கையைவிட்டுநின்றீர்களோ
அடவிலேதான்மடிந்து அலையவிட்டுப்பார்த்தீர்களோ
சூரியரைசாட்சிவைத்து தெருவிலகையைவிட்டீர்களோ
சந்திரரைசாட்சிவைதது சாகத்துணிந்தீர்களோ
சந்திலேகையைவிட்டு சமர்த்தாய்படுத்தீர்களோ
மஞ்சளிழந்து மணியிழந்துபூவிழந்து
தாலிசரடிழந்து தரணியிலநிற்பேனே
கூடமடிவேன்காண் கொற்றவரேஉங்களுடன்
ஒக்கமடிவேன்காண் உத்தமரேஉஙகளுடன்
நானுமடிவேன்காண் ராசர்களேஉங்களுடன்
அலண்டுபிரண்டழுது அப்பிக்கொண்டாள்மார்மேலே
எங்கேயோவானம இடித்ததுஎன்றிருந்தேன்
தப்பாமல்வானமல்லோ தலையிலிடித்துதே
என்றுபுலம்பியே இளங்கொடியாள்தானழுதாள்
கோவென்றசத்தம் குமரிப்புலம்புகிறாள்
தக்கபுகழுடைய தருமரவரேதுசொலவார்
சாயம்புமன்னவனர் தருமரவரேதுசொலவார்
தோராவடிவழகி துரோபதையேநீர்கேளும்
வசாபிகண்ணீருண்டு மாண்டாரேதம்பியாகள்
நாமுமபுசித்தோமே நல்லவிஷத்தண்ணீரை
இறவாமல்நாமு மிருப்பதென்னகாரணங்கள்
மாண்டொருதம்பியர்கள் மன்னவர்கள்தன்னுடனே
நாமும் மடிந்தாக்கால் நல்லதின்றெண்ணுகிறேன்
கூடமடிந்தாலே குணமென்றுஎன்னுகிறேன்
ஒக்கமடிந்தாலே ஒருநிக்கந்தீர்ந்துவிடும்

கதியைத்துலைக்கலாம் காவேரிநீர்திடலாம்
விதியைத்துலைக்கவல்லலோ வேறுவகையற்றோம்
என்னசெய்வோமென்றுசொல்லி ஏங்கிப்புலம்புகிறார்

தருமர்மனந்தரிய எம்பெருமான் ஒட்டனுசவும் ஏமன்ஒட்டச்சியாகவும்வந்து பிணத்தைதப்பிழுக்கிறது.

ஏமனும்பெருமானும் இருவருமாகவேதான்
தருமரிவனையறிய சாமிவடிவெடுத்தார்
எம்பெருமான்மேகவண்ணரென்னவடிவானான்
இருவருமாகவே இவர்களண்டை ஓடிவந்தார்
தருமரைத்தான்பார்த்து சாமியவருரைப்பார்
ஆரையாயிங்கே அழுதுபுலம்புவது
இந்தகுளத்திலே யெவர்தானாகமூண்டாலும்
வசநாபித்தண்ணீரில் மாண்டுமடிந்தாலும்
எங்களையல்லாமல் எவரெடுக்கலாகாது
எடுத்துப்புதைக்கிறது எங்களுக்குத்தாரமையா
நாங்களெடுக்கும்படி ராசாவினகட்டளைதான்
என்றுமேயெம்பெருமான் இழுத்துப்போறார்வீமனையும்
இளையவன் அர்ச்சுனனை இழுத்துப்போறாள் ஒட்டச்சியும்

எம்பெருமானும ஏமனும்சவத்தை யெடுத்துக்கொண்டுபோக தருமராசர்பரிதாபப்பட்டு தன்சவத்தை வாங்குகிறது

சவத்தையவரிழுக்க தருமரவர்பார்த்து
கண்டாரே தருமரவர் கடுகவயிறெரிந்து
பார்த்துமனங்கலங்கிப் பதைத்துப்புலம்பியவர்
ஒட்டர்களருகில்வந்து உத்தமருமேதுசொல்வார்
ஆரையா ஒட்டர்களே ஐயாவேநீர்கேளும்
அண்ணன்தம்பிமாருகளிங்கே அருகாகவந்திருக்க
தமையனென்னாலும் தனதாகவாதிருக்க
பூமிகளைவெட்டிப் புதைக்குமவாமையென்ன
எங்கள்பிணத்தைநீங்கள் இழுக்காதிர்விட்டுவிடும்
தரையிலிழுக்காதே தர்மமாய்ப்போகுதையா
பூமியிலிழுக்காதே புண்ணியமாய்ப்போகுதையா
கோடிசரணமையா கும்பிடுவேன்விட்டுவிடும்
ஆயிரஞ்சரணங்காண் அடிபணிந்தேன்விட்டுவிடும்
மூவாயிரஞ்சரணம் முடிசாய்த்தேன்விட்டுவிடும்
என்றுவிருந்திடுமே இயலாமை தருமலிங்கம்
ஏமனும்ராமனும் இருவருந்தான்பார்த்து
பெருமான்மனமிரங்கிப் பிரியமுடனாக
வீமனைத்தானிட்டார் வேந்தர்பெருமானும்
தக்கபடிமுடைய தருமரவரோடிவந்து
வீமனையெடுத்துவந்து மெத்தெனவேதான்வளர்த்தி
வீமராசாகவே தருமவீற்றிருந்தார்

தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
ஒட்டச்சிபாதத்திலே உத்தமியாள்தான்விழுந்து
தாயேநீஒட்டச்சியுன் தருமமாய்ப்போகுதம்மா
(என்னை) மாய்விட்டமனமதண்டி வலியாதேபூமியிலே
(இந்த) வையகத்தையாண்டவரை வலியாதேதாயாரே
பூமியையாண்டவர்கள் புரட்டாதேமாதாவே
அங்கம்பொறுக்கவில்லை ஆச்சிநீவலியாதே
ஆயிரந்தெண்டமம்மா அடிபணிந்தேனுந்தனுக்கு
மூவாயிரஞ்சரணம் முடிவணங்கித்தெண்டனிட்டேன்
கோடிசரணமம்மா கும்பிட்டேன்விட்டுவிடும்
என்றுவருந்தினளே இளங்கொடியாள்துரோபதையும்
எமனும்பெருமாளும் இருவருந்தான்கேட்டு
பரிதாபந்தாளாமல் பார்த்தனைவிட்டார்கள்
தோராவடிவழகி துரோபதையுமோடிவந்து
இளங்கொடியாளர்ச்சுனரை எடுத்துவளர்த்திடவே
ஒட்டனும்ஒட்டச்சியும் உத்தாரமென்னசொல்வார்
எடுத்துப்புதையுமென்று ஏகிநடந்தார்கள்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
இன்றெலலாமிங்கிருந்து ஏங்கியழுதாலும்
நம்மாலேயாவது ராசாவேயொன்றுமில்லை
மாயன்பெருமாளை மனதிலநினைத்தழுதால்
வருந்தியழுதாலே வருவார்காணெம்பெருமாள்
மாயன்வந்தபிற்பாடு வயணந்தெரியுமென்றாள்

தருமராஜர் தன்தம்பிமார் பிழைப்பதற்காக எம்
பெருமாளை நினைத்துப்புலம்புகிறது

சாயாம்புமன்னவரும் தருமரவரென்னசொல்வார்
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்றார்
எல்லையளந்தசாமி எம்பெருமாள்மேகவண்ணா
கல்லான அகலிகையை நல்லபெண்ணாக்கிவைத்தாய்
மூலமெனனுங்குஞ்சரத்தை காத்தமுகில்வண்ணா
ஆலிலைமேல்பள்ளிகொண்ட அரிராமாவாருமையா
மச்சவடிவுகொண்ட அச்சுதரேயிச்சகத்தில்
கூர்மவடிவுகொண்டு பாதாளம்போய்வந்தீர்
சிங்கமாயிரணியனைப் பங்கஞ்செயதுமார்பிளந்தீர்
ராமர்வடிவுகொண்டு ராவணனைச்சங்கரித்தீர்
அரக்குமாமாளிகையில் ஐவரையுங்காத்தீரே
அம்பலத்தில்துரோபதைக்கு அட்சயத்துகில்கொடுத்தீர்
மண்டலங்கள்தானறிய மாளாத்துகில்கொடுத்தீர்
பகையாளிவாசலிலே பட்சம்வைத்துகாத்தீரே
எதிராளிமுன்னாலே எங்களைக்காத்தீரே
உன்மகிமையாரறிவார் உம்பர்பிரான்தானறிவார்

மாயமாய்வந்தொரு மலைசோடிதான்கேட்டு
தருமர்கிளைவரிந்து சந்தோஷப்பட்டாரே
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
தேகங்குளிர்ந்து திருத்தோளும்பூரித்து
உன்னுமல்பூரித்து உடம்பெல்லாம்புட்டுவிட்டு
அரியாமல்உளமகிழ்ந்து காலனையெச்சரித்து
நால்வருயிரையுமே நமனுரேவிட்டிடென்றார்

விஷதீர்குடித்து இறந்துபோனநாலுபேரும்

பெருமாளாலஎழுந்திருந்தது.

எம்பெருமாள்தானுரைக்கவேயமனவாகேட்டு
அப்படியோல்லதென்று அந்தஎமனும்
பிடித்தவுயிரைவிட்டுப் போதவெழுந்திரென்றார்
தூங்கிவிழுந்ததுபோற் பாங்காயெழுந்தார்கள்
துள்ளியெழுந்தாரே துரைகளாந்நாலுபேரும்
மாயன்பெருமானை வணங்கியேதெண்டனிட்டார்
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை கண்டுமனமகிழ்ந்து
வாழ்த்தியெடுத்தவரும் மார்போடேகொண்டணைத்து
சந்தோஷமாகத் தானிருந்தார்பெருமாளும்
தக்கப்புகழுடைய தருமரடிபணிந்து
நாற்காலவலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
தக்கப்புகழுடைய தருமரெடுத்தணைத்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீரென்றுடனே
நிற்பீர்நிலைதரிப்பீர் நீடூழிவாழ்ந்திருப்பீர்
கல்பதித்த தூணதுபோல் கலங்காமல்வாழ்ந்திடுவீர்
என்னைப்பெறுவீ ரெதிர்த்தார்முனையரிவீர்
மைந்தர்களைபெற்றெடுத்து மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளறியிலே வீரபட்டங்கட்டிடுவீர்
ஆல்போலவேதழைத்து அருகுபோல்வேரோடி
மூங்கில்போலெங்காளும் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்களென்றுசொல்லி மனங்குளிரவாழ்த்தினார்
இரும்இருமென்றுசொன்னார் இனிதாகத்தம்பிமாரை
அண்ணனுரையாலே அழகாயிருந்தார்
மாயனுரையாலே மகிழ்ச்சியாய்வீற்றிருந்தார்
தம்பிமாரைக்கண்டல்லவோ சந்தோஷப்பட்டாரே
தோகைவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
புருஷர்களைப்பார்த்து பூரித்தாளுத்தமியும்
கணவரைகண்டல்லவோ கட்டழகிமனக்குளிர்ந்து
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

எம்பெருமான் துரியோதனன்சூதும் காளமகாரிஷி
செய்தயாகமும் வேதாளம்வரவும் தான் இவர்
களைக்காப்பாற்றினதும் பஞ்சவர்களுக்
குச்சொல்லுகிறது.

மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
திரியோதிரன்செய்த சேதியெல்லாம்சொல்லலுற்றார்
காளமகாரிஷியையுங் கடிகிவருந்தியவன
கொல்லஅனுப்பினான் கொப்பனவேஉங்களைத்தான்
காளமகாரிஷியுங் கடுகிவனந்தனிலே
அக்கினிகுழியருகே அணைந்ததடசுபண்ணி
வேதாளமுங்கொண்டுபண்ணி வேந்தருங்களைக்கொல்ல
தாமரைபொய்கையொன்று தண்ணீருமுண்டுபண்ணேன்
நானுங்கவந்தலவோ வரவழைத்தேனுங்களைத்தான்
அந்தரமாய்தான்பேசி அவனையுங்கொன்றுவிட்டு
ஓட்டனைபோலேவந்து உங்களைவலித்திருந்தேன்
என்னபலன்கண்டேன் இராசாவேஉங்களாலே
(என்ற)மாயனுரைகேட்டு வளம்பெரியதருமராயர்
பாதத்திலேவிழுந்து பணிந்துமுறையமிட்டார்
உம்மையன்றிவேறுதெய்வம் ஒருவரெனக்கில்லையையா
உம்மைச்சதமென்று உயிர்கொண்டுலாவுகிறேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைதஞ்சமெனபேன்
எவரைசதமெனபேன் இனியாரைதஞ்சமென்பேன்
நீரேதுணையல்லால் வேறேதுணையுமில்லை
அடியாரைகாக்கிறது ஆண்டவனேயுன்பெருமை
காக்கிறேனென்றுசொல்லி கங்கணங்கட்டினீரே
இரட்சிக்கவேண்டுமென்று யெம்பெருமாளாய்ப்பிறந்தீர்
இன்னமென்னவினைவருமோ யானறியேனாண்டவனே
ஏதேதுசெய்வானோ இராசன்திரியோதிரன்
அத்தனைக்குவந்திரந்து அடியாரைகாருமென்றார்
என்றல்லோஐவருமாய் இறங்கியடிபணிந்தார்
மெத்தமனமகிழ்ந்தார் மேகவண்ணனெம்பெருமாள்
சித்தமகிழ்ந்தார் தேகமெல்லாந்தான்குளிர்ந்தார்
நல்லதுபஞ்சவரே ராசர்களேநீர்கேளும்
இந்தவனத்தைவிட்டு இன்னமொருவனத்தில்
மற்றுமொருவனத்தில வாசங்கள்பண்ணுமென்றார்
என்னவினைவந்தாலும் என்னைநினையுமென்றார்
போய்வாரோமென்று பெருமாள்பயணமிட்டார்
ஏமன்கடாவின்மேல் எம்பெருமாள்கருடன்மேல்
வாகனத்தின்மேலேறி வழிபிடித்துபோனார்கள்

எமபுரந்தான்தேடி யேமனும்போய்விட்டான்
நாலாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

நான்காவது காளமகாரிஷிவனம்
முற்றிற்று.

## ௫-வது சயிந்தவமகாரிஷிவனம்.

ஐந்தாம்வருஷம்பிறந்ததுஐவருக்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
துத்திபுளிகாலை தும்பையுந்து துவளை
தின்றுதிரிகிறார் தேசாந்திரிபோலே
சயிந்தவரிஷிவனத்தில் தானடங்வார்பஞ்சவர்கள்
ஓரடிக்குபர்னசாலை உண்டுபண்ணாரைவர்களும்
மூன்றடிக்குப்பர்னசாலை முடிமன்னருண்டுபண்ணார்
ஐந்தடிக்குப்பர்னசாலை ஆணழகருண்டுபண்ணார்
ஆறடிக்குபர்னசாலை ஐவர்களுமுண்டுபண்ணார்
ஏழடிக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பானசாலைமேலாக பஞ்சவர்கள்குடியிருந்தார்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அவ்வனத்திற்றானிருந்தார்
அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணார்
அநேகநாள்சென்றபின்பு ஆரணங்குதுரோபதையும்
அந்தவனததிலே அதிசயம்பார்க்கையிலே
உச்சிதங்கள்பார்த்தே உலாவிவருகையிலே
ஆகாயந்தன்னளவாய் அங்கேயொருமரந்தான்
வளர்ந்துதழைத்து மரத்தில்பழுத்திருக்கும்
ஒண்டிபழந்தான் உயந்தகிளைமேலிருக்கும்
சூரியகாந்தியப்போல் தோணுதுதுரோபதைக்கு
மெத்தாசைபட்டாளே மெல்லியிளங்கொடியாள்
கண்டாசைபட்டாபட்டாளங் காண்டிபன்தேவியரும்
இந்தகனியை எவர்பறித்துதான்கொடுப்பார்
தருமருடன்சொன்னால் தலைவிதிதகேளாரே
மதவீமருக்குரைத்தால் வயிறாரவுண்டிடுவார்
நகுலசகாதேவர் எம்மால்முடியாதெனப்பார்
அருச்சுனருக்குகானுரைத்தால் அவராலேயாகுமது
மற்றொருவர்தன்னாலே மாளாதுகனிபறிக்க
அருச்சுனனர்மெள்ள அழைத்துவருமென்று
மெல்லநடந்தாளே வேல்பொருதுங்கண்ணாளும்
கொஞ்சிநடந்தாளே கொம்பேரிடையாளும்
அருச்சுனராசரண்டை ஆணழகிவந்துநின்று
அருச்சுனரைக்கண்காட்டி அழைத்தாளே இப்புறத்தில்
ஜாடையறிந்தலவோ தார்வேந்தனோடிவந்து

தருமாறியாமல் தையலருமேதுசொல்வாள்
தருமனுமேயெந்தனுக்கு உத்தாரந்தாருமென்றாள்
அந்தவுரைகேட்டு அருச்சுனருமேதுசொல்வார்
மனதில்நினைத்ததெல்லாம் மயிலனையேகேளுமென்றார்
சிந்தையிலெண்ணமெல்லாம் சீராகச்சொல்லுமென்றார்
கேட்டமனுவுக்கு கிளிமொழியேதாரேனென்றார்
உரைத்தபடியுனக்கு தருவேன்காண்உத்தமியே
அந்தமொழிமொழிகேட்டு ஆரணங்குதுரோபதையும்
கொஞ்சினவார்த்தையுடன் சோபனத்தங்கையரும்
முத்துநகையாளும முருகுகுழலாளேதுசொல்வாள்
காணாதுகண்டேனையா கண்டாசைபட்டேனையா
பாராதுபார்த்தேனேயே பார்த்தாசைபட்டேனையா
தங்கத்தைக்காய்ச்சியே தரையிலேவிழ்த்தாப்போல்
பொன்னையுருக்கியல்லோ பூமியிலேவிட்டதுபோல்
சூரியனைப்போலழகாய்த் தோணுதுமாங்கனிதான்
சந்திரனைப்போலழகாய்த் தானிருக்குமாங்கனிதான்
அக்கினியையுண்பதற்கு ஆசைமெத்தத்தோணுகுது
மாங்கனியையுண்பதற்கு மனதுமெத்தத்தோணுகுது
அந்தக்கனிபறித்து அருச்சுனரேதாருமென்றாள்
மாங்கனிதனைப்பறித்து மன்னவரேநீர்தாரும
என்றுவணங்கினாளே இளங்கொடியாள்பாஞ்சாலி
வணங்கியெழுந்திருந்து மன்னனுக்குஏதுசொல்வாள்
தனஞ்சயரேகனிபறித்துத் தாராமற்போனக்கால்
தண்ணீர்குடியேன்காண் தாகவிடாய்தீரேன்காண்
ஆறுமாதமானாலும் அன்னமபுசியேனென்று
சொல்லிபிணங்கினாளே துரோபதைபாஞ்சாலி
ஆணழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
கனிக்காகநீபிணங்க லாகுமோகட்டழகி
இதற்காய்பிணங்குவரோ இட்சணமேதாரேனென்றான்
அந்தரமாயிருந்தாலும அறுத்துநான்தாரேனென்றான்
எந்தமரத்திலே யிருக்குதுபெண்ணரசே
பழங்களிருக்கின்ற பாரவனமெங்கேயென்றான்
என்றுமனார்கேட்க இளங்கொடியாளப்போது

அருச்சுனன் துரோபதைக்கு மாங்கனிபறித்துக்
கொடுக்கவருகிறது.

வாருமையாவென்றுசொல்லி வணங்கியெழுந்திருந்து
அழைத்துவருகிறாள் அருச்சுனராசனை
கூட்டிவருகிறாள் கொப்பனமே அருச்சுனரை
கடந்தாசிலதூரம கனியிருக்குமவ்வனத்தே
வந்தாரிருவருமாய் மங்கைதுரோபதையும்
இதுதான்மரமென்று இளங்கொடியாள்காட்டினாள்

ஆறுலழகுமன்னன் அர்ச்சுனராசதுரை
மரத்திலிருக்குமந்த மாங்கனியைத்தான்பார்த்து
ஆயிரம்யோசனை தூரம அந்தரமாயிருக்கிறது
இந்தக்கனிபறிக்க எவராலும்முடியுமென்று
இந்தனை தூரத்தி லிருக்கின்றமாங்கனியை
எப்படிக்குறாமபறித்து ஈந்திடலாம்துரோபதைக்கு
என்றுநினைத்து எழிலவிசையனப்பொழுது
வில்லைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அம்புறாத்தூணியிலே அலகம்புதானெடுத்து
ஆத்தசந்த்ரபாணமதை அருச்சுனருமுச்சரித்தார்
மந்திரதூபமிட்டு வாங்கிவிட்டானக்கனிமேல்
மார்புறவாங்கியல்லோ தோள்புரவிட்டானே
வருகுது அஸ்திரந்தான் மாங்கனியைத்தன்னூருசுது
மரத்திலபழத்தையல்லோ பாணமறுக்கையிலே
அந்தக்கனிவிழுமாம் அண்டாண்டந்தானதிர
அண்டங்களதிர்ந்துவிழ அவனிபாதாளம்விழ
பூமியதிர்ந்துவிழ பூலோகந்தத்தளிக்க
கைலையதிர்ந்துவிழ எமலோகந்தத்தளிக்க
கெற்பங்கலங்குது கெந்தருவலோகமெல்லாம
ஓங்குமேருங்கால்தான் ஒருபக்கம்சீர்வாங்கும
நட்சத்திரங்களெல்லாம் நாலுதிக்குமதானுதிர
பூமியதிரசேடன் புஜத்தோடேபுஜமதிர
ஆதிசேடன்தானும் அதிர்ந்துமோஞ்சுக்க
ஆகாசமதின்றதிர அங்கப்போய்விழுந்தது
மரத்திலிருந்தகனி மணமேல்விழுந்தது
அருச்சுனருந்துரோபதையும் அக்கனியைப்பார்த்தார்கள்
பாரமலைபோலே பருவதம்போற்றோணுகுது
இருவராலாகாது இந்தக்கனியெடுக்க
இந்தக்கனியைநா மெடுத்துமுடியாது
ஆறுலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
தோராவடிவழகி துரோபதைநாயகமே
வெற்றிமதயானை வீமனையழையுமென்றான்
அப்படியேநல்லதென்றாள் ஆனந்தவாழ்மாரி

### துரோபதை வீமனை அழைக்க வீமன்வருகிறது.

தோராவடிவழகி துரோபதைநாயகியும
அன்னமதுபோலே ஆரணங்குவந்துமல்லோ
வெற்றிமதயானை வீமருகிலவந்து
அருச்சுனராசருமமை அழைத்தோடிவாருமென்றார்
சீக்கிரம்வருகவென்று தேன்மொழியுமதனைடனிட்டாள்
வெற்றிமதயானை வீமருகில்வந்து
அப்படியேநல்லதென்று ஆனந்தவாழ்மாரி

இருந்தவிடத்தைவிட்டு எழுந்துநடந்தானே
இருவருமாகவே ஏகிநடந்துவந்து
கனியிருக்குமவ்வனத்தை கடுகியேகண்டார்கள்
தருமரறியாமல் அழைத்துவந்தாளதையலரும்
வெற்றிமதயானை வீமனவனேதுசெய்வான்
அசைக்கியேபார்த்தானே அசையவில்லை அக்கனிதான்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
நகுலசகாதேவர் ராஜாவையழையுமென்றான்
ஆரணங்குதுரோபதையும் அப்படியேநல்லதென்று

துரோபதை நகுலசகாதேவர்களை அழைக்க அவர்கள்வருகிறது.

கொஞ்சியேவந்தாளே கொம்பேரிடையாளும்
நகுலசகாதேவ ராஜாக்கள்முன்னேவந்து
அருச்சனரும்வீமரும் அழைக்கிறார்களுங்களைத்தான்
வாருங்களென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டாள்
நகுலசகாதேவ ராசாக்கள்தான்கேட்டு
அப்படியேநல்லதென்று ஆனந்தமாயெழுந்தார்
மூவர்களுமொன்றாக முடுகிவந்தார்கானகத்தே
மாங்கனிதானிருக்கும் வனத்தில்வந்துசேர்ந்தார்கள்.
நகுலசகாதேவ ராஜர்களும்வந்தாரென்று
எல்லவருமொன்றாகி எடுப்போங்கனியையென்று
ஐந்துபேருங்கூடி அக்கனியைத்தானெடுத்தார்
என்னபலங்கொண்டு இழுத்துவலித்தாலும்
எந்தவிதத்திலேயும் எடுபடலைஅக்கனிதான்
சிந்தைகலங்கினார்கள் திடுக்கிட்டுமெய்மறந்தார்
மெத்தப்பயமாச்சே வேந்தர்கள்நால்வருக்கு
தோராவடிவழகி துரோபதையைத்தான்பார்த்து
அழகான தருமருக்கு அறிக்கையிடுமபெண்ணேயென்றார்
தோராவடிவழகி துரோபதையைத்தான்பார்த்து
ஆகட்டுமென்றுசொல்லி அப்படியேநல்லதென்று

மாங்கனியினால் ஐந்துபேருந் திகில்பட்டுத் துரோபதை
தருமரை அழைக்க தருமர்வருகிறது

துள்ளியெழுந்தாளே துரோபதைநாயகியும்
ஓடிநடந்தலவோ ஒருநொடியில்வந்தாளே
தருமரெதிரில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
வாள்விஜயரருச்சுனரும் மாங்கனியைத்தானறுத்தார்
எடுத்தாலெடுபடலை யென்றுவரச்சொன்னார்காண
வாருமையாவென்றுசொல்லி வரிந்தியேதெண்டனிட்டாள்
தக்கபுகழுடைய தருமராதுகேட்டு
இதுஎன்ன அதிசயங்களென்றேயெழுந்திருந்தார்
தர்மரும்துரோபதையும் இருவருமவர்தார்கள்

மாமரத்தருகேவந்தார் மகாராசா தருமலிங்கம்
உற்றுப்பார்த்துமே யோசனைபண்ணுகிறார்
தம்பிமார்நாலவரையும தருமரவரழைத்து
சாயம்புமன்னவனும் தருமரங்கேதுசொலவார்
ஆருண்ணுமாங்கனியோ அறியேனே தம்பியரே
எவருண்ணுமாங்கனியோ யேதுமறியேனே
எங்குந்தமேதவர்கள் எடுத்துப்புசிக்கிறதோ
சித்தரிஷியவர்கள் சன்யாசியுண்கிறதோ
மேலுலககந்தருவர் சாலவந்துண்கிறதோ
கைமோசம்வந்ததென்று கடிகியே தருமராயர்

மாங்கனியினால்மோசம்வந்ததென்று தருமர்எம்பெருமானை
நினைத்துதோத்திரம் பண்ணுகிறது.

தக்கபுகழுடைய தருமரவர்பயந்து
சிந்தைகலங்கியவர் திடுக்கிட்டுமெய்மறந்து
உள்ளமுருகிலந்துமல்லோ உடம்புவிடவிடத்து
மண்ணாமனஞ்சலித்து மனதிலேஎண்ணுகிறார்
ஆரைநினைக்கிறார் அளவற்றசிந்தையிலே
எவரைநினைக்கிறார் எண்ணமற்றசிந்தையிலே
மாயன்பெருமானை மனதில்நினைத்தாரே
அண்டமுலகளந்த ஆதிமூலமிங்கேவர
ஏழுலகமாண்டசுவாமி எம்பெருமானிங்கேவர
மண்ணளந்துகணைக்குரைத்த மாயவரிங்கேவர
காடளக்கறிந்த தயாளகுணயிங்கேவர
அகலிகைசாபந்தீர்த்த ஆண்டவரேவாருமையா
எல்லையளந்தவரே யெம்பெருமானிங்கேவர
ஏழைவருந்துகிறேன் எழுந்தருளிவாருமையா
இப்படியாக யிவர்வருந்தும்வேளையிலே

தருமர்இங்கே இப்படிவருந்துவதை எம்பெருமாள்அறிந்து
தான் தருமரண்டைவருகிறது.

பஞ்சவர்கள்வருந்துவதைப்பாரளந்தார்தாமறிந்து
இவருக்குமங்கேதான் அனர்த்தம்வருகுதென்று
சமிகதவரிஷியாலே சாபம்வருகுதென்று
ஆயரவரறிந்து அங்கெனவேதானெழுந்து
இவரையுங்காக்கவென்று அப்பொழுதேவாறாராம்
வட்டமாங்கருடனேறி மாயவனும்வாராரே
வனமாய்வனந்தாண்டி வாராரே தருமரண்டை
காடுசெடி தாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுகனை தாண்டி அதிகவனந்தாண்டி
சிலைவென்றசாடும் செடியும்வனந்தாண்டி
சமிகதவரிஷிவனத்தை தான்கண்டார்மாயவனும்
பஞ்சவர்கள்தாமிருக்கும் பாரவனத்தில்வந்தார்

மாயவரைக்காணுகையில் வளம்பெரியதருமராயர்
ஐந்துபேருமாக ஆயரைத்தெண்டனிட்டார்
முக்கால்வலம்வந்து முடியணமித்தெண்டனிட்டார்
நாற்காலவலம்வந்து நமஸ்காரத்துடன்தெண்டனிட்டார்
தெண்டனிட்டயன்னவர்கள் திரும்பியெழுந்திருந்து
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
இட்டதோராசனத்தில் எம்பெருமாளவீற்றிருந்தார்
பஞ்சவரைத்தான்பார்த்து பாரளந்தாரேதுசொல்வார்
ஏதுவகையாக என்னையழைத்தீர்கள்
அழைத்தவொருகாரியத்தை அடைவுடனேசொல்லுமெனை
(உங்கள்) மனதிலிருக்கிற மருமத்தைசசொல்லுமெனுர்

தருமர்மாங்கனியின் வரலாறுசொலலுதல்

மாயன்பெருமானும் வார்த்தைகளேதுசொல்வார்
சாயாமபுமன்னவனுர் தருமரவரேதுசொல்வார்
ஆகாததம்பிமா ராசருடன்பிறந்தேன்
பொல்லாததம்பியுட னல்லற்படப்பிறந்தேன்
எந்தன்விதிவசத்தை என்னவென்றுசொலவேன்காண்
ஆருண்ணுமாங்கனியோ அறியேனேமாயவரே
எவருண்ணுமாங்கனியோ யேதுமறியேனே
ஆகாததம்பியர்கள் அறுத்துவிட்டாரென்னசெய்வேன்
எமபெருமாள்தமையழைத்தா லெலலாந்தெரியுமென்று
வந்தீரேமாயவரே வயனங்கள்சொல்லுமென்றுர்

எம்பெருமாள் மாங்கனியின் வரலாறுகேட்டபஞ்சவர்களைப் பயங்காட்டி மனஞ்சோதிக்கிறது

தர்மருரைகேட்டு சாமியவரேதுசொல்வார்
மாயன்பெருமானும வார்த்தையங்கேதுசொல்வார்
கைம்மாசம்வந்துமே கட்டழகாயென்னசெய்வோம்
தபசிற்பெரியவனகாண சுயிந்தவரிஷியாரும
வரத்திற்பெரியவன்காண் மகாரிஷிதவர்க்கொப்பிடலாம
யோகத்திற்பெரியவர்காண உறுதசயாசியர்காண
ஒருநூறுவருஷமட்டும் யோகத்திலேயிருப்பார்
அவ்வருஷமசென்றபின்பு அறுத்திடுவார்மாங்கனியை
அறுத்துப்புசித்திடுவார் அந்தமகாரிஷியும்
அந்தமகாரிஷியும இந்தவனத்துக்கு
வருகிறநாளாச்சே மாங்கனியறுத்தீரே
வந்துமவர்பார்த்து மாங்கனியெங்கேயென்று
கோபித்துக்கண்சிவந்து கொல்லநினைப்பாரே
கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
கல்லாகமண்ணுக்க கடுகிச்சபிப்பாரே
மன்னாகமண்ணுக முன்னேசபிப்பாரே
இன்றுமிழைத்திருந்தேன் இறந்துவிடநாளாச்சே

சேனாள்பிழைத்திருந்து செத்துவிடநாளாச்சே
திரியன்செய்தவஞ்சனைக்கு சிவனைத்தப்பிப்பிழைத்தீரே
மாயாவிசெய்ததற்கு மாளாமலிருந்தீர்கள்
இந்தவனத்திலே இறந்துவிடகாலமோதான்
சயிந்தவரிஷியாலே சாவுவரநாளாச்சே
இதற்கோஎனையழைத்தீர் என்றுரேயாயவனார்

எம்பெருமாள்கனியின்வரலாறுசொல்லிதன்னாலேஒன்றும்

ஆகாதென்றுசொல்ல தருமர்புலம்புகிறது.

இப்படியாகவேதான் செப்பத்திருமாலும்
இவ்வார்த்தைகேட்டாரே எழிலானதருமலிங்கம்
முகில்வண்ணார்முன்னாலே முறையிடத்தொடங்கினார்
ஆகாததம்பிமார் அசடருடன்பிறந்தேன்
பொல்லாததுஷ்டருடன் பிறந்தகொடுந்தன்மையினால்
(என்)அங்கங்குலையுதே ஆண்டவரேஎன்னசெய்வேன்
என்னையறியாமலிக்கினியைத்தானறுத்தார்
அறிந்தேதானேயாமானால் அறுக்கவொட்டேனிக்கனியை
பார்த்தேதானேயாமானால் பறிக்கவொட்டேன்மாங்கனியை
அடியார்கள்செய்தபிழை ஆண்டவனேமனம்பொறுத்து
தெரியாதாற்செய்தகுற்றம் தேவர்மனம்பொறுத்து
(உன்)உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகாமல்
(உன்)பெட்டியின்பூஷணங்கள் பெருமைகுலையாமல்
(உன்)தோளிற்செபமாலை தொண்டழிந்துபோகாமல்
(உன்)கையிற்செபமாலை கணக்குலைந்துபோகாமல்
காக்ககடனுனக்கு கரியமாலெம்பெருமாள்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைதஞ்சமென்பேன்
எவரைசதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
என்றுதருமரங்கே நின்றுபுலம்பக்கேட்டு
மாயன்பெருமானும் மறுவார்த்தையேதுசொல்வார்
என்னைவெறுக்காதே என்மேல்சலியாதே
உத்தமரே உங்களாலே மெத்தப்பொழுதாச்சு
ஏகச்செலவருளும் என்றார்பெருமாளும்
தக்கபுகழுடைய தருமராசரேதுசொல்வார்
பரிதாபம்நாங்கள்படப் பார்த்துமேபோவதற்கு
மனமும்வருகிறதோ மாயவரேவுந்தனுக்கு
என்றவரைகேட்கவேதுசொல்வார்மாயவரும்
பகர்ந்தவந்தவார்த்தைக்குப் பொருந்தவேணுமிக்கனிதான்
ஐவருடன்வார்த்தையினால் அம்மரத்திலொட்டவேணும்
அல்லாதேயாமானால் ஆராலுமுடியாது
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
அடியேனுலாவந்து ஆண்டவரேசொல்லுமையா

எம்பெருமாள் ஐவருடைய எண்ணமும துரோபதை
எண்ணமும அறிந்து மாங்கனிமரத்தில்
பொருந்தினது

தருமருரைகேட்டு சாமிமனமகிழ்ந்து
மாயனபெருமானும் வார்த்தையவரேதுசொல்வார்
ஐவர்மனதறிய ஆண்டவரேதுசொலவார்
தக்கபுகழ்பெரிய தருமரேநீர்கேளும்
(உன)மனதிலேதானிருககும் மர்மத்தைசொன்னீரானல்
வஞ்சனைகளொன்றுமே மனக்கவடுவையாதே
உண்டானபடியாக உரைததீரேயாமாகில்
அற்றுவிழுந்தகனி அமமரத்திலொட்டுமென்றார்
மண்மேல்விழுந்தகனி மரத்தின்மேலேறுமென்றார்
அல்லாமேயாமானால அக்கனிபொருந்தாது
இல்லாமேயாமானால இறந்துமடிவீர்கள்
சொல்லாமேபோனால் சுருக்காய்மடிந்திடுவீர்
பெருமாளவர்சொலலப் பேர்பெரியதருமலிங்கம்
மாயருரைகேட்டு மகாராசரேதுசொல்வார்
மனதிலிருக்கின்ற மர்மமதையேதுசொல்வார்
தன்மனதிலுள்ளபடி தார்வேந்தரேதுசொல்வார்
பெரியதந்தைபெற்றெடுத்த பிள்ளைதுரியோதிரன்
தம்பிமார்தன்னுடனே தானுஞ்சுகமானல்
ராச்சியம்நலமாகி நாமும்சுகமானல்
நாடெங்குவாழ்ந்திருந்தால் கேடென்றுமில்லையென்று
பெரியோருரைப்படிக்குப் பூமிசுமக்காதோ
என்றுநினைவொழிய இனியொன்றுநானறியேன்
இப்படிக்குத்தானுரைத்து இருந்தாரேதர்மலிங்கம்
அப்போதுமாங்கனியும் ஆகாசமேயெழும்பி
அறுந்துவிழுந்தகனி அந்தரத்திலெழும்புகுது
இருநூறுயோசனைகள் எழும்பியேநின்றுதங்கே

மாயனுக்குதருமர் மனோபாவஞ்சொல்ல மாங்கனி
இருநூறுயோசனை தூரமெழும்ப பெருமாள்
வீமனைகேட்கிறது.

எம்பெருமாள்மாயவருமேதுசொல்வாரப்போது
மதவீமனையழைத்து மாயவனுமேதுசொல்வார
உன்மனதிலுள்ளபடி யுரையுமென்றார்மாயவரும்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான
திரியோதிராசன் சேனைபரிகலங்கள்
குருடன்மகனூராங் குடிகெடுத்தராசர்களை
நாலால்கடுந்திரளார் நூற்றுவர்ராசர்களை
கௌரவர்சேனைகளைக் கண்டகண்டமாகியல்லோ
ஆனைகுதிரைகளை அழகுள்ளசேனைகளை

சாமத்துரோகி சகுனியவனையுமே
கொன்று அந்தமாக்கி கொம்பனையாள் துரோபதையை
கொற்றார்குழலியரைக் கூந்தல்முடிக்கவைப்பேன்
துகிலையுரிந்தவொரு துர்சாதன் ஊதிரமெல்லாம
வாரிக்குடித்தாலே வயிறெரிவுதீருமையா
அள்ளிக்குடித்தாலே ஆங்காரந்தீருமையா
பார்பெரிய அண்ணருக்குப் பட்டாதரித்தாலே
அப்போதுஎன்மனது ஆயாசந்தீருமையா
வெற்றிமதயானை வீமனுரைக்கையிலே
என்றபொழுதே எழும்புதுமாங்கனிதான்
சாற்றுமொரு நாலுயோசனை தூரமதின்றிடுமாம்

மாயனுக்குவீமன்மனோபாவஞ்சொல்லமாங்கனி
நாலுயோசனை தூரமெழும்பப் பெருமாள்
அருச்சுனனைக்கேட்கிறது.

அப்போதுஎம்பெருமாள் அங்கெனவேயேதுசெய்தார்
அருச்சுனனைப்பார்த்து ஆணழகர்கேட்கலுற்றார்
வாள்விசையனார்தனிட மனதிலினைத்ததெல்லாம்
ஒன்றுமொளியாமல் உரையுமென்றார்மாயனார்
என்றுமவருரைக்க எழில்விஜயனார்ச்சுனனும்
மாயனுரைகேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
கன்னன்சகுனியும் காங்கேயராவரை
கொல்லுகிறேனென்றுசொல்லிக் கொடியசபதமிட்டேன்
சங்கமரைகொல்லுகையில சமர்பூமிக்ஷேத்திரத்தில்
அமரதர்சமரதர் அளவற்றராணுவங்கள்
அனைவரையுங்கொன்றுமே அண்ணருக்குப்பட்டங்கட்டி
அண்ணருக்கும்பட்டங்கட்டி அடிபணிந்துநிற்கவென்று
எண்ணியிருக்கிறேன் இனியொன்றுமிலையென்றான்
அறுநூறுயோசனையில நின்றது அக்கனிதான்

மாயனுக்கு அர்ச்சுனன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனி அறுநூறுயோசனை தூரமெழு
ம்ப பெருமாள நகுலனைகேட்கிறது.

அப்போதுஎம்பெருமாள் அங்கனவேயேதுசெய்தார்
நகுலனைத்தானழைத்து நாரணருமேதுசொல்வார்
காமமுடியான் நகுலனைஎனறழைத்து
மனதிலினைத்தொரு மர்மத்தைச்சொல்லுமென்றார்
மாயருரைகேட்டு மன்னவனுமப்பொழுது
நாமமுடியான் நகுலனுமேதுசொல்வான்
துரியோதிரன்படைகள் சேனைகளைக்கொன்றழித்து
ஆனைசேனைபரிவாரம அடங்கலுங்கொன்றழித்து
மாரனைய ரத்தங்கள் வடியவிட்டுமண்மேலே
அதன்வத்திசேனைக்கோ அண்ணருக்குப்பட்டங்கட்டி

(என்)கண்ணாலேபார்ப்பதற்கு கருத்தில்நினைத்தேனையா
என்றுமவனுரைத்தான் இருந்தானே குலவனுமே
அந்தவுரைகேட்டு அழகானமாங்கனியும்
அந்தரத்திலேநின்றகனி அப்புறத்திலேபோகுது
எண்ணூறுயோசனையில் நின்றது அக்கனிதான்

பெருமானுக்கு நகுலன்மனோபாவஞ்சொல்லமாங்
கனியெண்ணூறுயோசனை தூரமெழும்பப்
பெருமாள்சகாதேவனைக்கேட்டது

எம்பெருமாள்மாயவருமேது செய்தாரப்பொழுது
சகாதேவராசாவை சாமியாக்கேட்கலுற்றார்
இளையசகாதேவா எண்ணமெல்லாஞ்சொல்லுமென்றார்
நாமமுடியான் சகாதேவனேது சொல்வான்
திரியோதிரன்படையை சேனைபரிதளத்தை
உன்பாதமசிரசில்வைத்து உக்கிரமாய்ச்சண்டைசெய்து
அண்ணனுக்குப்பட்டங்கட்டி அவனிதனையாளவென்று
எண்ணியிருக்கிறேனே இதுவேநினைவொழிய
மற்றொன்றுமில்லையென்று மாயர்பதம்பணிந்தான்
இவ்வாறுதானுரைத்து இருந்தான்சகாதேவன்
அப்போதுமாங்கனியும் அனேகதூரமெழும்பி
தொளாயிரம்யோசனை தூரநின்றதக்கனிதான்

எம்பெருமானுக்கு சகாதேவன் மனோபாவஞ்சொல்ல
மாங்கனிதொளாயிரம்யோசனை தூரத்திலேநிற்க
எம்பெருமாள் துரோபதையைக்கேட்கிறது

ஆதிநாராயணரும் அங்கேயேதுசெய்தார்
மாயன்பெருமானும் வார்த்தைகளேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றகண்ணே பத்தினியேதுரோபதையே
நெருப்பிற்பிறந்தவளே நீலபசுங்கிளியே
ஐவருக்குந்தேவியரே அழியாதபத்தினியே
மனதில்நினைத்ததெல்லாம் மங்கையரேசொல்லுமென்றார்
நெஞ்சில்நினைத்ததெல்லாம் நேராகச்சொல்லுமென்றார்
அப்போதுதிரௌபதையும் நாரணருக்கேதுசொல்வாள்
தூரத்திலம்புலியாள் தூசிப்படாபத்தினியாள்
வானத்திலம்புலியாள் மாசுபடாப்பத்தினியாள்
என்னவென்றுசொல்லலுற்றாள் பேடைப்பசுங்கிளியாள்
திரியோதிரன்பாளையத்தை செருக்களங்கள்கொன்றழித்து
ஐவர்களிட்டதொரு அருஞ்சபதஞ்சென்றபின்பு
வெற்றிமதயானை வீமருடைகையாலே
பாம்புக்கொடிவேந்தன் பட்டபிறகாக
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்பட்டபின்பு
நாகக்கொடியோனும் நாசமடைந்தாலே
(அவன்)மல்லாக்கவிழுந்தவுடன் மார்மேல்நானிருந்து

மார்பைப்பலகையாக்கி மார்பெலும்பைச்சீப்பாக்கி
மார்பில்வருமுதிரமெல்லாம் வாரித்தலைதடவி
கல்லெண்ணெயைப்போலே நலங்கிட்டுகூந்தலுக்கு
சிப்புசிக்கல்கோலெடுத்து சீவிமயிராற்றி
அவன்-குடலைப்பிடுங்கியல்லோ கொண்டைக்கயிறுகட்டி
உடலின்பிச்செடுத்து யிறுக்கித்தலைமயிர்முடிப்பேன்
என்-விரித்தமயிர்முடிக்க வேணநாள்சென்றிமோ
அவிழ்ந்தமயிர்முடிக்க அனேகநாள்சென்றிடுமோ
கூந்தல்முடிப்பேனோ குறைகளெல்லாந்தீர்வேனோ
சாமியவராலே தலையைமுடிப்பேனோ
என்றுநினைத்தேன் இனியொன்றுநானறியேன்
இந்தவிதஞ்சொல்லி இருந்தாளேபாஞ்சாலி

துரோபதை பனேபாவஞ் சொன்னது சரியல்லாமல்
ஷோடாயிரம் யோசனை தூரம்போன மாங்கனி
பூமியில்விழ பெருமாள் துரோபதையைக்
கேட்கத் துரோபதை சொல்லல்.

துரோபதைசொல்லலுமே தூரஇருந்தகனி
அந்தரத்தில்நின்றகனி அவனியதில்விழுந்தது
தூரத்திற்போனகனி அற்றுவிழுந்தது
கண்டார்கரியமாலுங் கடுகெனவேயேதுசொல்வார்
மனதிற்கபடுவைத்து வஞ்சனைகள்சொன்னதினால்
அந்தரத்தில்நின்றகனி அவனியிலேவிழுந்துதென்றார்
மீதிவிதாளித்தாயே எந்தனுக்குச்செல்லுமென்றார்
ஒன்றுமொளியாமல் உத்தமியேசொல்லுமென்றார்

துரோபதை மறுபடியும் பெருமானுக்கு உண்மையைச்
சொல்லமாங்கனி மரத்திற்பொருந்தினது

அப்போதுரோபதையும் ஆரணங்கேதுசொல்வாள்
அண்ணாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
இன்னபொருபாவம் இனியொன்றுநானறியேன்
மற்றொருபாவம் வஞ்சனைகளொன்றறியேன்
வேறொருவஞ்சனைகள் இடறுகள்நானறியேன்
அண்ணாகரியமாலே அடியேனொருவார்த்தை
பார்த்தனைமாலையிடப் பாஞ்சாலனென்னைப்பெற்றான்
வயிற்றிற்பிறந்ததில்லை வனகொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
குமிழிதண்ணீரில் உள்ளேயணைச்சேருமுண்டு
அருக்கிநசாற்றதனில் அலைத்துருப்புதானுமுண்டு
காலினிழுமுண்டவற்கு கண்டங்கருப்புமுண்டு
[illegible]கமலமுமுண்டு நிலாதனிற்பூச்சியுண்டு
தண்ணீர்க்கலையுமுண்டு சந்திரற்குமாசுமுண்டு
சந்திரற்குமாசுமுண்டு சற்றேகருப்புமுண்டு

குண்டுமணிக்காணும் கொஞ்சங்கருப்புமுண்டு
எனக்கு-மையேகருப்பொழிய மற்றக்கருப்புமில்லை
பொட்டேகருப்பொழிய பின்னேகருப்புமில்லை
அக்கினியிற்பெண்பிறந்தே ஐவரையுமாலையிட
நெருப்பிலேபெண்பிறந்தேன் அருச்சுனரைமாலையிட
என்-கூடப்பிறந்தது கோதண்டமானவில்லு
பத்தரையில்நான்வளர்ந்தேன் பார்த்தனோவேணுமென்று
அடுக்கரையில்நான்வளர்ந்தே னர்ச்சுனரேவேணுமென்று
வளர்ந்துசமைந்தேனே மாலையிடும்நாளானேன்
போதவளர்ந்தேனே பிள்ளைபெறும்நாளாச்சு
இப்படியாக விருக்கின்றவேளையிலே
எழிலான அர்ச்சுனற்கு என்னைக்கொடுக்கவென்று
என்தகப்பன்பாஞ்சாலன் எண்ணமிருக்கையிலே
அரக்குமாமாளிகையில் ஐவர்மடிந்தாரென்று
மாண்டார்களென்றுசொல்லி மண்டலத்திற்பேராச்சு
செத்தார்களென்றுசொல்லி ஜெகமெல்லாம்பேராச்சு
அப்போதுஎன்தகப்பன் ஆயாசப்பட்டுருகி
அருச்சுனற்கென்றபெண்ணை ஆர்க்குநீகொடுப்பேனென
அருச்சுனரைப்போலாக ஆண்பிள்ளையில்லையென்று
வில்லைவளைப்போர்கள் மேதினியிலில்லையென்று
ஏலம்பசுங்கிளியை எப்படிகாப்போமென்று
எண்ணுதுமெண்ணியே இருந்துவிசாரமிட்டார்
இப்படியாகயிருக்கின்றகாலத்தில்
வந்தாரேஅந்தவேளை மகாவியாசபகவானும்
என்தகப்பன்பாஞ்சாலன் எழுந்திருந்தோடிவந்து
கண்டவுடனேயல்லோ கடுகஎழுந்திருந்து
வந்தவியாசரை வணங்கியேதெண்டனிட்டு
இருமிருமென்றுசொல்லி யிட்டார்சிங்காதனங்கள்
இட்டசிம்மாதனத்தில் ஏறியவர்வீற்றிருக்கார்
என்தகப்பனைப்பார்த்து என்னவென்றாருன்க்ஷேமம்
அப்போதுஎன்தகப்பன் ஆயாசமாயுரைப்பார்
எந்தன்விசேஷமெல்லாம் எடுத்துஅவர்க்குரைத்து
அருச்சுனற்கென்றுநான் அனலிற்பிறந்ததுவும்
அரக்குமாளிகையி லவரிறந்ததுவும்
இத்தனையுஞ்சொல்லி இருந்தாரேஎன்தகப்பன்
அப்போவியாசரும் அரசனுடைரைத்ததெல்லாம்
செவிகொடுத்துக்கேட்டுயல்லோ சீக்கிரமாயேதுசொல்வார்
உத்தமியாள்தன்னுடனே ஒன்றாய்ப்பிறந்தவில்லு
கூடப்பிறந்தொரு கோதண்டமானவில்லு
எடுத்துதிருத்துமென்றார் எல்லாருந்தானறிய
பொருவில்லைவளைத்தவர்க்குப் பெண்ணைத்தருவேனென்று

ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள் தானறிய
அரசர்கள்தானறிய அறையும்பறையோசை
அப்போதறிந்திடலாம் ஐவருடசேதி
என்றுமவருரைத்து ஏகினடந்தாரே
அந்தவுரைகேட்டு ஆனந்தமாயெழுந்து
கூடப்பிறந்தவொரு கோதண்டமானவில்லை
வந்துவளைத்தவற்கு மாலையிட்டுத்தருவேனென்று
வில்லைவளைத்தவற்கு மெல்லியைத்தருவேனென்று
ஐம்பத்தாறுதேசத்து அரசர்க்குமோலைகந்தாரே
பெண்ணைத்தருவேனென்று பிடித்தார்கள்சின்னத்தொனி
சின்னத்தொனியையல்லோ தேசமெல்லாமூதிவைத்தார்
பாஞ்சாலன்சீமையெல்லாம் பந்தலலங்கரித்தார்
எங்குமலங்கரித்தார் இராஜாக்கள்வந்திருக்க
பாஞ்சாலன்சொன்னவொரு பரிவர்ணவார்த்தையினால்
ஐம்பத்தாறுதேசத்துள்ள அரசர்கள்வந்திருக்க
நாலுபுறத்திலுள்ள ராஜரெல்லாம்வந்தார்கள்
மூத்துமுடிதரித்த முடிமன்னரானவரும்
பச்சைமுடிதரித்த பட்டத்துராஜர்களும்
வச்சிரமுடிதரித்த மண்டலத்தரசர்களும்
காசிகாண்டவொரு கர்னமகாவீரியரும்
நாலுதிக்கிலுண்டான ராஜரெல்லாம்வந்தார்கள்
அப்பெரியபந்தலிலே அருச்சுனருப்பீருமாய்
அன்றொருபார்ப்பானாய் அங்குநீங்கள்வந்திரமே
பாஞ்சாலன்தானறியான் பாரளந்தானவனை
ஆருமறியாமல் அவரெடுத்தபார்க்கமெல்லாம்
உங்கள்வடிவுதன்னை ஒருவரறியார்கள்
அந்தச்சமயத்தில் அடைவுடனேயென்தகப்பன்
வந்திருந்தரசர்களை வளையுமென்றார் வில்லதனை
எப்பெரியரசர்களும் இவ்வில்வளைக்கறியார்
காண்டீபந்தனையெடுப்பார் கலங்கியேவைத்திடுவார்
ஆராலும்முடியாது அப்பெரியவில்வளைக்க
காசிகாண்ட கருணனெழுந்திருந்து
வில்லைவளைத்துமல்லோ வில்நாரிபூட்டுகையில்
எண்ணுதுமென்னினேனே இவனைபுருஷனென்று
வடிவுசீலையுடையான் மாலையிடவேணுமென்று
எண்ணினேனென்மனதில் இனியொன்றுதானறியேன்
வில்லைவளைக்காமல்கர்ணன் வில்தெறித்துபோய்விழுந்தான்
அன்றுமொருபார்ப்பானாய் அருச்சுனர்வில்வளைத்தார்
நீர்பார்த்துமீனெய்தார் நிலத்திலங்குபூமுடியார்
பார்ப்பான்கழுத்திலே அணியமாலைபோடுமென்றார்
குந்திமோகினவற்குத் துடித்தனஞ்செய்வேனே

என்றல்லோமாலைதன்னை எடுத்தேகழற்றிவிட்டேன்
கர்னன்கழுத்திலே கைமாலைவீழாமல்
பார்ப்பான்கழுத்திலே பணிமாலைவிழுந்தது
அப்பாவஞ்செய்ததல்லால் ஆயமேனேனொன்றுமில்லை
அருச்சுனற்குமாலையிட்டு ஐவருக்குந்தேவியானேன்
பார்த்தருக்குமாலையிட்டு பஞ்சவற்குதேவியானேன்
மற்றொருபாவங்கள் மாயவரேசெய்ததிலேயன்

### எம்பெருமானுக்குத் துரோபதை தன்கலியாணச் சங்கதிசரியாய்ச்சொல்ல மாங்கனிமரத்திற் பொருந்தியது.

தோராவடிவழகி துரோபதையாள்சொல்லுகையில்
என்றபொழுதிலே எழும்புதுமாங்கனிதான்
பொட்டெனவேதானெழும்பிப் பொருந்துதேமாங்கனியும்
தருமர்மனங்குளிர்ந்து சந்தோஷமானாரே
பஞ்சவர்கள் ஐந்துபேரும் பார்த்துமகிழ்ந்தார்கள்

### எம்பெருமாள் பஞ்சவர்க்குப் புத்திசொல்லிதான் அவர்கையில் செலவுபெற்று துவாரகைக்குப்போகிறது.

ஐவர்மகிழ்ந்தபின்பு அரிராமரேதுசொல்வார்
பஞ்சவரைத்தானழைத்துப் பாரளந்தாரேதுசொல்வார்
இந்தவனந்தனிலே இருந்துசிலகாலம்
மற்றொன்றுவந்தாலும் என்னைநினையுமென்று
பத்திரமாகயிருங்களென்றார்பஞ்சவரை
போகச்செலவுதாருமென்றெழுந்தார்புண்ணியரும்
பஞ்சவர்களைவரும் பாஞ்சாலிதுரோபதையும்
ஐவருந்துரோபதையும் ஆண்டவனைத்தெண்டனிட்டு
போய்வாருமென்றுசொன்னார் புகழ்வேந்தரைவர்களும்
விடைபெற்றெழுந்தாரே வேந்தர்பெருமாளும்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அநேகவனந்தான்தாண்டி
சில்லென்றகாடுஞ்செடியும்வனந்தாண்டி
துவாரகாபுரியைநாடி துரிதமுடன்வந்துவிட்டார்
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போனபின்பு
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையும்
மன்னர்பஞ்சபாண்டவரும் மயிலனையாள்துரோபதையும்
அந்தவனத்திலே அநேகநாள்வாசம்பண்ணார்
இப்படியாக விருக்கிறார்பஞ்சவர்கள்

ஐந்தாவது சபிந்தமகாரிஷிவனம் முற்றிற்று.

## ௯-வது. காமதேனுபர்வதம்.

ஆறாம்வருஷம் பிறந்ததுஐவருக்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
கூடைதலையிலே குடிவாழ்க்கைகாணகத்தில்
கோணிவைத்துசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மண்ணிவைத்துசீமாடு வனவாசம்போறார்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடுகியேதானடந்தார்
காமதேனுவனந்தனிலே கடுகவந்துசேர்ந்தார்கள்
ஐந்தடுக்குபர்ணசாலை அழகாகஉண்டுபண்ணுர்
ஏழடுக்குபர்ணசாலை எழிலாகஉண்டுபண்ணுர்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
அனேகநெடுநாளாய் அவ்வனத்திலேயிருந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே

### துரியோதிரன் ஆலோசனை.

தென்னாழுடிவேந்தன் திரியோதிரன்தானும்
விண்ணுங்காழுடிவேந்தன் மாபாவிவெவ்வினைசெய்தான்
சபைகள்நிறைந்திருக்கச் சர்ப்பக்கொடியோனுரைப்பான்
காரியகாரிஸ்தியாரைக் கருதித்தவப்பண்ணி
ஐவரையுங்கொல்லுமென்று அனுப்பினான்வனந்தனிலே
கொல்லுகிறேனென்றுசொல்லி கொப்பெனவேபோனுரே
(ஐவர்)செத்துதப்பிபிழைத்ததுவுஞ் சேதிதெரியவில்லை
ஆடாதூதுவரே ஆயிரம்பேர்வாருமென்றான்
அப்படியேதூதுவர்கள் அனேகரும்வந்தார்கள்
திரியோதிரனைவந்து தெண்டனிட்டுஏதுசொல்வார்
எங்களையழைத்தபணி ஏதுபணிசொல்லுமென்றார்
அப்போதிரியோதிரன் அவர்களுக்குஏதுசொல்வான்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியப்போனுரே
எந்தவனத்திலே இருக்கிறுரென்றறியேன்
நூவநம்மைக்காணுல் ஆராய்ந்துபார்த்துவாருங்கள்
என்றுமேசொன்னனே எரிநாகக்கொண்டவனும்

### துரியோதிரன்தூதர்கள் பஞ்சவரைக்காணவருகிறது.

ராசகன்சொன்னதெல்லாம் மல்லர்கள்தான்கேட்டு
வீரர்கள்தூதுவர்கள் மகாராசன்சொற்படிக்கு
அத்திபுரங்கண்டி அவசரமாய்வாறார்கள்
குருஷேத்திரபூமி குருபூமிதேசம்விட்டு
காடுஞ்செடிகடந்து கடுகவேவாறார்கள்
கல்லின்முழுக்கதொரு செடியும்வனந்தாண்டி
சூரியன்வனந்தனிலே தூதர்தேடிப்பார்த்தார்கள்
அங்கேயுங்காணுல் அப்பாலேதேடிவாரார்

ராமரிஷிவனத்தில் நடந்தெங்குந்தேடிவாரார்
அங்கேயுங்காணாதே அப்புரந்தேடிவாரார்
முருக்கமகாரிஷிவனத்தில் முடுகியேதேடினார்கள்
அங்கேயுந்தேடியே அப்பாலேபோகலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகியேதேடிவந்தார்
அங்கேயுங்காணாமல் அப்போதேபோகலுற்றார்
சயிந்தவரிஷிவனத்தில் கடுகியேதேடிவந்தார்
அங்கேயுங்காணாமல் அப்புறந்தேடிவாரார்
காமதேனுபர்வதத்திற் கண்டார்கள்பஞ்சவரை
ஐவரையுங்கண்டவுடன் அங்கேபயந்தெளிந்தார்
பஞ்சவர்களைவரையும் பார்த்துத்திரும்பினார்கள்
காவலர்களைவரையுங் கண்டுதிரும்பினார்கள்

துரியோதிரனனுப்பிய தூதுவர்கள் காமதேனு
வனத்தில் பஞ்சவரைக் கண்டு துரியோ·
தனனுக்குச் சொல்லல்.

கண்டல்லோ தூதுவர்கள் கடிகிவழிநடந்தார்
ஆறுகளைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
காடுவனங்களுமே கரியமலைதான்தாண்டி
ஆனந்தமாகவே அத்திபுரத்தில்வந்தார்
திரியோதிரனிருக்கும் சிங்காதனத்தருகே
மகாராசன்முன்னாக வந்துபணிந்தார்கள்
வந்துபணிந்துமல்லோ மன்னருக்கேதுரைப்பார்
துரியோதிராசனுக்கு சேதிகளைச்சொல்லலுற்றார்
ஐவரைத்தேடியே ஆரணியப்போனோமே
மாண்டார்களென்றீரே வனத்திலேகண்டோமே
காமதேனுபர்வதத்திற் கண்டுவந்தோம்பஞ்சவரை
அந்தவனத்திலே ஐவரிருக்கின்றார்கள்
பார்த்துபறந்துவந்தோம் பஞ்சவர்களைவரையும்
கண்டுபறந்துவந்தோம் காவலர்களைவரையும்
என்றுமொழிந்தார்கள் ஏகிவந்ததூதுவர்கள்
துள்ளிமனங்கொதித்து சொல்லுவானோர்வார்த்தை

துரியோதிரன் பஞ்சவர்கள்மேல் சண்டைக்குப்போகச்
சகுதியுடன் ஆலோசனை பண்ணுகிறது.

என்றவுரைகேட்டு எரிநாகங்கொண்டவனும்
சபைகள்நிறைந்திருக்கச் சர்ப்பக்கொடியோனுரைப்பான்
ஐவர்வனவாசம்போய் ஐந்தாறுவருஷமுண்டு
வில்வித்தை ஆண்மைகளை மெத்தமறந்திருப்பார்
ஆனைகளுஞ்சேனையும் அண்டலொண்ணாப்படையுமில்லை
அக்ரோணிசேனைகூட்டி ஐவர்மேல்படையெடுத்தால்
ஐவரைக்கொன்றிடலாம் அதம்பண்ணிப்போட்டிடலாம்

இதுவே சமயங்காண் இராசரைக்கொல்லுகைக்கு
அம்மான் சகுனியே நீ ஆலோசனை சொல்லுமென்றே

## சகுனி திரியோதினனைப் பஞ்சவர்களுடன் சண்டைக்குப் போகச்சொல்லுகிறது.

அப்போது சகுனியும் அங்கேயெடுத்துரைப்பான்
கொல்லைக்குப்பல்லியவன் குடிக்குச்சகுனியாவான்
இதுசமயமிதுசமயம் இவன்குடியைக் கெடுக்கவென்று
மருமகனுக்காக வார்த்தைகளேது சொல்வான்
மெய்வார்த்தைசொன்னீர்காண் விஷகாகங்கொண்டவரே
ஐவர்பிழைத்துஇனி ஆரணியம்விட்டுவந்தால்
தப்பிப்பிழைத்துவந்தால் தர்மர்பஞ்சபாண்டவர்கள்
பங்குள்ளபிரகாரம் பாதிநாடுகேட்பாரே
இப்போபடையெடுத்து இராசரைக்கொன்றிடலாம்
நல்லசமயங்காண் நமக்குக்கிடைத்ததென்று
தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பெருமான்
மாமனுரைகேட்டு மகாராசரேதுரைப்பார்

## திரியோதிரன் சண்டைக்குப்போகச் சேனைகளைத் திட்டப்படுத்துகிறது.

ஆர்சானும்ராசர்களே அருகிருக்கும்மந்திரிகளே
ஐந்துகுருக்களுமே ஆயிரஞ்சேவகரும்
பலபலராணுவமும் பத்துலட்சச்சேவகரும்
சகலானசேனைகளும் நடப்பார்கள்தாதியரும்
அத்தண்டசேனைகளும் அடங்கலும்பயணமென்றார்

## திரியோதிரன் பஞ்சவர்களுடன் சண்டை பண்ணவருகிறது.

அப்போது திரியோதிரன் அவனுடையசேனைகளும்
பயணப்பயணமென்று பயணபேரியடியுமென்றான்
இன்றுவெளிகூடாரப் இயலுடனேபோடுமென்றார்
காட்டுமென்றார்சண்டாவை நகராகஅடியுமென்றார்
அங்கேகட்டான்சண்டாவை அடியுமென்றார்பேரிகையை
அடிபடுதுராடபேரி அண்டங்கிடுகிடென்ன
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
ஆனையின்மேல்பேரிகையும் அசுவத்தின்மேல்டங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஒருகோடிமுரசுகளும்
தாளமொடுதத்தளமும் தவுல்முரசுவீராணம்
பதினெட்டுவாத்தியம் பலதிசையுந்தான்முழங்க
அண்டரண்டந்தானதிர அடிபடுதபேளவகை
முக்காததூரமட்டும் முரசுமுழங்கிவர
நாற்காததூரமட்டும் நாகசின்னமூதிவர

ஐங்காததூரமட்டும் அடிபடுதுபேரிகையும்
ஆனையின்மேல்நகபத்து குதிரையின்மேல்டங்காவும்
கானனுக்கெடுத்தார்கள் கருப்புநல்லகூடாரம்
வெய்யலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
மழைகளுக் கடுத்தார்கள் வர்னவெள்ளைகூடாரம்
பனிகளுக்கெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
காற்றுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
குதிரைபொருகோடி கொக்கரித்துவருகுதங்கே
யானையுஞ்சேனைகளும் அண்டலொண்ணாராறுவரும்
அமாதருஞ்சமாதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
வேதியருமாதியரும் வில்வேந்தரசர்களும்
தொழுவர்மலையாளர் சோனகரும்வெட்டியரும்
பட்டாவுஞ்சூரியமும் பாரியவில்சமுதாடு
கேரிசமும்பெரியசத்தி நிகரானபாங்குகளும்
அதிருமிருப்புலக்கை ஆயுதவரிசையுடன்
கட்டிகத்திவேலாயுதம்எடுத்தார்கள்சூலாயுதம்
அத்தண்டராறுவரும் அல்லவரும்பயணமென்றார்
துரோணரும்அசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாச்சாரி கீர்த்திபெற்றகர்னனுமே
சாமத்துரோகி சகுனியவன்கூட
மாமாசகுனியும் மைத்துனன்தேசத்தரசன்
தங்கைமணவாளன் தறுதலைப்பொட்டிமகன்
அக்காள்மணவாளன் அறுகலியன் பெற்றபிள்ளை
காந்தாரிபிள்ளைகளும் கவுரவர்சேனைகளும்
குருடன்பெற்றபிள்ளைகளும் கோடியரசர்களும்
ஐவரைக்கொல்லவென்று அனேகப்பேர்பயணமானார்
செந்தூளெழும்புகுது தெய்வலோகங்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
கொடிகள்பறக்குது குவலயமெட்டுது
முடிகள்திரிகுது மூன்றுலோகந்தத்தளிக்க
அச்சுகிறுகிறென்ன ஆனைநெடுந்தேரசைய
வண்டில்சிரிச்சிகளும் மதயானைகோஷ்டமுடன்
குதிரைகனைத்துவிழக் கோடிமன்னர்சத்தமிட
சந்தடியிரைச்சலது சமுத்திரகோஷ்டமுடன்
செல்லும்ஜனங்கள்தொகை சொல்லிமுடியாது
வாரஜனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
பஞ்சவரைக்கொல்லவென்று பாதகனும்வாரானே
ஐவரைக்கொல்லவென்று அரும்பாவிவாரானே
அஸ்தினபுரந்தாண்டி அப்புறம்வருகையிலே

துரியோதிரன் பஞ்வர்மேல் சண்டைக்குவருகிறபோது
துரோணரைச் சாஸ்திரம்பார்க்கச்சொன்னது.

தென்னமுடிவேந்தன் திரியோதிரப்பாவி
துரோணரைப்பார்த்துச் சொல்வான்திரியோதிரன்
பஞ்சவரைக்கொல்லவென்று பாரவனம்போறோமே
வாருந்துரோணரே வழிநிமித்தம்பாருமென்றான்
ஐவரைக்கொல்லவென்று ஆரணியம்போறோமே
சகுணத்தைப்பாருமென்றான் தாமமுடியானும்.

துரியோதிரன் சொற்படி துரோணர்சகுணம்பார்க்கிறது.

என்னசகுணங்கள் இனிநிமித்தங்காணுகுது
தென்னமுடிவேந்தன் திரியோதிரன்சொற்படியே
அரசனுரைப்படிக்கு ஆச்சாரியானவரும்
தாமமுடியானுக்குச் சகுனங்கள்பார்க்கையிலே
என்னசகுணங்கள் எதிராகக்காணுகுது
பொல்லாச்சகுணங்கள் பொருந்துதுமன்னனுக்கு
வாயசமிடமாச்சு வலியன்வலமாச்சு
கரையானிடமாச்சு நரிகள்குருக்காச்சு
பாம்புகுறுக்காச்சு பார்ப்பானெதிரானான்
சாரைகுறுக்காச்சி சந்திரர்மேல்பல்லிசொல்லும்
வேடரெதிர்வருவார் வில்லியரெதிரானார்
வெட்டிப்பிடியுமென்று வேடரெதிர்வருவார்கள்
குத்திப்பிடியுமென்று கோட்டானுகோலமிடும்
பட்டம்பகலிலே பகலாந்தைசீறுகுது
நெருப்பெடுத்துகூன்கிழவி நின்றிழவுதான்கொடுத்தாள்.

துரோணாசாரியர் திரியோதிரனுக்குச் சகுணங்கள்
நல்லதல்லவென்றுசொல்ல துரியோதிரன்
அவர் சொல்லைத் தடுத்து வருகிறது.

துரியோதிரனுக்குத் துரோணரவருரைப்பார்
அப்பாதிரியோதிரா அரசர்சிகாமணியே
என்றனுடவார்த்தைகளை யிராசாவேநீகேளும்
ஆகாச்சகுணங்கள் ஆகுதேயிப்பொழுது
பொல்லாச்சகுணங்கள் பொருந்துதேயென்னசெய்வோம்
இன்றொருநாள்போக்கி இனியொருநாள்நாம்வரலாம்
சண்டைக்குப்போகவேண்டாம் வாருமென்றழைக்கையிலே
தென்னமுடிவேந்தன் திரியோதிரராஜன்
அவ்வார்த்தைதான்கேட்டு அரசமன்னனேதுசொல்வான்
சகுணத்தால்பழுதுமுண்டோ சதிரானராசர்களே
பொல்லாச்சகுணமென்று போகாமல்நிற்பார்களோ
ஐவருமல்லாமல் அடப்பக்காரனையனில்லை
பஞ்சவருமல்லாமல் பலவகையோரொருவரில்லை
இந்தசகுணத்தில் ஏதொருகுற்றமில்லை

நடவும்நடவுமென்று நடைபேரியடியுமென்றார்
வருகுதுபாளையங்கள் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
செந்தூளெழும்புகுது சூரியனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைகப்புகுது
காடுசெடிதாண்டி கரியமலைதான்தான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பிலேயிருக்கும்
கருநாரைக்கிறைதேடுங் கதலிவனந்தான்தாண்டி
செந்நாய்புலிகரடி சீறும்வனந்தாண்டி
எல்லையதுதூரம் முல்லைவனந்தாண்டி
சூரியன்வனந்தனிலே துரைகளெல்லாஞ்சேர்ந்தார்கள்
அங்குநட்டால்ஜண்டாவை அடியுமென்றான்பேரிகையை
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
மற்றுநாட்காலையிலே வாரார்கள்துரைகளெல்லாம்
ராஜரிஷிவனத்தில் நடந்தாகள்துரைகளெல்லாம்
சண்டாவைநாட்டுமென்றான் சல்லரியடியுமென்றான்
அடித்தார்கள்பேரிகையை அடிவானத்திடிபோல
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
மற்றுநாட்காலையிலே வருகுதுபாளயங்கள்
காளமகாரிஷிவனத்தில் கடுகவந்துசேர்ந்தார்கள்
ரணபேரியறையுமென்றான் வல்லசின்னம்ஊதுமென்றான்
அரசன்தன்சொற்படியே அறைந்தார்பேரிகையை
ஊதினார்சின்னத்தொனி உலகேழுந்தானதிர
அன்றுமுகாமங்கிருந்து அடுத்ததொருமற்றுநாள்
மற்றுநாட்காலையிலே மன்னர்பயணமிட்டார்
காமதேனுபர்வதத்திற் கடுகிவருகையிலே
ஐவரைகொல்லவென்று அரும்பாவிவருகையிலே.

திரியோதிரன் ஐவரையுங்கொல்லவருகிறதை
எம்பெருமாளறிந்து வந்தவர்க்கெல்லாந்
தாகமுண்டாக்கினது.

ஐவருக்கும்வந்தவிதி ஆயருந்தாமறிந்து
கைமோசம்வந்துதே காவலர்பஞ்சவர்க்கு
மோசங்கள்வந்து முடிந்ததுபஞ்சவர்க்கு
பாவிகெடுத்தானே பஞ்சவரைக்கொல்லவென்று
தோஷிகெடுத்தானே தொண்டர்களைக்கொல்லவென்று
எந்நாளும்பகையாளி ஏற்பட்டான்பஞ்சவர்க்கு
எந்தவிதத்திலுமே இரக்கவகைபண்ணுகிறான்
அசதியாய்நாமிருந்தால் ஐவரிரந்திடுவார்
மரதியுடனிருந்தால் மாண்டிடுவார்பஞ்சவர்கள்
செல்வத்திரவியங்கள் சீரழிந்துபோகுதே

உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகுதே
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகுதே
கையில்செபமாலை கனங்குலைந்துபோகுதே
என்னஉபாயமது செய்கிறரெம்பெருமாள்
வருகிறராசருக்கும் மாநாகம்கொண்டாற்கும்
தண்ணீர்கவனங்கள் தாகவிடாயுண்டுபண்ணார்
தண்ணீர்கவனங்கள் தாகவிடாயானர்கள்
அத்தண்டராசருக்கும் அடிநாக்குலருகுது
நாவுவரட்டுகுது நடுநாக்குலருகுது
அவ்வனத்தில்தீர்த்தங்கள் அள்ளியுண்ணக்கிடையாது
மாயர்பெருமாளும் மலைராமரேதுசெய்தார்
தேவேந்திரனுடைய சுரபியெனுங்காமதேனு
அப்பசுக்கள்தீர்த்தமுண்ணும் அக்குளமொன்றொழிய
தீர்த்தங்களில்லாமற் செய்துவிட்டாரப்போது
அத்தண்டஜெனங்களுக்கும் அனேகம்விடாயாச்சு
தண்ணீர்களையாகி தவிக்குதுபாளையங்கள்
காதையடைத்துக் களைத்தார்துரைகளெல்லாம்
தூதுவரைத்தானழைத்து திரியோதிரனுரைப்பான்
இந்தவனத்திலே எங்கும்நதியிலையோ
எங்குங்குளமிலையோ யிறங்கியேதீர்த்தமுண்ண
தேடியேபாருமென்று செப்பியனுப்பினன்
அப்படியேநல்லதென்று அந்தவனங்களெல்லாம்
தேடப்புறப்பட்டார் திரியோதிரன்தூதுவர்கள்
அந்தவனங்களெல்லாம் ஆராய்ந்துபார்த்தார்கள்
காமதேனுதன்குளத்தைக் கண்டார்கள்தீர்த்தமுண்ண
ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார்தூதுவர்கள்
திரியோதிரனுற்குச் சேதியுரைத்தார்கள்
அலகமுள்ளதாயிருக்கும் அலங்காரப்பொய்கைகண்டோம்
வாருங்களென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டார்

திரியோதிரன் காமதேனுக்குளத்தில் தண்ணீர்
குடிக்கசேனையுந்தானும் வருகிறது.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன்கேட்டு
நல்லதுவாரேறுமென்று நடந்தார்கள்சேனையெல்லாம்
வருகிறவேளையிலே வானுலகஇடையரெல்லாம்

தெய்வலோகத்து இடையர் காமதேனுபசுக்களுக்கு
அந்தக்குளத்தில் தண்ணீர்காட்ட வருகிறது

அந்தச்சமயத்திலே அந்தரத்துஇடையரெல்லாம்
வானுலகுஇடையரெல்லாம் மாடுகளைத்தான்எழுப்பி
காட்டிலேமேய்கின்ற காமதேனுஅத்தனையும்
மேய்த்துத்துரத்தியே மிரட்டிக்குளத்தில்விட்டார்
குளத்திலேநீர்குடித்துக் குளமெல்லாம்சேறுக்கி

தண்ணீர்கலங்கிலே தரையில்மண்மேல்கிளம்பும்
குளங்கள்கலங்கியல்லோ குளத்தின்மேல்மண்கிளம்பும்

பசுக்கள்குளங்கலக்கினதை தூதர்சொல்லத் திரி
யோதிரன்கேட்டுக்கோபித்து இடையர்
களைக்கொண்டு பசுக்களைமடக்கச்
சொல்லுகிறது.

அந்தச்சமயத்திலே அரவக்கொடியோன்தூதர்
தூதர்கள்தான்பார்த்துச் சொல்லுவாரரசருக்கு
ஐயையோராசாவே ஆரோதெரியாது
ஆயிரம்இடையர்கள ஆக்களைக்கொண்டுவந்து
விட்டுமேஅக்குளத்தை மிதக்கச்சேராக்கிவிட்டார்
தண்ணீர்குடிக்கவேதான் உதவாதுயென்றூர்கள்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்ராசனுமே
ஆயிரம்இடையரையும் அங்கேபெலியிட்டுவிட்டு
அத்தண்டபசுவையெல்லாம் அத்திபுரமோட்டுமென்றான்
இராசனுரைகேட்டு நடந்தாரேதூதுவர்கள்
மாடுகளத்தனையும் மடக்கித்திருப்பினார்கள்
எதிர்த்தஇடையர்களை யாவரையுங்கொன்றுவிட்டார்
சண்டையண்ணவந்தவரைச் சதைத்தங்கேபோட்டார்கள்

காமதேனுபசுக்களைமேய்க்கவந்த இடையர்களைத்
திரியோதிரன் தூதுவர்கள்கொன்றவர்கள்
போக மற்றயிடையர்கள்போய் தே
வேந்திரனுடன் சொல்லுகிறது.

தப்பிப்பிழைத்தவர்கள தான்விழுந்தோடலுற்றூர்
தேவேந்திரன்முன்னே தெண்டனிட்டார்இடையரவர்
வந்துபணிந்தவர்கள் வார்த்தைகளேதுசொல்வார்
காமதேனுபர்வதத்திற் காளைகளைமேய்த்திருந்தோம்
காட்டிலேமேய்த்தோட்டிக் கடுகிகுளத்தில்விட்டோம்
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளமன்னன்
சேனைபரிவாரந்திறமுடன்கூட்டிவந்தான்
மாடுகளைமடக்கிக்கொண்டான் வல்லுயிரைவாங்கிவிட்டான்
அல்லவரையுங்கொன்று னடியார்கள்தப்பிவந்தோம்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வாரிந்திரரும்
உருட்டினான்கண்ணை உருமினான்பெரும்புலிபோல்
கண்கள்சிவக்குதே காந்தாளமாகுதே
மீசைதுடிக்குதே மின்கோபமாகுதே
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுதே

நீலவிழிக்கண்கள்ரெண்டும் நெருப்புத்தணலாய்விடுது
என்றுமில்லாக்கோபம் பிறந்ததுஇந்திரர்க்கு

தேவேந்திரன் தன்மகனைச் சண்டைக்குப்போகச்
சொல்ல சித்திராங்கதன மாதலியைத் தேர்
கொண்டுவரச்சொன்னது.

என்மகனேசித்திராங்கா இயலானரத்தினமே
மாட்டைமடக்கின மன்னவராசாவை
பிடித்தபிடியோடே பின்கட்டாய்கட்டிவாராய்
ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்கொன்றழித்து
பிடித்தபிடியோடே கொண்டுவாராய்பொட்டெனவே
கைப்பிடியாயக்கொண்டு கண்ணெதிரேவந்துநில்லு
இல்லாதேயாமானல் எதிரத்துவந்துநில்லாதே
உத்தாரம்பண்ணுரே உம்பர்பிரானிந்திரரும்
தேவேந்திரன்மகனுர் சித்திராங்கதராசன்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிகமாய்சிந்தித்து
மாதலியைத்தானழைத்து மச்சுரதமெங்கேயென்றான்
தேரையலங்கரித்துச் சீக்கிரம்நீகொண்டுவா
என்றவுரைகேட்டு எழுந்தானேமாதலியும்
ஆறுவண்டிநூறுசட்டம் அதுக்கேற்றகுத்துக்காலும்
குத்துக்கால்சொப்பனிட்டுக் கொடுங்கைத்திரைவளைத்து
கொடுங்கைத்திரைவளைத்துக் கும்பக்கலசம்வைத்து
கும்பகலசத்தின்மேற் குடைக க்கட்டினன்
அங்கெனவேதேர்சீலை அலங்காரம்பண்ணினனே
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகனசொப்பனிட்டான்
வாசிலைக்குளிப்பாட்ட வாயிற்கடிவாளமிட்டான்
நாலுகால்வண்டயமும் நடுக்கழுத்திற்கொலுசகளும்
முன்னுலேகட்டிகளும் பின்னலேகுச்சுகளும்
பக்கத்தில்அங்குவடி பதியவைத்தான்சேனங்களை
முதுகிலேசினிகளும் முன்னேகடிவாளம்
சந்திரபிறைசூரியபிறை தரித்தான்குதிரைக்கு
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகனதெண்டனிட்டான்

திரியன்மேல்சித்திரசேனன் சண்டைக்குப்போகிறது.

கடுகவெழுந்தானே கட்டழகன்சித்ரசேனன்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்குக் குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் துத்திப்பூச்சல்லடமாம்
வில்லெழுதாடு பிகுவெடுத்தஒட்டியாணம்
கட்டியரைதனிலே காங்குகங்கைசுங்குவிட்டு
சந்தரகாந்திதட்டிகட்டு தாமரைப்பூச்சுங்குவிட்டு
முத்தினருமாலே முகத்தழகாய்கட்டினனே

சிங்காணிவில்லெடுத்து சிறுநாரிபூட்டினான்
அம்புறுத்தூணியை அணிந்துகொண்டான் தன்முதுகில்
தேரைச்சுத்தித்தெண்டனிட்டு சிவ்வெனவேயேறினான்.
ஏறினபோதே யியலானசாரதிதான்
துரகதம்வார்கைப்பிடித்துத் துரிதமுடன்சாரிசெய்ய
வருகுதுமச்சரதம் வானுலகந்தானதிர
தேர்தனிலேசங்குநாதம் சித்ரசேனன்பண்ணினான்
சங்குநாதம்பண்ணினனே தான்திரும்பச்சுரபியெல்லாம்

திரியோதிரன் சேனைகளைக் காமதேனு அதம்பண்ணினது.

அந்தச்சமயத்தில் அறிந்ததுகாமதேனு
சங்குத்தொனிகேட்டுத் தானவருதுகாமதேனு
குதித்துக்குமாளமிட்டு வருகுதுகாமதேனு
வந்துவிழுந்தது வளம்பெரியபாளையத்தில்
குத்துதுகொம்பாலே குளம்பால்மிதிக்கிறது

திரியோதிரனும் அவனுடையசேனைகளும் சித்திரசேனனும்
சண்டைபண்ணுகிறது.

அத்தண்டசேனைகளை அதம்பண்ணும்காமதேனு
மாண்டஜெனங்களென்றால் மட்டுமிதகளில்லை
செத்தஜனங்களென்றால் செப்பமுடிபோகாது
அந்தசமயத்தில் வந்துவிட்டான்சித்ரசேனன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டான்சரபாணம்
கைகண்டபாணமெல்லாங் கடுகெனவேவிட்டுவிட்டான
கூச்சலெழும்புகுது கொப்பெனவேபாளையத்தில்
கண்டான்திரியோதிரன் கட்டழகனேதுசொல்வான்
எவனோதெரியாது இங்குதான்சண்டைபண்ண
இத்தண்டதுரைகளெல்லாம் எல்லாரும்முஸ்தீப்பாய்
ஆயுதங்கள்தானெடுத்து அமரதுசெய்யுமென்றான்
எண்ணான்குஆயுதத்தை எடுத்துஅரையிற்கட்டி
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடித்தார்
ரணங்கள்ரணங்களென்று ரணபேரிதானடித்தார்
எட்டினார்சண்டை எழும்பதுசமரப்போ
வில்வளைத்துநாரிபூட்டி விட்டாரிவர்கணையை
ஒருவர்க்கொருவா ஒழுவில்லாப்பாணமிட்டார்
அம்புவருவேகமதை ஆர்த்தமுடியாது
பாணம்வரும்விதங்கள் பார்த்துமுடியாது
ஒருகோடிபாணங்கள் ஒருமித்துவிட்டுவிட்டார்
துரியன்விடும்பாணம் சொல்லிமுடியாது
கர்ணன்விடும்பாணம் கணக்குமிதங்களில்லை
துராணர்விடும்பாணம் சொல்லிமுடியாது
கோபமாய்க்கிருபாசாரி கோடானபாணம்விட்டார்

வீஷ்டுமாசாரியரும் வேணபாணங்கள்விட்டார்
அசுவத்தாமாவும் அனேகநெடும்பாணம்விட்டார்
சகுனிசயிந்தவரும் சரமேற்சரம்பொழிந்தார்
அவரவர்கள்விடும்பாணம் அபரிமிதமில்லை
ஒருவர்க்கொருவர் ஒருகோடிபாணம்விட்டார்
வாயுவாஸ்திரங்களும் வருணாஸ்திரங்களும்
சந்திரஅஸ்திரமும் இந்திரஅஸ்திரமும்
சங்கஞ்சங்கம்போலே சரங்கள்பொழிந்தார்கள்
கண்டானேசித்ரசேனன் கண்கெள்ளாக்கோபமுடன்
வில்வளைத்துநாரிபூட்டி விட்டான்நெடும்பாணம்
தன்மேல்விடும்பாணமெல்லாம் தாக்கமலேவிலக்க
பின்னையுங்கோடிசரம் பிரளயமாய்விட்டுவிட்டான்
அத்தனைபேர்விட்டசர மத்தனையுங்கொள்ளைகொண்டான்
அங்கராசர்தேருடைநது அவரவர்கள்வில்பறித்து
ஆனையின்மேலிருந்ததுரை அலறியேமண்ணைக்கவ்வ
குதிரையின்மேலிருந்ததுரை கொக்கரித்துமண்ணைக்கவ்வ
ஒட்டையின்மேலிருந்ததுரை ஓலமிட்டுக்கீழேவிழ
தென்னங்குலைபோலே திருகினான்வேணதலை
கருப்பங்கருணையைப்போல் கண்டித்தான்வேணதலை
ஆலைக்கரும்புபோலே அறுத்திட்டான்வேணதலை
பேய்க்காமலெறும்புபோல் பிசைந்தெடுத்தான்பாளையத்தை
பனைநொங்குபோலாகப் பருத்தவிழிபிதுங்க
கண்டச்சதையறிந்து கழுகுக்கிரைபோடுகிறான்
ஈரல்சரியுது இறச்சிவெளியாகுது
குடல்கள்சரியுது குறிப்பாகஅப்பொழுது
நெரப்பைவிலாவெலும்பு நெறநெறென்றுகால்முறியும்
பட்டஜெனங்களென்றால் செப்பமுடியாது
செத்தஜெனங்களென்றால் மட்டுதுதங்களில்லை
சித்ரசேனன்சண்டையிலே ஜெனங்களுமாளுகுது
அபயமபயமென்று அலையுதுபாளையங்கள்
தண்ணீர்தண்ணீரென்று தவிக்குதுபாளையங்கள்
ரத்தாறுவோடுகுது ரணமுண்டங்கொக்கரிக்க
இந்தவிதம்பாளையங்க ளேடாகூடாமாச்சுது
திரியோதிரராசன் தேரிழந்துநின்றுவிட்டான்

சித்திரசேனன் திரியோதிரனைக்கட்டி இழுத்துக்கொண்டு போகிறபோது திரியோதிரன் முறையிடுவது.

அங்கந்துளையாக்கி அதிரடித்தானசித்ரசேனன்
அந்தரவீதியிலே அவனைப்பிடித்துக்கட்டி
பிடித்தபிடியோடே பின்கட்டாய்கட்டினான்
தேர்க்குத்துச்காலோடே திரியனைப்பிடித்துக்கட்டி.
ஊதினான்சங்குநாதம் உம்பர்பிரான்றன்மகனும்

திரியன்பிடிபடவே திகிலெடுத்துராசரெல்லாம்
ஒருவருடனொருவர் சொல்லாமலோடலுற்றார்
திரியனைக்கட்டிக்கொண்டு தெய்வலோகம்போறாராம்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
எண்ணுதுமெண்ணுகிறான் எண்ணிபுலம்புகிறான்
ஆரோதெரியாது ஆகாசங்கொண்டுபோறான்
எவனோதெரியாது எமலோகங்கொண்டுபோறான்
ஐவர்பஞ்சபாண்டவரை அனர்த்தம்பண்ணவந்தேனே
என்னையொருவர் இழுத்துப்போறாரென்னசெய்வேன்
கூடவந்தராஜாக்கள் கோடானகோடியுண்டு
மட்டில்லாராஜாக்கள் வந்தார்கள்வீரியர்கள்
அத்தண்டராஜாக்கள் அல்லவருங்கையைவிட்டார்
கட்டியிழுத்துக் கைலாசங்கொண்டுபோறார்
ஆர்வந்துகாப்பார்கள் ஆபத்துவேளையிலே
எவர்வந்துகாப்பார்கள் என்சீவன்பிழைக்கயிப்போ
தருமரைத்தானினைத்தால் தயவுவைத்துகாத்திடுவார்
இந்தவனத்திலே யிருக்கிறாரென்றார்கள்
கூவிப்புலம்பினால் குரல்கேட்குந்தருமருக்கு
தம்பியரைத்தானனுப்பி தயவுவைத்துகாத்திடுவார்
ஐவருமிப்போது அன்புவைத்துகாத்தாலே
ஐவரைக்கொல்லுகைக்கு ஆலோசனைதேடிடுவோம்
தப்பிப்பிழைத்தோமானால் தருமரைக்கொன்றிடுவோம்
என்றவன்யோசனையாய் என்னசொல்லிபுலம்புகிறான்
கூவிப்புலம்கிறான் கொற்றவன்திரியோதிரன்
அண்ணவேயண்ணவே அழகானதர்மலிங்கம்
ஐவர்பஞ்சபாண்டவரே அண்ணவேநீர்கேளும்
ஐவரைப்பார்க்கவே அதிகபிரியமுமாய்
பார்க்கும்படியாக வந்தேன்காண்பஞ்சவரே
காணும்படியாக வந்தேன்காண்காவலரே
எவனோதெரியாது இழுத்துப்போறான்அந்தரமாய்
ஆரோதெரியாது அழைத்துப்போறானந்தரமாய்
கூடப்பிறக்கலையோ கூட்டுப்பாலுண்கிலையோ
தாயாரும்வேறானால் தகப்பனுமொன்றலவோ
மனதுமிரங்கிலையோ மகாராஜர்தருமலிங்கம்
தம்பிதமையன்மேல் தயவிலையோவுங்களுக்கு
அநீதமாய்க்கொண்டுபோறான் ஆரோதெரியாது
(என்) ஆவியைக்காத்தாலே அனேகங்கோடிபுண்ணியங்காண்
சாயாம்புமேனியனே தயவிலையோவென்மேலே
என்றுபுலம்பியே இடிபோலேகூச்சலிட்டான்
கூவுங்குரல்கேட்டுக் கொட்டெனவே தருமருக்கு
உற்றுற்றுக்கேட்டாராம் உரகதனவார்த்தையெல்லாம்

## திரியோதிரன் முறையிடுவதைத் தருமர்கேட்டு அருச்சனனைப்போய் திரியோதிரனை அழைத்துச் சொன்னது.

தருமர்மனங்கொள்ளாமல் தம்பியரைத்தானழைத்து
ஆனாலுமருமன்று அருச்சுனாநீர்கேளும்
பெரியதகப்பன்பெற்ற பேரான அண்ணன்தம்பி
திரியோதிரனம்மைத் தேடியேபார்க்கவந்தான்
ஆரோவொருவன் ஆகாசங்கொண்டுபோறான்
எவனோதெரியாது இழுத்துப்போறான் அந்தரமாய்
பார்த்துமிருந்தோமானால் பாதகமெத்தவரும்
மெத்தவருந்துகிறான் வில்வேந்தனிப்போது
நம்மைவருந்துகிறான் ரட்சிப்பாயென்றுசொல்லி
ஆபத்துவேளையிலே ஆதரித்தால்புண்ணியங்காண்
கடுகவிடுத்துக் கையோடேகூட்டிவாராய்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான்வாள்விஜயன்
ஊமோடிருந்து நம்மை உரகதன்தானழைத்து
கொல்லவினைத்தானே குருடன்மகன்சத்ராதி
எத்தனைவஞ்சனைகள் இடறுகள் செய்தான்காண்
நம்மைபறித்தானே ராச்சியத்தைக்கொள்ளைகொண்டான்
ஐவரையும்விலங்கிலிட்டு அரையிலடைத்தானே
அரமனைப்பெண்களையும் அம்பலமேற்றிவைத்தான்
அண்ணன்பெருந்தேவி யாடையுரியவைத்தான்
பாரவனவாசம் பரதேசம்போற்றிவைத்தான்
இந்தப்பரதேசம் இனித்திரியுமென்றானே
சாமத்துரோகனுக்கு தயவுநினைப்பாரோ
பொல்லாதபாவிக்குப் புண்ணியந்தேடுவரோ
தென்னமுடிவேந்தன் திரியோதிரராசன்
எத்தனைநாளிருந்தாலும் இடரல்லோதேடுகிறான்
கொல்லநினைக்கிறான் கொடும்பாவிதிரியோதிரன்
இன்றோடொழிந்து எமலோகஞ்சேரட்டும்
செத்தாற்பழுதுமில்லை சீரானஅண்ணாவே
என்றவுரைகேட்டு ஏதுசொல்வார்தருமராயர்
அவரவர்செய்தவினை அவரேயனுபவிப்பார்
நன்மைசெய்தவர்கள் ராச்சியத்தையாண்டிடுவார்
பொல்லாங்குசெய்தவர்கள் போவார்பெருநரகில்
நன்மையைச்செய்தவர்க்கு நட்சேத்திரங்காணும்
தீமையைச்செய்தவர்க்குத் தெரியாதிருளாகும்
வஞ்சனைகள்வேண்டாமோ மாயன்துணையாவார்
இக்கணமேநீயேகி யிட்டுவந்துசேருமென்றார்
என்வார்த்தைதள்ளாதே என்றனைதம்பியரே

## அருச்சுனன் திரிகனை யழைக்கப்போவது.

என்றவுரைகேட்டு எழுந்தானருச்சுனனும்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களிக்குக் குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்குத் தூக்கியப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிகதுகட்டி
சந்திரகாந்திதட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
ஈட்டிசமுதாடு எடுத்தான்பெரியகத்தி
கத்திசொருகியல்லோ கடுகவெழுந்தானே
சிங்காணிவில்லெடுத்து தேர்விஜயன்பயணமானான்
வாரானேஅர்ச்சுனனும் வழிபட்டான் அங்கெனவே
நடந்தானே அர்ச்சுனனும் நாழிகைக்குக்காதவழி

## அருச்சுனனும் சித்திரசேனனும் சண்டைபண்ணுதல்.

அப்போதருச்சுனனும் அதிவேகமாகவல்லோ
அக்கினிபாணத்தை அதிவிரைவாய்த்தானெடுத்து
வரிவில்வளைத்தெடுத்து மார்புரளவாங்கினன்
அக்கினிபாணமது அதிரிவேபோய்தடுக்கும்
கண்டானேசித்ரசேனன் கண்கொள்ளாக்கோபமுடன்
சீரியெழுப்பியே சீக்கிரமாய்வக்தெதிர்த்தான்
சண்டைசண்டையென்று சமர்ப்பேரிமுழங்குது
ஒருவற்கொருவர் வுயுத்தியங்களாகுது
ஒருவர்விடுஞ்சரங்கள் ஒருவர்விலக்குவாரும்
இருவர்சமானமாக யிசைந்துமேசண்டைபண்ணார்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலே பந்தலிட்டார்
சூரியனைத்தான்மறைக்கும் சூரர்விடும்பாணமெல்லாம்
நான்குகடிகைமட்டும் நல்லசண்டைபண்ணுர்கள்
அருச்சுனன் சண்டைகளை அண்டர்பிரான் மகனறிந்து

## அருச்சுனனும் சித்திரசேனனும் சமாதானமாகி திரியோதிரனை தருமரண்டை அழைத்துப்போகிறது.

என்னிலும்வல்லபிரான் என்றுமனதிலெண்ணி
(இவன்) யாரோதெரியாது ஆண்மையுள்ளசேவகர்காண்
வம்மிசத்தைநாமறிந்து மறுத்தல்லோசண்டைசெய்வோம்
என்றல்லோசித்ரசேனன் ஏதுசொல்வானருச்சுனனை
ஆடாதம்பிநீ ஆண்மையுள்ளசேவகனே
எவனடாதம்பிநீ எதிர்த்துசண்டை செய்யவந்தாய்
ஊரேதுபேரேது உன்தகப்பன் வாறேது
எவருடையபுத்திரன் நீ எனக்கரியச்சொல்லுமென்றார்
இவ்வார்த்தைகேட்கவே ஏதுசொல்வான் அருச்சுனனும்
யுத்தகளந்தனிலே உறவின்முறைகேட்பாரோ

படிகளத்திலெப்பாரி கேட்பாரோபாருலகில்
அண்பிள்ளையாமானால் அமரதுசெய்யுமென்றார்
உன்தகப்பன்றன்பெயரும் ஊர்பெயருஞ்சொன்னாலே
நானுரைப்பேன்பிற்பாடு நவிலென்றான்போர்விஜயன்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனன் தான்கேட்டு
உத்திரவுதான்கேட்டு உச்சாகங்கொண்டவனும்
தேவர்க்கதிபதிதான் தேவேந்திரனென்தகப்பன்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான் அர்ச்சுனனும்
அண்ணனென்றியாமல் அமரதுசெய்தேனே
தமையனென்றறியாமல் சண்டைகள் செய்தேனே
வில்லைத்தரையில்வைத்து விஜயனுமோடிவந்தான்
சாஷ்டாங்கமாகவே சரணமென்றுதெண்டனிட்டான்
மூக்கால்வலம்வந்து மூவொருகால்தெண்டனிட்டான்
அண்ணாசரணமென்று அடிபணிந்தானருச்சுனனும்
தேவேந்திரன்மகனும் சித்ரசேனனேதுசொல்வான்
ஆர்வீட்டுப்பிள்ளைநீ அறியவுரையுமென்றார்
என்னையறியாயோ என்னுடையஅண்ணாவே
என்தாயார்குந்திஅம்மாள் என்தகப்பன்தேவேந்திரன்
என்தகப்பன்தேவேந்திரன் என்பேரும் அருச்சுனன்காண்
என்றவுரைகேட்டு ஏதுசொல்வான் சித்ரசேனன்
(என்) தந்தைக்குநீபிறந்த தன்மையினால்தம்பியரே
நான்விட்டபாணத்தால் நம்பியேநீர்பிழைத்தீர்
அல்லாதேயாமானால் அமரில்மடிந்திடுவீர்
தப்பிப்பிழைத்தீரே சாமிபுட்புண்ணியத்தால்
என்றிவர்களோர்மனதா யிருவருறவாடி
ஒருவர்க்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்
எதில்விஜயனப்போது ஏதுசொல்வான் அண்ணனுக்கு
தென்னமுடிவேந்தன் திரியோதிராசன்
என்னசெய்தானென்றுநீ இட்டுபோரீரண்ணாவே
அவன்செய்தகுற்றமெல்லாம் அண்ணாநீர்சொல்லுமென
இவ்வார்த்தைதான்கேட்டு என்னசொல்வான்சித்ரசேனன்
காட்டிலேயேய்ந்ததொரு காமதேனு அத்தனையும்
பாற்பசுக்கள்தன்னையிந்தப் பாவிமடக்கிக்கொண்டான்
ஆயிரமிடையரையும் அநீதமாகொன்றுவிட்டான்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுப்பினானென்தகப்பன்
கைப்பிடியாய்கொண்டுவர கட்டளையுமிட்டார்கள்
அவர்சொன்னபடியினாலே அமரதுசெய்தேன்காண்
இவனுடையசேனைகளை எல்லாம்நான்கொன்றழித்து
விரைவாககைப்பிடியாய் விண்ணுலகங்கொண்டுபோறேன்
என்றவுரைகேட்டு என்னசொல்வான்அருச்சுனனும்
ஆனால்கேள்அண்ணாவே அடியேனொருவார்த்தை

காயாம்புமேனியரும் தருமரவரெங்களண்ணர்
என்னைவிடுவித்து இட்டுவாவென்றுசொன்னர்
என்னையனுப்பினர் இயலானதர்மலிங்கம்
அழைத்துவரச்சொன்னரே அண்ணருமிப்பொழுதே
உன்முகத்தில்நான்விழித்தேன் என்றுமேதர்மலிங்கம்
கூட்டியனுப்பினர் குறிப்பாகவந்தனையும்
என்மேல்தயவுவைத்து இவனையனுப்புமென்ருன்
தேவேந்திரன்மகனா சித்ரசேனனேதுசொல்வான்
மாடுமடக்கியே வல்லுயிரைக்கொன்றவனை
கைப்பிடியாய்க்கொண்டுவர கடுகியனுப்பினர்
ஆகையாற்கொண்டுபோறே னருச்சுனுயென்னசெய்வேன்
ஆனற்கேளண்ணுவே அடியேனொருவார்த்தை
அருச்சுனன்வந்து அழைத்துப்போனுனென்றுசொல்லும்
ஐவரென்றுசொன்னலே அதிகமனமகிழ்வார்
அல்லாதேயாமாகில் அழைத்துமேபோனுலே
என்வார்த்தைதள்ளிநீர் இட்டுக்கொண்டுபோனுலே
அண்ணுவேநாளைக்கு அமராபுரம்வருவேன்
தேவேந்திரபுரத்தைச் சிதறவேகொள்ளைசொல்வேன்
ஆடுகளைமாடுகளை அழகானஊருகளை
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிகளும்
அங்காடிவீதிகளும் அரமனைத்தெருவுகளும்
அத்தனையும்கொள்ளையிட்டு அதம்பண்ணிப்போட்டிடுவேன்
என்வார்த்தைதான்கேட்டு இவனைவிடுவிடென்ருன்
சித்திரசேனன்கேட்டுச் சிந்தைமகிழ்ந்தவரும்
சந்தோஷப்பட்டவரும் சர்ப்பக்கொடியோனை
கட்டவிழ்த்துவிட்டுவிடுங் காணென்ருன்சித்திரசேனன்

சித்திரசேனன் தேவேந்திரனைக்காண்கிறது.

போய்வாரேனென்றல்லோ புரப்பட்டான்தேரேறி
அமராபதிதேடி அடைவுடனேதானடந்தான்
தேவேந்திரனாற்கு சித்ரசேனன்தெண்டனிட்டான்
அருச்சுனன்தன்னுடைய அதிசயச்சேதிகளும்
அரவக்கொடிவேந்தன் அகப்பட்டசேதிகளும்
இவ்விருவர்சேதிகளும் இயலாக்த்தான்சேதி
தகப்பனுடனுரைக்கச் சந்தோஷமாகினர்
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
திரியோதரனுரைத் தேர்விஜயன்கூட்டிவாரான்
அண்ணருகாக அழைத்துவந்துவிட்டாராம்
அண்ணர்தருமருக்கு அடிபணிந்தான்திரியோதிரன்
சரணம்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
எமன்மகன்தருமராயன் எடுத்தணைத்தான்திரியனையும்
எங்கிருந்துவந்தீரப்பா எனக்கறியச்சொல்லுமென்ருர்

அந்தவானகானகத்தில் ஆரணியம்வந்ததென்ன
அந்தரமாகவே ஆர்காணுங்கொண்டுசென்றார்

திரியோதிரன் தருமருக்குத் தன்வரலாறு கூறல்.

திரியோதிரராஜன் சொல்லத்தொடங்கினான்
ஆசையாய்பாசமதா லண்ணாவேபார்க்கவந்தேன்
எத்தனைநாள்காடுறைந்தீர் இட்டுப்போகவேணுமென்று
அஸ்தினாபுரத்துக் கழைத்துக்கொண்டுபோவோமென்று
எண்ணாதுமெண்ணினான் இக்காடுதேடிவந்தேன்
என்னை-ஆறோதெரியாது அந்தரமாய்க்கட்டிப்போனார்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனன்தானுமங்கே அமர்செய்துயிட்டுவந்தான்
எத்தனைநாள்காடுறைவீர் இயலானராஜாவே
பாரவனவாசம் பரதேசந்திரிவானேன்
வேடரைப்போலாக வில்லியரைப்போலாக
பரதேசந்திரிவானேன் பட்டணத்தில்வாங்களென்றான்
அஸ்தினாபுரத்தை ஆண்டிடுவீர்வாங்களென்றான்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வார் தருமராயர்
ஆறுவருஷமாச்சு ஆரணியம்வந்துநாங்கள்
இன்னஞ்சிலகாலம் இப்படியேநான்திரிந்து
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்து
வந்தபிறகாக மனதுவைத்துஎன்மேலே
சொன்னபடிசீமை துரைத்தனந்தாருமென்றார்

வீமன்கனிபறித்துவர திரியோதிரன்புசித்து தருமரிடத்திற்
செலவுபெற்று அஸ்தினாபுரம் செல்லுகிறது.

வெற்றிமதயானை வீமாமதகரியே
அண்ணர்களையாகி அதிகபசியானார்
காடெல்லாந்தான்திரிந்து கனிபறித்துவாருமென்றார்
வெற்றிமதயானை வீமனெழுந்திருந்து
அறுநெல்லிசிறுநெல்லி அழகானதமர்த்தையுடன்
காட்டுவிளாப்பழமும் கருநெல்லிப்பழங்களுடன்
வேரில்பழுத்திருக்கும் வெடித்தபலாப்பழமும்
மலைத்தேன்சுனைத்தேனும் மாங்கனியுந்தேங்கனியும்
மட்டில்லாப்பழம்பறித்து மதவீமன்கொண்டுவந்தான்
தேக்கிலைதான்பறித்து திறல்வீமன்கொண்டுவந்தான்
பறித்தக்கனியெல்லாம் பசியாறஉண்ணுமென்று
கைக்குச்சலங்கொடுத்து கட்டழகருண்ணுமென்றார்
ஆசனந்தான்போட்டு அமுதுபுசியுமென்றார்
விஷநாகங்கொண்டவனும் வேந்தனுந்தான்புசித்தான்
எண்ணாதுமெண்ணுகிறான் எரிநாகங்கொண்டவனும்
இப்படிக்கொத்த இயலானபஞ்சவர்கள்
எப்படிக்குச்சாவார்கள் இக்கனியைத்தின்றவர்கள்

அஸ்தினாபுரத்திற்போய் ஆலோசனைபண்ணவேண்டும்
எப்படியும்பஞ்சவரை இக்காட்டிற்கொல்லவேணும்
என்றுமனதிலெண்ணி இருந்துகனிபொசித்தான்
பசியாறவுண்டானே பாதகன்திரியோதிரன்
கைபூசிக்கொண்டானே காதகன்திரியோதிரன்
சாயாம்புமன்னவனார் தருமர்பெருமானும்
பின்னுஞ்சிலகனிகளை பெருமூட்டையாகக்கட்டி
அப்பா திரியோதனா அழகானஇக்கனியை
அரண்மனைக்குக்கொண்டுபோம் அனைவரும்தான்புசிக்க
எடுத்துப்போமென்றுசொல்லி ஈந்தாரேஅக்கனியை
வாங்கியேஅக்கனியை மன்னவனும்தோளிலிட்டான்
ஐயாவேபோய்வாறேனென் றடிபணிந்துதெண்டனிட்டான்
சாயாம்புமன்னவனார் தர்மலிங்கமேதுசொல்வார்
காண்டீபா அர்ச்சுனரே கடுகியெழுந்திருந்து
அண்ணன்திரியன்முன் னக்கனியின்மூட்டைகொண்டு
காடுகடக்களவும் கைமூட்டைநீவாங்கி
அண்ணனைவழிகூட்டி அனுப்பிவாருமென்றார்
தருமருரைகேட்டு தார்விசையன்தானெழுந்து
கனிமூட்டைதோளில்வைத்து கடுகியேபின்னடந்தான்
திரியோதிரன்பின்னே நடந்தானேதேர்விஜடன்
காடுஞ்செடியுங் கடியவனுந்திரமும்
ஆறுஞ்சுனையும் அவ்வனமுந்தான்கடந்து
காடுகடந்தபின்பு கைமூட்டைவாங்கிக்கொண்டு
தென்னமுடிவேந்தன் திரியோதரனேதுசொல்வான்
தூரகில்லும்அர்ச்சுனரே தொல்லுலகில்வாராதே
கடக்கநில்லுமருச்சுனரே காசினியில்வாராதே
காடுமெரித்தகாலால் நாடுமிதியாதே
அரைக்ஷணப்போதையிலே அறுத்தெரிவேனுன்தலையை
தருமர்பெருமையினால் தணித்துவிட்டேன்கோபந்தை
என்றுதிரியன்சொல்லி இசைந்துவழிநடந்தான்
அண்ணருக்காக அருச்சுனன்வந்தழுதான்
அப்போதிரியோதிரன் அதிகவிரைவாக
காடுசெடியுங் கரியமலைகடந்து
அஸ்தினாபுரத்துக்கு ஆணழகன்போயடுத்தான்
சிங்காதனமீதிற் சென்றானேதிரியோதிரன்
ஆசாரிஐவரையும் அனந்தமகாராஜரையும்
மாமன்சகுனியையும் மைத்துனனசயிந்தனையும்
அத்தண்டபேரையும் அழைத்தான்திரியோதிரன்
கொண்டுவந்தகாய்கனியைக் கொப்பெனமுன்னேவைத்தான்
இக்கனியையுண்ணுமவ ரெப்படிகாண்மாண்டிடுவார்
தேவேந்திரன்மகனார் சித்ரசேனனெனைப்பிடித்தார்

தேரிலேனைக்கட்டி தெய்வலோகங்கொண்டுசென்றார்
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனன்வந்து அபராதஞ்செய்தான்காண்
என்னை விடுவித்து இட்டுவந்தானண்ணரண்டை
ஐவரையுங்கண்டேனே அனேகமானவார்த்தைகளை
உச்சிதமாகவேதான் ஒற்றுமையாய்வார்த்தைசொன்னேன்
இந்தக்கனிதான்புசிக்கும் எழிலானபஞ்சவர்கள்
எப்படிக்குமாண்டிடுவார் இயலானபஞ்சவர்கள்
என்றிவர்கள்தான்பேசி யிருந்தார்சிலவார்த்தை
இப்படியாக இருக்கிறவேளையிலே
ஆறும்வருஷம் முடிந்ததுஐவருக்கு

ஆறுவது காமதேனுபர்வதம் முற்றிற்று.

எ-வது, கெந்தர்வபர்வதம்.

ஏழாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்கு
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைசாமத்தில்
கோவிலைவத்தசீமோடு கூடைதலையேலேவைத்தார்
மண்ணிவைத்தசீமோடு வனவாசம்போறார்கள்
காமதேனுபர்வதத்தைக் கடந்துவழிகூடி
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோறார்கள்
கெந்தர்வபர்வதத்தில் வந்தாரேபஞ்சவர்கள்
ஐந்துக்குபர்ணசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழுக்குபர்ணசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
அம்பிகைபெருமாளும் அலகங்கைஸ்நானம்பண்ணி
ஈராழலர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
சாம்பமூர்த்திபூசைகளும் சகலமுந்தான்முடித்து
ஆசனமிட்டுமல்லோ அரிராமர்பூசைபண்ணார்
அரிபூசைகுருபூசை அனைத்துங்கடன்முடித்து
கைதனிலேதீர்த்தமள்ளிக் கதிரோனைப்பூசித்து
எரிக்குங்கதிரோனை எம்பெருமாள்தோத்தரித்து
கண்ணிரண்டுமூடியே கையிரண்டுமேந்திக்கொண்டு
சிவஞானமாகவே ஸ்ரீகிருஷ்ணன்தானிருந்தார்

எம்பெருமாள் செபம்பண்ணும்வேளையில் கெந்தருவன்
தம்பலம்உமிழ பெருமாள்கோபிக்கிறது.

ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மாயமென்னுங்கெந்தருவன் வாரானேதேரேறி
தேரேறிவருகையிலே தின்றுஉமிழ்ந்தானே
வால்மிளகுஏலரிசி வாசமுள்ளஜாதிபத்திரி

வெத்திலையும்பாக்குகளு மென்றுவுமிழ்ந்தானே
மாயவனார்கைதனிலே வந்துவிழுந்தது
துப்பியதம்பலமுந் தழாய்மௌலிகையில்விழ
கண்திறந்துபார்த்தாரே கைதனிலேதம்பலத்தை
சுற்றியங்கேபார்த்தாரே தோணவில்லைவேறொருவர்
ஆகாயவீதியிலே அவனாரோதெரியாது
கைதனிலேதம்பலத்தைக் காரியுமிழ்ந்தானே
செபதபஞ்செய்கையிலே செய்ததிவன்கெருவமென்ன
கண்கள்சிவந்தாராம் காந்தாளமானாராம்
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்திடுமாம்
நீலவிழிகண்கள்ரெண்டும் நெருப்புத்தணலாகுது
கோவைப்பழம்போலக் கூர்விழிகண்சிவக்கும்
பரவற்பழம்போலப் பத்தினியேகண்சிவக்கும்
சக்கரத்தைத்தானெடுத்து சாமிபெருமாளும்
கொல்லநினைவுகொண்டார் கோபாலரெம்பெருமாள்
மந்திரதூபமிட்டு வலதுகைபில்தானெடுத்தார்
தம்பலம்வுமிழ்ந்தவன்றன் தலையைநீவாங்கிவர
அரைக்ஷணப்போதையிலே அறுத்துவா அவன்தலையை
அரனார்வந்தெதிர்த்தாலும் அமரர்வந்தெதிர்த்தாலும்
பிரமதேவன்வந்தாலும் பிரியங்கள்சொன்னாலும்
தேவபிரான்வந்தாலுந் தெண்டனிட்டுக்கொண்டாலும்
கர்த்தரேவந்து கையமர்த்திக்கொண்டாலும்
முப்பத்துமுக்கோடி முனிவர்தடுத்தாலும்
ஆரார்தடுத்தாலும் ஆரவாரம்பண்ணாலும்
அரைநாழிக்குள்ளாக அறுத்துஅவன்தலையை
இக்கணமேசென்றுநீ இருதுண்டம்போட்டுவா

மாயன் கெந்தருவன்மேல்கோபித்து சக்கரத்தை அனுப்புகிறது.

சக்கரத்தைதூபமிட்டு சாமியார்விட்டுவிட்டார்
வருகுதுசக்கரந்தான் வானுலகந்தான்தேடி
இயல்பாய்வழிதனிலே எதிர்பட்டார்நாரதரும்
நாரதமாமுனிதான் நமஸ்கரித்தார்சக்கரத்தை
இத்தனைகோபத்துடன் எங்குநீர்போறீர்காண்
அரிராமர்சக்கரந்தான் அம்முனிக்குஏதுசொல்லும்

நாரதர் சக்கரத்தை நீர்போகிறகாரியம் யென்னவென்றுவினவ சக்கரம்சொல்லுதல்.

ஸ்ரீராமரெம்பெருமாள் செபதபஞ்செய்கையிலே
வாசங்கள்தான்தின்று வலதுகையில்துப்பினான்
ஆகையினால்சாமியார் அப்போதுகோபமானார்
என்னையனுப்பினார் இவன்தலையறுக்கவென்று
கெந்தருவன்றன்றலையை முந்தஅறுக்கவந்தேன்

அவ்வார்த்தையைக்கேட்டு அந்தமுனிபோய்நடந்தார்
கெந்தருவன்தன்னருகே வந்தாரேநாரதரும்
ஆரடாகெந்தருவா ஆயரவர்பேரில்
தம்பலமுமிழ்ந்ததினுல் சாமியார்கோபமுடன்
சக்கரம்அனுப்பியுந்தன் தலையைத்தரிக்கவென்று
வருகுதுசக்கரந்தானை மாளவிதியாச்சே
ஆதிசிவனருகே அபயமிட்டுப்போனுக்கால்
பரமசிவன்பார்த்துப் பட்சம்வைத்தாராமானுல்
ஆதிசிவன்தன்னுமேலே ஆகுப்உனைக்காக்க
அல்லாதேயாமானுல் அறுத்துவிடும் உன்தலையை
தப்பிப்பிழையுமென்று தவமுனிசொல்லுகையில்
அவ்வார்த்தைதான்கேட்டு அஞ்சிபயந்தவனும்

கெந்தருவன் சக்கரத்துக்கஞ்சி மும்மூர்த்திகளண்டைபோய் முறையிட்டுத்தீராமையால் அருச்சுனனண்டை போகிறது.

வாய்வேகமாகவே வழிபிடித்தான்கெந்தருவன்
சக்கரம்வந்திடவே தான்புலம்பிஓடுகிருன்
ஆதிசிவனருகில் அபயமிட்டுஓடுகிருன்
அரவாபரணனே ஐயாஉனக்கபயம்
சங்கராநான்சரணம் சதாசிவாஉனக்கபயம்
சாம்பசிவகாநான்சரணம் தாணுவேஉனக்கபயம்
வெள்ளைரிஷபமேறும் வித்தகாநான்சரணம்
மாபூஷணந்தரித்த மகாதேவாஉனக்கபயம்
முக்கண்படைத்தவரே முதல்வரேஉனக்கபயம்
திரிபுரமெரித்தவெங்கள் தேவாஉனக்கபயம்
காமனைக்கண்ணுலெரித்த கடவுளேநான்சரணம்
எமனையுதைத்தவரே ஈசாஉனக்கபயம்
கங்கையணிந்தோனே கடுக்கைதரித்தோனே
திங்களைத்தன்சிரசில் தரித்தசிவனுரே
அபயமபயமையா அந்திசகண்ணுஉமக்கபயம்
அபயக்குறல்கேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
ஆரடாகெந்தருவா அபயமிட்டவாரேது
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தவயணங்கள் வார்த்தையுரையுமென்றூர்
ஆண்டவனேஎன்சாமி அடியேனுருவிண்ணப்பம்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
காயாரக்காய்த்ததோரு கமுகினதுபாக்கை
வாயாரத்தின்றுதான் மண்மேலேதுப்பினேன்
தாமரைப்பொய்கையிலே சாமிபெருமானும்
தினகரனைத்தான்பார்த்து செபதபஞ்செய்தாராம்
நானுமிழ்ந்ததம்பலம் ராமர்கையிற்றூன்விழவே
கோபாலசுவாமியார் கோபம்பெரிதாகி

சக்கரத்தையனுப்பினூர் தலையைத்தரிக்கவென்று
என்னைக் கொல்லவருகுது இயலானசக்கரந்தான்
ஆகையாலாண்டவனே ஆதரிப்பீரென்றுவந்தேன்
என்னைநீகாத்தருளும் ஈசாவெனப்பணிந்தேன்
கார்க்கக்கடனுனக்கு கார்வண்ணன்மைத்துனனே
இவ்வார்த்தைதான்கேட்டு ஈஸ்வரருமேதுசொல்வார்
நானுவேறுவிஷ்ணுவேறே நானிலத்தில்கெந்தருவர்
ஆயருக்குப்பகையாகி அருகேவாலர்மேச
உன்னைநான்காததாக்கால் உலகளந்தாரென்னசொல்வார்
கார்வணணரெந்தனுக்கு கடிகிப்பகையாவார்
காக்கமுடியாது கடககவேபோய்விடுங்காண்
பிரமதேவன்தன்னருகே போனீரேயாமானல்
அவராலேயாகுங்காண் ஆதரிக்கவல்லபிரான்
என்றுரைத்தாராம உண்டோளரப்போது
அழுதுபுலம்பியே அப்புரம்போய்புகுந்தான்
பிரமலோகந்தான்புகுந்து பிரமா அருகில்வந்தான்
அபயமபயமையா ஆதரிக்குங்கர்த்தாவே
என்னையேயாதரியும் என்றல்லோதெண்டனிட்டான்
ஆயுளைப்பார்த்தெழுதும் அரிபிரமரேதுசொல்வார்
ஆருக்குபகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
வந்தகருமங்கள் வாய்திறந்துசொல்லுமென்றார்
ஆண்டவனேஐயாவே அயனரேநீர்கேளும்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
அடைக்காயும்வெற்றிலையும் அய்யாநான்மென்றுதின்று
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
மாயவனூர்கைத்தலத்தில் வந்துவிழுந்துதாம்
மாயன்வெகுகோபமாகி வரவிட்டார்சக்கரத்தை
என்னையேகொல்லுதற்கு இயலாயனுப்பினூர்
ஆகையாலாண்டவனே ஆதரிப்பீரென்றுவந்தேன்
எந்தனையாதரியும் என்றல்லோஅடிபணிந்தான்
இவ்வார்தைதான்கேட்டு ஏதுசொல்வான்நான்முகனும்
நான்வேறுவிஷ்ணுவேறே கானிலத்தில்கெந்தருவா
மாயருக்குப்பகையாகி வந்தாயோபாதகனே
உன்னையே ஆதரித்தால் உலகளந்தாரெந்தனுக்கு
பொல்லாப்புநேர்ந்துவிடும் பெரும்பாவிஎந்தனுக்கு
உன்னையேஆதரிக்க உதவாதுஎந்தனுக்கு
எமபுரமேகிநீ எமனுடனுரைத்தாய்
எந்தவிதமானலு எமனுன்னைகாத்திடுவான்
கடுகிநடவுமென்று கைவிட்டார்பிரமதேவர்
அழுதுபுலம்பியே அதிவிரைவாய்த்தான்வாரான்
எமனருகில்வந்து இளைத்துபுலம்புகிறன்

காலனுங்கண்டு கடுகவேயேதுசெய்தான்
ஆருக்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தால்
வந்தகருமமதை வாய்திறந்துசொலுமென்றான்
அப்போதுசெந்தருவன் அவருக்கெடுத்துரைப்பான்
அந்தரமார்க்கத்திலே அழகுரதமேறிவந்தேன்
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்ததாம் மாயருடகைத்தலத்தில்
ஆகையால்கோபித்து அனுப்பினார்சக்கரத்தை
என்னைக்கழுத்தறுக்க எகிரிவருகுதென்றான்
என்னையுமாதரியு மென்றானேசெந்தருவன்
காலனுங்கேட்டுமவன் கடுகியெடுத்துரைப்பான்
மாயருக்குப்பகையானால் மன்னவனேபார்க்கலாமோ
மாயருடஊழியத்தை மன்னவனேசெய்திடுவேன்
உன்னையேகாத்தாலே உலகளந்தார்கோபமுற்றால்
எதிர்த்துப்புறப்பட்டால் மதிர்நிற்கப்போறேனோ
காக்கமுடியாது கட்டழகாசெந்தருவா
அமராபதியாளும் அழகானதெய்வபிரான்
தேவேந்திரரருகில் சேர்ந்துநீர்போவீரானால்
காக்கவும்வல்லபிரான் கடிகிநீதோருமென்றார்
அவ்வார்த்தைகேட்டுமவன் அழுதுபுலம்பிவாராான்
தெய்வலோகந்தனிலே தேவேந்திரரருகே
அபயமிட்டுஅடிபணிந்தான் ஆனதொருசெந்தருவன்
ஆராதப்பிசீ அறிபவுரையுமென்றான்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவார்த்தை
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
வெற்றிலையும்பாக்கும் வால்மிளகுஜாதிபத்திரியும்
ஜாதிக்காய்ஏலரிசி சன்னலவுங்கமுடன்
வாசங்கள்தின்றுநான் மண்மேலேதுப்பினேன்
வந்துவிழுந்ததாம் மாயவனார்கைத்தலத்தில்
ஆகையினாலெம்பெருமான் அடியேன்மேல்கோபமாகி
சக்கரத்தையனுப்பியெந்தன் தலையைத்தரியுமென
வருகுதுசக்கரந்தான் வல்லுயிரைவாங்கவென்று
கொல்லவருகுது கொப்பெனவேசக்கரந்தான்
ஆதரித்தென்னையாட்சி அனேகங்கோடிமோட்சமுண்டு
என்றவுரைகேட்டு எதுசொல்வாரிந்திரரும்
மாயருக்குப்பகையாகி வந்தவனை ஆதரித்தால்
எதிர்த்தாரேயாமானால் எதிர்நிற்கப்போறேனோ
மாயனுக்குச்சரியானோர் வையகத்திலாருமில்லை
உன்னையேயாதரிக்க உலகத்தில்யாருமில்லை
தருமருடத்தம்பியவன் தார்விஜயனருச்சுனன்தான்
அருச்சுனனுன்னை ஆதரிக்கவேமுடியும்

அபயக்குரல்கேட்டு ஆதரிப்பான்வாழ்விஜயன்
ஆதிசிவனுன அரனாருமவந்தாலும்
எழுதும்பிரமாவும் எம்பெருமான்வந்தாலும்
முப்பத்துமுக்கோடி முனிவர்கள்வந்தாலும்
ஆர்வந்தெதிர்த்தாலும் ஆரவாரம்பண்ணினாலும்
அருச்சுனராசனவன் அனைவோரைவென்றிடுவான்
வாழ்விஜயனருச்சுனனும் வல்லமையுள்ளவன்காண்
அருச்சுனனை நீகோரி அபயமிட்டுபோனீரானல்
ஆதரிப்பான்வாழ்விசைய னதிவிரைவிற்போய்ச்சேரும்
என்றவுரைகேட்டு எழுந்தானேகெந்தருவன்
அழுதுபுலம்பியே அருச்சுனரைத்தேடிவாரான்
தெய்வலோகந்தாண்டி தேர்விஜயனைத்தேடி
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அலறியேயோடிவாரான்
அபயமபயமென்று அருச்சுனன்முன்னேவந்தான்

அருச்சுனன் கெந்தருவனுக்கு அபயங்கொடுத்தது.

அப்யக்குரல்கேட்டு அருச்சுனனேதுரைப்பான்
ஆரடாகெந்தருவா அழுதுபுலப்புவானேன்
ஆரெதிர்த்துவந்தாலும் அமராதுசெய்திடுவேன்
அந்தரதேவதைகள் ஐயன்பிடாரிகளும்
ஆகாயவாணிகளென் னுத்துமாதானறிய
காக்கிறேனஞ்சாதே என்றல்லோகைகொடுத்தான்
அருச்சுனன்கைகொடுத்து அஞ்சாதேயென்றுசொல்ல
சற்றேபயப்தெளிந்தான் தார்வேந்தன்கெந்தருவன்
அருச்சனராசனவன் அப்போதுஏதுசொல்வான்
ஆர்க்குப்பகையாகி அழுதுபுலம்பிவந்தாய்
எவரெதிர்த்தாருன்னோடே இக்கழுது நீவந்தாய்
வந்தகருமமென்ன வாய்திறந்துசொல்லுமென்றான்
அஞ்சிப்பயந்தவனும் அருச்சனனோடுரைப்பான்
ஆகாயவீதியிலே அழகுரதமேறிவந்தேன்
வாசங்கன்தின்றுநான மண்மேலேதுப்பினேன்
நானுமிழ்ந்ததம்பலந்தான் ராமர்கையில்விழுந்ததாம்
ஆகையால்மாயவரும் அப்போவெகுகோபமுடன்
என்னையேகொல்லவென்று எடுத்துவிட்டார்சக்கரத்தை
சக்கரம்வருகுதுகாண் தலையைத்தரிக்கவென்று
ஆதிசிவனருகில் அபயமிட்டுப்போனேனையா
தன்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
அயன்பிர்மதேவனிடம் அபயமிட்டுப்போனேனையா
ஆதரிப்பாரென்றுநான் அபயமிட்டுப்போய்ச்சேர்ந்தேன்
என்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்
எமதர்மராசரண்டை எதிர்கொண்டபயமிட்டேன்
தன்னாலேயாகாது என்றல்லோதள்ளிவிட்டார்

தேவேந்திரனருகில் சென்றுநான் அபயமிட்டேன்
காத்திடுவீரென்றுநான் கடுகி அபயமிட்டேன்
என்னாலேயாகாது என்றல்லோ தள்ளிவிட்டார்
அழகிலமிகுந்தவரே அருச்சுனனேயுமைநாடி
தேடியே அபயமிட்டு தெய்வலோகம்விட்டுவந்தேன்
ஆதரித்தீராமானால் ஐவர்க்குங்கீர்த்தியுண்டு
இவ்வார்த்தைதானைக்கேட்டு எழில்விசையனருச்சுனனும்
எண்ணாதுமெண்ணுகிறா னெண்ணமெண்ணுகிறான்
மாயருக்குப்பகையாகி வந்தவனைக்காத்தாலே
ஆயருக்குமெங்களுக்கும் அடுத்தாற்பகையாமே
என்னசெய்யப்போறேனென்று ஏங்கிவிசாரமிட்டு
ஐவாசகாயரல்லோ ஆயர்பெருமானும்
நம்பினேனென்றவரை ரட்சிக்கவேணுமல்லால்
காக்கிறேனென்றுசொல்லி கையைவிடலாகாது
ஆயர்பெருமானுக்கு அன்பாகவார்த்தைசொல்லி
எந்தவிதத்திலேயும் இன்றவனைக்காக்கவேணும்
அல்லவென்றுகோபமிட்டால் அமரதுசெய்திடுவோம்
என்றுநினைத்தவனும் என்னசொல்வான்வாழ்விசையன்
இக்கணஞ்சூரியனும் தெற்குவடக்கானாலும்
அழகானதாமரையும் அடியிலேபூத்தாலும்
நறுக்கிப்பிழிந்தென்னை நரகத்திற்போட்டாலும்
நாவாலேசொன்னதெல்லாம் நான்தவறப்போரதில்லை
எந்தவிதத்திலேயும் இடறகற்றிகாத்திடுவேன்
என்றல்லோவாதரித்தான் இயலானவாழ்விசையன்

அருச்சுனன் கெந்தருவனுக்கு பயந்தீர்க்கபெரு
மானுக்குகோபம்வந்து சக்கரத்தை அனுப்புகிறது.

வருகிறசக்கரந்தான் மண்ணுவிண்ணுங்கொள்ளாமல்
கண்கள்பொறிபறக்க கடுகிவருகிறதே
அருச்சுனராசரண்டை அருகேவந்துதெண்டனிட
என்னருகேகாரியமேன் எங்குலேந்திரசக்கரமே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றான்
சாமியனுப்பிவைத்த சக்கரமேதுசொல்லும்
மாயனுக்குபகையான பாடாவிகெந்தருவன்
அருச்சுனரேஉன்னிடத்தில் வந்தானரும்பாவி
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினார்மாயவனார்
ஆசையாலனுப்புங்காண் அருச்சுனரேஅவன்தலையை
அறுத்தெரிந்துயான்போறேன் அவனையனுப்புமென
தனஞ்சயனுமப்போது சக்கரத்துக்கேதுசொல்வார்
அபயமபயமென்று அழுதுபுலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனுனவனை

பாரளந்தானவற்குப் பகையானனென்றறியேன்
அபயமபயமென்று னுதரித்தேனவனை
காக்கிறேனென்றுசொல்லி கைவிடலாகாது
ஆனையால்சக்கரமே ஆயருக்குசேதிசொல்லும்
கோடிசரணம்நான் கும்பிட்டேனென்றுசொல்லும்
ஆயிரம்தெண்டனிட்டு அடிபணிந்தேனென்றுசொல்லி
சக்கரத்தாழ்வாரும் தார்விசையற்கேதுசொல்லும்
ஆனல்போய்வாமெனென்று அப்போதிரும்பிவந்து
மாயவரைக்கண்டு வணங்கிநமஸ்கரித்து
ஆதிசிவனருகில் அபயமிட்டுவோடுகையில்
ஆதரிக்கமாட்டேனென்று அவரும்விலக்கிவிட்டார்
அருச்சுனனுர்தன்னருகில் போனனபயமிட்டு
வணங்கிநமஸ்கரித்து மாயாவுன்வார்த்தைசொன்னேன்
உனக்குப்பகையான உண்மையெல்லாம்நானுரைத்தேன்
எத்தனைசொன்னலும் இரங்காமல்அருச்சுனரும்
ஆண்டவனேயுன்னருகே அனுப்பினன்சொல்லுமென்று
இவ்வார்த்தைகேட்கலுமே எம்பெருமாள்கோபமாகி
ஆங்காரக்கோபமுடன் அரிராமரென்னசொல்வார்
ஐவரைக்காப்பதற்கு ஆண்டவனாய்நாமிருந்து
இத்தனைநாள்நான்காத்தேன் இயலானபஞ்சவரை
எனக்குப்பகையாளி தனக்குப்பகையல்லவோ
ஆதரிக்கஞாயமுண்டோ அறியானேயென்சமர்த்தை
மறுக்காலொருதரம்நீ வாள்விஜயனருகிற்சென்று
நானுரைத்தவார்த்தையெல்லாம் நல்விஜயனுக்குரைத்து
மாயவற்குவேண்டாத மாபாவியானவனை
விட்டுவிட்டாலல்லாது வேணபகையாகுமென்று
குருகுலவம்மிசத்தார் கூட்டோடொழியுமென்று
கொல்லநினைப்பார்காண் குடிகேடுவருகுதென்று
சொல்லியேவாருமென்று சொன்னரேமாயவனர்
அப்போதுசக்கரத் தாழ்வாருந்தானடந்தார்
காடுஞ்செடியுங் கரியமலைதான்கடந்து
அருச்சுனராஜரண்டை அநகேவந்துதெண்டனிட்டு
மாயவனர்சொன்னதொரு வார்த்தையொன்றுந்தப்பாமல்
காண்டீபனருச்சுனற்குக் கரியமால்சேதிசொல்லும்
உண்டானவார்த்தையெல்லாம் ஒளியாமலேயுரைத்தான்
காண்டீபனருச்சுனரும் கடிகியேயேதுசொல்வான்
ஏதறிவான்கெந்தருவன் ஏழைபானுன்னடியேன்
வாள்விஜயனர்ச்சுனன்மேல் வன்பகையுந்தனுக்கேன்
ஏதுகுற்றமானலும் எனக்காய்மனம்பொறுத்து
ஆயிரந்தெண்டன் அடிபணிந்தேனென்றுசொல்லும்
ரக்கிறேனென்றுசொல்லி கைவிடஞாயமில்லை

நறுக்கிப்பிழிந்துயென்னை நரகத்திற்போட்டாலும்
கைவிடான்விசையனென்று கண்ணருக்குநீயுரையும்
ஊழியுள்ளகாலமட்டும் உனைமறவானருச்சுனனும்
வணங்கினனென்றுரையும் மாயருக்குநீர்தாமும்
அநேகங்கோடிநமஸ்காரம் அருச்சுனன்செய்தானென்றும்
தாமோதரன்றனக்குச் சக்கரமேபோய்ச்சொல்லும்
சக்கரமேபோய்ச்சொல்லுஞ் சரணஞ்சரணமென்று
சொல்லித்தொழுதானே சுவாமிபெருமானை
சக்கரத்தாழ்வாற்குந் தனஞ்சயன்விடைகொடுக்க
சக்கரத்தாழ்வாரும் தானுமங்கேபோய்நடந்தார்
காடுஞ்செடியுங் கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைதாண்டி அதிகவனந்தாண்டி
மாயருகில்வந்து வணங்கியேதெண்டனிட்டு
வாள்விசையன்சொன்னதொரு வார்த்தைகள்தானுரைக்க
ஆயரவர்கேட்டு ஆங்காரக்கோபமதாய்
ஐவர்பஞ்சபாண்டவற்கு வனர்த்தம்பிறந்ததென

சக்கரம் வருச்சுனன்மனமறிந்து பெருமானுக்குச்

சொல்ல பெருமாள் கோபித்துச் சாத்தகியை அனுப்புகிறது.

கொல்லநினைப்பாரே குடிகேடுவந்திடுமே
வேண்டாங்காண்வாள்விசையா வீண்பகைதேடாதேயென்
அருச்சுனற்குச்சொல்லிநீ அதிவிரைவிலோடியந்த
கெந்தருவன்தன்தலையை இந்தட்சணமறுத்து
ஒருக்ஷணப்போதையிலே உத்தரவுகொண்டுவாரும்
என்றவுரைகேட்டு எழுந்துநடந்தாரும்
காடுசெடியுங் கரியமலைதான்கடந்து
அருச்சுனன்தானிருக்கும் ஆரணியப்போய்ச்சேர்ந்தான்
அருச்சுனரைக்கண்டு அடிபணிந்துதெண்டனிட்டான்
மாயனுரைத்ததொரு வார்த்தையொன்றுதப்பாமல்
ஒன்றுமொளியாமல் உரைத்தானேசாத்தகிதான்
அதிராமர்சேதியெல்லாம் அருச்சுனன்தான்கேட்டு
எத்தனைவார்த்தைக ளிரக்கமாய்ச்சொன்னாலும்
இரங்காமல்மாயவரும் எதிர்க்கவுஞ்ஞாயமுண்டோ
ஆயன்பெருமாளும் அறியாரோஎன்சமர்த்தை
பெண்டுகள்பேச்சுகளோ பேசுகிறாரெம்பெருமாள்
கைவலுமையுண்டானால் கடிகிவரச்சொல்லும்
மூலையிலேதானிருந்து மொருகிறதுஞாயமுண்டோ
மைதானவெளியிலே வரச்சொல்லும்சண்டைபண்ண
காக்கிறேனென்றவனை கைவிடப்போறேனோ
மாயவருடனாக பமேயஸ்வரனார்வந்தாலும்
பெருமாளுடனாகப் பிரமதேவர்வந்தாலும்

எவரெவரெதிர்த்தாலும் இளைப்பேனென்றுபாராதே
போவென்றுசொன்னான் போர்விசையன்கோபமதாய்
சாத்தகியாழ்வாரும் தாண்டந்தார்பொட்டெனவே
ஆயரருகில்வந்து அடிபணிந்துதெண்டனிட்டான்
அருச்சுனன்சாத்தகரும் ஆண்மைகள்பேசினதும்
சண்டைக்குமுன்நீபோய் தான்வரச்சொன்னதுவும்
அவ்வார்த்தைசொல்லுகையில் ஆயருங்கோபமுற்று
அவ்வலரிகண்கள்ரெண்டும் செவ்வலரியாகுதுபார்

## அருச்சுனன்மேல்பெருமாள்கோபமாகி சண்டைக்குப்போக திரியோதிரனை வரவழைக்கிறது.

கோபம்பெரிதாச்சு கோபாலநாதருக்கு
சாத்தகியைத்தானழைத்து சாமியாரேதுசொல்வார்
திரியோதிரனுக்குச் சேதியுரையுமென்றார்
மாயவற்குப்பகையானார் மன்னர்பஞ்சபாண்டவர்கள்
ஐவரைக்கொல்லவென்று ஆயர்பயணமிட்டார்
உன்னுடையசேனைகளும் யுத்தமான ராசர்களும்
சேரத்துணையாகச் செப்பிவரச்சொன்னார்
வாருங்களென்று வரவழையுந்திரியனைத்தான்
இப்போசமயம் இதோபயணம்நாங்களென்று
நாகக்கொடிவேந்தன் ராசாவைஅழையுமென்றார்
சாத்தகியாழ்வாரும் சரணமிட்டுப்போய்நடந்தார்
அஸ்தினபுரத்துக்கு அடைவுடனேபோய்ச்சேர்ந்து
திரியோதிரனுக்குச் சேதிகள்சொல்லலுற்றார்
ஐவரைக்கொல்லுகைக்கு ஆயர்மனதாகி
அழைத்துவரச்சொன்னார்காண் அரவக்கொடியோனே
வருவீரோஎன்றுசொல்லி வாய்மொழிகேழ்க்கலுற்றார்
சாத்தகிசொல்லலுமே சர்ப்பக்கொடியோனும்
திரியோதிரன்கேட்டு சிந்தைமனங்குளிர்ந்து
ஐவரைக்கொல்லுகைக்கு அதிகமனதாகி
நல்லசமயம் நமக்குகிடைத்ததென்று

## திரியோதிரன்பெருமாளிடம் வருகிறது.

அங்கேகெட்டான்சண்டாவை அடியமென்றான்பேரிகையை
இன்றுவெளிகூடாரம் இப்போதுபோடுமென்றான்
கானலுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
யானையின்மேல்டங்காவும் குதிரையின்மேல்டோலவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைசெவிடுபட
யானையுஞ்சேனையுடன் அரசுமன்னர்பயணமிட்டார்
திரியோதிரன்தம்பிமார்கள் தொண்ணூற்றொன்பதுபேர்
கருணன்சகுனியும் காந்தாரிபிள்ளைகளும்
துரோணரசுவத்தாமன் சொற்பெரியகாங்கையனும்

கிருபன்கிருபாசாரி கீர்த்தியுள்ளமன்னர்களும்
பின்னையவன்லக்குணனும் பேர்மிகுந்தமந்திரியும்
மற்றுஞ்சிலராசர்களும் மந்திரிகள்பயணமானார்
அமரதருஞ்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்தூவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
எண்ணொன்று ஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
நாலுபக்கத்திலுள்ள ராசாக்கள்சேனையுடன்
கார்மேகம்போலே கறுத்தானைகூட்டம்வரும்
மேகத்துமின்னலைப்போல் வெள்ளானைக்கூட்டம்வரும்
வானத்துமின்னலைப்போல் மணித்தேரசைந்துவர
செவ்வானம்போலே சிவந்தபுரவிகளும்
அர்ச்சுகிருகிறென்ன பானைநெடுந்தேரசைய
வண்டில்கிருகிறென்ன மதயானைகோஷ்டமிட
குதிரைகளைக்குமங்கே கொக்கரிக்கும்பாளயங்கள்
செந்தூளெழும்புகுது திசைகரனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரிதான்முழங்க
தேர்களசைந்துவரச் சிகரக்கொடிபறக்க
மாயவனூர்பட்டணமே வாரார்களெல்லோரும்
அக்கேகட்டான்சண்டாளை அங்கிறங்கப்பாளயங்கள்
திரியோதிராஜன் ஸ்ரீகிருஷ்ணனருகில்வந்து
மாயவனைக்கண்டு வணங்கியேதெண்டனிட்டான்
எழுலகமுண்டசாமி எம்பெருமாளேதுசொல்வார்
மாநாகங்கொண்ட மகாராசாநீர்கேளும்
காலையில்காலெழுந்து கனிவாய்முகங்கழுவி
தினகரனைத்தோத்தரித்து செய்தேன்செபதபங்கள்
ஆகாயவீதியிலே அரும்பாவிகெந்தருவன்
வாசங்கள்தின்றுமென்தன் வலதுகையில்தானுமிழ்ந்தான்
அவனைக்கழுத்தறுக்க அனுப்பினேன்சக்கரத்தை
அபயமபயமென்று அழுதுபுலம்புகையில்
அருச்சுனராஜனவன் ஆதரித்துக்கொண்டானும்
ஆகையாலருச்சுனனை அதமாக்கவேணுமென்று
உந்தனுக்குச்சொல்லி உரகதனேவாருமென்றேன்
என்வார்த்தைதள்ளாமல் என்மேல்தயவாகிவந்தீர்

ஐவரைக்கொல்ல திரியோதிரனும் அவன்சேனைகளும் எம்பெருமாளும் அவர்சேனைகளும் சண்டைக்கு வருகிறது.

ஐவரைக்கொல்லுகைக்கு அனைவரும்போமேவாமென்றார்
பயணம்பயணமென்று பயணபேரியடியுமென்றார்
அமர்தருஞ்சமரதரும் அதிரதரானவரும்

கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
அத்தண்டராஜுவரும் அல்லவரும்பயணமென்றார்
துரோணரசுவத்தாமர் சொல்லரியவீரர்களும்
கிருபன்கிருபாசாரி கீர்த்திபெற்றகர்னனுமே
எண்ணூன்கு ஆயுதங்கள் எடுத்தரையிற்கட்டினார்கள்
ஏறினார்தேர்மேலே எடுத்தார்நெடுங்குடையை
தேரணியுமாவணியும் சேனைத்திரளுடனே
வாரஜனங்களெல்லாம் மட்டுமிதங்களில்லை
காடுஞ்செடிதாண்டி கரியமலைதான்கடந்து
வனமாய்வனங்கடந்து வருகுதுபாளையங்கள்
தினகரன்வனந்தனிலே சேர்ந்தார்துரைகளெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
முருக்கமகாரிஷிவனத்தில் முடிமன்னர்வந்தார்கள்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காளமகாரிஷிவனத்தில் கடுகிவந்தாரவ்வேளை
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
காமதேனுபர்வதத்தில் கடுகிவந்தார்துரைகளெல்லாம்
அன்றுமுகாமங்கிருந்து அப்பால்நடக்கலுற்றார்
கெந்தர்வபர்வதமே கிட்டியேவாரார்கள்
ஒற்றொருவனை ஓடியேசொல்லுமென்றான்
திரியோதிரனபடையும் ஸ்ரீகிருஷ்ணன்சேனைகளும்
வருகிறதென்றுசொல்லி வாள்விஜயனுக்குரையும்
என்றுசொல்லியருச்சுனற்கு அனுப்பினார்தூதுவனை

அருச்சுனற்கு எம்பெருமாள் சண்டைக்கு வருகிறே
னென்று தூதனிடம் சொல்லியனுப்புதல்.

ஓடினான்தூதுவனும் ஒருநொடியிற்போய்ச்சேர்ந்தான்
அருச்சுனராசருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மாயனும்புரகதனும் வருகிறார்சண்டைபண்ண
எச்சரிக்கையாகவே இருமென்றானெம்பெருமாள்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தானருச்சுனனும்
தருமாருகில்வந்து சாஷ்டாங்கதெண்டனிட்டு
அண்ணன்தருமருக்கு அடிபணிந்துதெண்டனிட்டு
ஆகாயவீதியிலே அழகானகெந்தருவன்
மச்சுரதமேறி வருகிறவேளையிலே
வாசங்கள்தின்று மண்மேலேதுப்பினானும்
அவனுமிழ்ந்ததம்பலங்கள் அரிராமர்கையில்விழ
மாயன்பெருமாளும் மகாகோபந்தானாகி
சக்கரத்தைவிட்டார்காண் தலையைத்தரிக்கவென்று
அபயமபயமென்று அலறிப்புலம்பிவந்தான்
அபயக்குரல்கேட்டு ஆதரித்தேனவனை

ஆதரித்தேனென்றுசொல்லி அமர்செய்யவந்தாராம்
இவரைக்கொல்லவென்று அரிராமர்வாராராம்
மாயருடன்சண்டைபண்ண வாறீரோ அண்ணாவே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுரைப்பார்தருமருமே
போருக்குமாயருடன் போவாதேதம்பியென
வெற்றிமதகரியான வீமனவனேதுசொல்வான்
அஞ்சாதேதம்பியரே அதமாக்கிப்போட்டிடுவேன்
திரியோதிரன்படையும் ஸ்ரீராமர்சேனைகளும்
எல்லோரையுங்கொன்று எமலோகஞ்சேர்த்திடுவேன்

### வீமனும் அருச்சுனனும் சண்டைக்குப்புறப்படுகிறது.

என்றுமதவீமன் எழுந்தானேகோபமுடன்
தருமனையுந்துரோபதையுந் தம்பிமாரிருவரையும்
அபயமிட்டுக்கெந்தருவன் அவனையுந்தானழைத்து
உச்சிமலைநடுவே உள்ளேகுகையிருக்கும்
அந்தக்குகையிலே அனைவோரும்போயிருங்கள்
வந்ததிரளையெல்லாம் மண்ணுக்கிரையிடுவோம்
எம்பெருமாள்சேனைகளை எமலோகஞ்சேர்த்திடுவோம்
எச்சரிக்கையாகவே இருமென்றானப்பொழுது
அப்படியேதருமரவர் அதிவிரைவாய்த்தானெழுந்து
உச்சிமலைநடுவே ஒருகுகையிற்போயிருந்தார்
வீமாருச்சுனரும் விரைவாகத்தானெழுந்து
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு பாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு தத்திப்பூச்சல்லடமாம்
சல்லடங்களிட்டுமல்லோ தட்டிவரிந்துகட்டி
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சங்குவிட்டு
அம்புவில்லுந்தானெடுத்து ஆயுத்தப்பட்டார்கள்
வடக்குமுனையிலே மதவீமன்வந்துநின்றான்
தெற்குமுனையிலே தேர்விஜயன்வந்துநின்றான்
வருகுதுபாளயங்கள் மண்ணும்விண்ணுங்கொள்ளாமல்
ஆனைகுதிரைரதம் அளவில்லாச்சேனைகளும்
வருகிறஜனங்கள்தனை மாயவனார்தானழைத்து
திரியோதிரனை சேரவரவழைத்து
உன்னுடையசேனைகளை உகமையுள்ளராசர்களை
சமரதுசெய்யவந்த சமர்த்துள்ளமன்னர்களை
ஆனைகுதிரைகளும் அரசுமன்னருள்ளவரும
மாவணியுந்தேரணியும் மற்றுமுள்ளராணுவமும்
உன்னுடையபாளயத்தை ஒன்றாகவேகூட்டி
வடக்குமுகத்திலே மதவீமன்தன்மேலே
சண்டைபோய்செய்யுமென்று தான்சொன்னார்திரியனுக்கு

தெற்குமுகத்திலே தேர்விஜயன் தன்னருகே
என்னுடையசேனைக ளெல்லோரும்போயெதிர்த்து
அருச்சுனன்தன்னுடனே அமரதுசெய்திடுவோம்
என்றுஅனுப்பிவைத்தார் இயல்ானமாயவரும்
தவளச்சங்கூதினார் சண்டைக்குவாரேனென்று
ஊதினார்சின்னம் உளகளந்தார்பாளையத்தில்
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைபேரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
செந்தூளெழும்புகுது தினகரனைக்கப்புகுது
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
வந்துஎதிர்த்தார்கள் வாள்விஜயன்தன்னுடனே
அந்தச்சமயத்தில் அரவக்கொடியோனும்
என்னுடையசேனையுடன் தான்வடக்குதிசையதனில்
வந்துஎதிர்த்தானே மதவீமன்தன்னுடனே
எண்ணெணுச்சேனையுடன் எக்கரித்துத்தான்வளைத்தார்
சிங்கநாதந்தானூதி சேனைகளுங்கொக்கரித்தார்
கண்டான்மதவீமன் கண்கொள்ளாச்சேனைகளை
எல்லவரைக்கொல்லவென்று எழுந்தானேமதகரியான்
கோபம்வருகுது கொற்றவனார்வீமனுக்கு
அவ்வலரிக்கண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்தெடுது
கண்ணையுருட்டிக்கதுப்பினான் சேனைகளை
எட்டினான்கல்மலையை எகிறவிட்டான்பாளையத்தின்
மலைகளைத்தான்பிடுங்கி மதவீமன்வீசுகிறான்
குன்றுகள்சேர்த்தெடுத்துக் கொப்பெனவேசாடுகிறான்
ஆனைகுதிரைகளும் அலறிக்கலங்கிடுமாம்
அச்சுகளுந்தான்முறிந்து அநேகரதம்விழுமாம்
வண்டிமுறிந்துசில பச்சுத்தேர்தானொடியும்
ஜெனங்கள்மடியுது செம்புரவிஓடுகுது
கண்டங்கண்டமாகுது கடுஞ்சேனையத்தனையும்
அம்மாடியென்றுசொல்லி அலையுதுபாளையங்கள்
செத்தஜெனங்களென்றால் மட்டுமிதங்களில்லை
ரத்தாறுஓடுகுதுரணங்கள் மிகக்கொப்பளிக்க
ஐயோசிவனேயென்று அலையுதுபாளையங்கள்
பார்த்துமுடியாது பாவியுடஜனங்கள்
சொல்லிமுடியாது துரியோதிரன்பாளையங்கள்
இந்தவிதமாக எழில்வீமன்சொல்லுகிறான்
இப்படியாகவே இவன்சண்டைபண்ணுகையில்
ஆணழகுமன்னன் அருச்சுனன்தன்னுடனே
வந்துஎதிர்த்தாரே மாயர்பெருமாளும்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
மார்புரளத்தானெடுத்து தோள்புரளவாங்கிவிட்டான்

பாணம்வருவிதங்கள் பார்க்கமுடியாது
சொர்ணமழைபோலே சொரிகிறார்பாணமது
சங்கரன்மாரிபோலே சரமேல்சரம்விடுத்தார்
அருச்சுனன்பின்னிடையான் அகோரசரம்பொழிந்தான்
ஆகாயந்தன்னலவாய் அம்பாலேபந்தலிட்டு
சூரியனைத்தான் வளைத்தான் சூராதிசூரனவன்
வில்பிடித்தகைத்தலத்தில் மெத்தசிவப்பேரும்
வளைத்தவில்சிமிராமல் மாரிச்சரம்பொழிந்தார்
வாயுவினஸ்திரமும் வருணாஸ்திரமும்விட்டார்
பின்னையும்அஸ்திரங்கள் பிரளமாய்த்தான்விடுத்தார்
நாலுகடிகைமட்டும் நல்லசண்டைபண்ணுர்கள்
ஒருவற்கொருவர் உகந்து பின்வாங்காமல்
சண்டையமர்க்களத்தில் தாக்கிப்பொருதலுற்றார்
விலக்குவாரில்லை மிகுத்தசமரதனை
மாயன்பெருமாட்கு வருகுதுமெத்தகோபம்
என்றுமில்லாத்கோபம் எழும்புதுமாயவற்கு
விட்டதொருபாணமெல்லாம் மட்டறுத்தான்வாள்விஜயன்
அருச்சுனரைக்கொல்ல அரிராமர்கோபமதாய்
சக்கரத்தைத்தாமெடுத்தார் சாமிபெருமாளும்
கொல்லவினைவுகொண்டார் கோபாலர்அர்ச்சுனரை
மந்திரத்துடனபிட்டு மாயவனுமேதுசொல்வார்
அருச்சுனன்தன்சிரசை அரைநொடியில்வாங்குமென்றார்
சுழற்றியெடுத்தாரே சுவாமியுஞ்சக்கரத்தை
கண்டமேவனாள்விஜயன் காந்தாளமாயெழும்பி
தானுமெடுத்தானே தன்னுடையக்ககரத்தை
சக்கரத்தைமந்தரித்து சாமியைக்கொல்லவென்று
எடுத்தானேசக்கரத்தை இமையோர்கள்தானறிய
சக்கரத்தைமந்திரித்து தான்விடஉரையறியான்
வாவென்றழைக்க வகையறியானருச்சுனனும்

சாமிபெருமாள் சக்கரமெடுக்கத்தனஞ்சயன் பதில்சக்கர
மெடுக்க இருவரும் சமாதானமாகிறது.

கண்டார்பெருமாளுங் கனமோசம்வந்ததென்று
நாமல்லோகற்பித்தோம் நல்விஜயனருச்சுனற்கு
சக்கரத்தைவிட்டாக்கால் தானழைக்கவகையறியான்
சக்கரம்வந்துதானால் தலையையறுத்துவிடும்
மோசம்வருகுதென்று முகில்வண்ணரேதுசெய்தார்
தன்னுடையசக்கரத்தை சாமியார்தேரில்வைத்தார்
தேரைவிட்டிறங்கினார் ஸ்ரீராமர்பொட்டெனவே
கண்டானேஅருச்சுனனும் கீழிறங்கினான்
தேரைவிட்டுத்தானிறங்கி ஸ்ரீராமர்க்கெதிரானான்
ஒருவர்க்கொருவர் உறவாடிக்கொண்டார்கள்

எம்பெருமானும் அர்ச்சுனனும் சமாதானமானதை திரியோதிரன்
கண்டு பொறாமைபட்டுச்சொல்லாமல் ஓடுகிறது.

கண்டான் திரியோதிரன் கரியமால்மோசமதை
தனஞ்சயனும் மாயனுமே தழுவிவிளையாடுவதை
எண்ணாதுமெண்ணினான் எரிநாகங்கொண்டவனும்
மாயன்கெடுத்தானே வஞ்சனைகள்செய்தானே
பொல்லாநினைவுகொண்டு பெருமாளழைத்துவந்தார்
நம்மையேகொல்லவென்று நாரணரழைத்துவந்தார்
அறியாமல்வந்துவிட்டோம் அமரதுசெய்வோமென்று
மாயவனைநம்பி வருவதுநீதியல்ல
ஐவர்சகாயரென அவனியதிற்கேட்டிருந்தும்
அறிந்துமிருந்துநாம் அநீதமாய்மாளவந்தோம்
யுத்தம்பண்ணவந்தின் குறவாடிப்போனாரே
கொல்லுகிறேனென்றுவந்து கூடியுறவாடினார்கள்
இனியிருக்கஞாயமல்ல என்றுவழிபிடித்தான்
ஆனையுஞ்சேனையும் அண்டவொண்ணாப்பாளையமும்
தம்பியிருந்த தளம்பெரியசேனைகளை
கூட்டிநடந்தானே கொத்துப்போல்வீரியனும்
காடுஞ்செடிநடந்து கரியமலைதான்கடந்து
ஆறுஞ்சுனைகடந்து அநேகமலைதான்கடந்து
அத்திநகர்பட்டணத்தை அடுத்தான்திரியனுமே
அந்தசமயத்தில் ஆயரும்அர்ச்சுனரும்
ஒருவற்கொருவர் உறவாடிப்போய்நடந்தார்
மலையேறிஉச்சி வராரிருவருமாய்
தருமருந்துரோபதையும் தம்பிமாரிருவருமாய்
கடுகியெழுந்திருந்து கார்வண்ணரைத்தொழுதார்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்மாயவரை
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
பெருமாள்மனமகிழ்ந்து பிரியமுடன்தான்வாழ்த்தி
அல்லவரைக்கையமர்த்தி அரிராமர்வீற்றிருந்தார்
தருமருடனுக சாமியவ்ரேதுசொல்வார்
காலைக்கடன்முடித்துக் கையேந்திசெபதபங்கள்
செய்துகொண்டிருக்கையிலே தேரேறிஅந்தரமாய்
ஆரோவொருகெந்தருவன் அதிகக்கெருவமதாய்
போகிறவனென்னை கபிற் புளிச்சென்றுதம்பலத்தை
துப்பினான்சக்கரத்தைத் துணித்துவாவென்றனுப்ப
கிரீடி அபயமெனக்கெந்தருவனோடிவர
எனக்குபகையானஇயலானபாதகனை
ஆதரிக்கஞாயமுண்டோ அமர்செய்யக்காரியமேன்
என்னோடமர்பொருக இராஜாவேஞாயமுண்டோ
தர்மபுகழ்பெரிய தருமராவரோதுசொல்வார

அறியாதார்செய்தபிழை ஆண்டவனேமனம்பொறுத்து
தெரியாதார்செய்தபிழை தேவர்மனம்பொறுத்து
இரவும்பகலுமே எப்போதுமுந்தனைத்தான்
உம்மைத்தொழுதல்லோ உலகாளவென்றிருந்தேன்
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உம்மையேதெய்வமென்று உயிர்கொண்டுலாவுகிறோம்
என்றுவணங்கினார் இயலானதருமரவர்
உள்ளங்குளிர்ந்துமே உலகளந்தாரேதுசொல்வார்
அருச்சுனரைத்தான்பார்த்து அரிராமரேதுசொல்வார்
சென்றதுஉன்சபதம் தேவேந்திரன்மகனே
அபயமிட்டபேர்களைத்தா னாதரிக்கவல்லபிரான்
செப்பியதுதான்தவறான் தேவேந்திரன்மகனார்
மார்க்கண்டனுக்காக மயேஸ்பரன்சொல்லிவிட்டார்
நிலையறிபார்பரமசிவன் நிலையறிந்தான்நாமறியோம்
உன்னிலும்வல்லபிரான் உலகத்திலாருமில்லை
சந்தோஷமாச்சுது தர்மர்பஞ்சபாண்டவரே
இந்தவனம்விட்டு இனியவனம்போயிருங்கள்
ஏதுவினைவந்தாலும் என்னைநினைந்திடுங்கள்
போய்வாரேனென்று பெருமாளெழுந்திருந்தார்

எம்பெருமாள் விடைபெற்று தன்னிருப்பிடம் செல்லுகிறது.

ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
காடுஞ்செடியும் கரியமலைதான்தாண்டி
மாயவனார்போனபின்பு வாள்விஜயனேதுசொல்வான்
வாராய்நீகெந்தருவா வார்த்தையொன்றுநீகேளும்
(உன்) ஆபத்துதீர்ந்தது ஆண்மையுள்ளகெந்தருவா
உந்தனரண்மனைக்கே உளமகிழ்ந்துபோய்ச்சேரும்
என்றுவிடைகொடுத்தார் எழில்விஜயனருச்சுனனும்
அப்போதுகெந்தருவன் அருச்சுனர்க்குத்தெண்டனிட்டு
நான்செய்தபாவத்தை இராஜனேதீர்த்துவிட்டீர்

கெந்தருவன் அர்ச்சுனர்கையில் விடைபெற்றுக்கொண்டு
தன்னிருப்பிடம்போய்ச்சேருகிறது.

ஆபத்தைதான்தீர்த்து ஆதரித்தீர்வாள்விஜயா
உனக்கேதுநான்தருவேன் உயிர்க்கேத்தராஜாவே
பாராசாரிவெண்புரவி பஞ்சவர்ணநற்புரவி
ராகாப்புரவிநான் தாரேன்காண்வாள்விஜயா
உந்தன்ரதத்திற்கு உற்றபுரவியென்றான்
ஆனலமுருமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
வனவாசந்தீர்ந்துநாங்கள் வந்தபிறகாக
அப்போதுவேணுமென்று அப்புரவிதானனுப்பும்
எந்தன்மேல்தயவுநீ என்றும்மறவாதே

போய்வாருமென்றுசொல்லி புண்ணியருங்கூறினார்
மாயனென்னும்கெந்தருவன் வணங்கியேதெண்டனிட்டு
போதச்சரணமென்று போய்நடந்தான்கெந்தருவன்
ஏழாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு
இந்தக்கதைதன்னில் இடறுகளுண்டானால்
ஜகத்திலுள்ளவர்கள் சரியாகயிக்கதையை
இகழ்ச்சியாயுள்ளதெல்லாம் புகழ்ச்சியாய்தான்திருத்தி
அகத்தினிற்றான்பொருந்தி அன்பாகத்தான்படித்தால்
சுகத்துடன்வாழ்ந்து சுவர்க்கபதிசேர்வார்கள்
இந்தப்படியாக வெப்போதும்வாழ்ந்திடுவார்
வாழ்த்திவிடைகொடுத்தார் மாயவனாரப்போது
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனார்

ஏழாவது கெந்தர்வபர்வதம் முற்றிற்று.

## அ-வது குருபாரிஷிவனம்.

எட்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மண்ணிவைத்தசீமாடு வனவாசம்போறார்கள்
குருபாரிஷிவனத்தில் குடித்தனமாய்போறார்கள்
அந்தவனத்திலே ஐவர்குடித்தனமாய்
ஐந்தடுக்குப்பர்னசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குப்பர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
பர்னசாலைமேல்வாசப் பஞ்சவர்கள்வீற்றிருந்தார்
அந்தவனத்திலே அனேகநாட்சென்றபின்பு

துரோபதைவனசாரிவந்து பாரிசாதபுஷ்பம் கேட்கிறது.

தோராவடிவழகி துரோபதைநாயகியும்
ஒற்றையொருநாளில் ஒண்டியாய்துரோபதையாள்
அந்தவனத்தி னதிசயத்தைப்பார்த்துவர
வரத்திற்பெரியவராம் மகாரிஷியானவரும்
யோகத்திற்பெயரிவராம் உத்ரகுருபாரிஷியும்
சாமியிலும்பெரியவராம் தபத்தில்மிகுந்தவராம்
(அவர்) பூசைபண்ணுந்தீர்த்தம பொய்கைபோலாகுது
ஒடுஞ்சலத்திலே ஒதுங்கிவரும்பூமலரும்
பாரிசாதபூமலரும் பரிமளமாய்வீசுகுது
ஆற்றிலடித்துக்கொண்டு அலைந்துவருகுது
கண்டாளே துரோபதையாள் கடிகியனதுகொண்டாள்
மெத்தாசைபட்டாளே வேல்பொருதுங்கண்ணாளும்
எண்ணுதுமெண்ணுகிறா ளெண்ணித்துரோபதையும்
ஆரோடேசொன்னாலே ஆருமிந்தகாரியங்கள்
எவரோடேசொன்னாலே எடுத்தளிப்பாரிம்மலரை

வெற்றிமதயானை வீமருடன்சொன்னையானால்
பறித்துத்தருவார்காண் பரிமளத்தைநாமறிய
என்றுநடந்தாளே இளங்கொடிதுரோபதையும்
பர்ணசாலைமேலாகப் பஞ்சாலிஓடிவந்து

துரோபதை வீமனைப் புட்பம்கேட்கிறது

வெற்றிமதயானை வீமனைத்தான்பார்த்து
ஏலப்பசுங்கிளியாள் இளங்கொடியாளேதுசொல்வாள்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவிண்ணப்பம்
காணுதுகண்டேன்காண் கண்டாசைபட்டுவந்தேன்
பாராதுபார்த்துவந்தேன் பார்த்தாசைபட்டேனையா
என்மனதுக்கேற்றபடி எனக்குவிடைதாரும்
வெற்றிமதயானை வீமரவரேதுசொல்வார்
பாஞ்சாலன்பெற்றபெண்ணே பச்சைப்பசுங்கிளியே
ஏதுகினைத்துவந்தாய்எனக்கரியசொல்லுமென்றார்
தோராவடிவழகி துரோபதையாளேதுசொல்வாள்
அகிலாண்டகாவேரி ஆறொன்றுதான்வருது
ஆற்றங்கரையருகில் அங்கொன்றுதான்வருது
பரிமளத்தோடிருக்குது பார்த்துவந்தேன்பாரிசாதம்

வீமன்பாரிசாதபுட்பம் கொண்டுவரப்போகிறது

வெற்றிமதயானை வீமரெழுந்திருந்து
இங்கேயிரும்பெண்ணே என்றேயெழுந்திருந்து
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
கட்டிவரிந்துகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
தெண்டாயுதமெடுத்து சிலைவீமன்வாரானே
ஆற்றங்கரையோரம் அங்குவீமன்வாரானே
பூமரத்தைத்தேடியே போனானேவீமனவன்
யோசனைக்குயோசனை உயரமுள்ளபூமரமும்
இதுவென்னகிருமரம் இட்சணமேகொண்டுவா
ஏழுசுற்றுவேலிகளாம் இருபக்கமாமலையும்
மாமலைதன்னிலே வல்லனுமார்காவலதாம்
பூவனத்திற்போகவென்று போகையில்வீமனவன்
வாசற்படியிலே வல்லனுமார்படுத்திருந்தார்
கண்டாரனுமாரும் கரிவீமனைப்பார்த்து

வீமனுக்கும் அனுமாருக்குஞ் சண்டையாகிப் பின்பு
சமாதானப்படுதல்

ஆரடாராட்சதனே அஞ்சாமற்போகவந்தாய்
இந்தவனத்திலே ஏதுக்குப்போராயென்றாய்
போகவிடேனென்றானே போரனுமானப்போது

வெற்றிமதயானை வீமனுந்தான்கேட்டு
கோபம்வருகுது கோலாகலவீமனுக்கு
சாணுண்டுஇக்குரங்கு தடைபடுத்துதென்றுசொல்லி
கைரெண்டும்நீட்டியே கட்டழகன்வீமனவன்
கோடையிடிபோலே குத்தினான்நடுமுதுகில்
அந்தஅடிசத்தம் அந்தவனம்கிடுகிடென்ன
அந்தவனத்திருந்த அநேகமிருகமெல்லாம்
மறுகாலொருவனத்தே மருண்டோடுதேமிருகம்
அனுமாருடரோமங்கள அயர்ந்துகொடுத்ததுகாண்
கோபம்வருகுது கோபாலதூதுவர்க்கு
என்னையடித்தவனை இட்சணமேகொன்றிடுவேன்
என்றுசொல்லித்தானெழுந்து நின்றானேநல்லனுமான்
அடித்தானேவீமனை அடிவானத்திடிபோலே
கோடையிடிபோலே குத்தினான்மார்கலங்க
அந்தஅடிபட்டவுடன் அங்கேகளைத்தானும்
மண்மேல்விழுந்தானும் மல்லாந்தபாவனையாய்
விழிகள்பிதுங்கியே விழுந்தானேமூர்ச்சையதாய்
மாண்டவன்போலே மண்மேல்விழுந்தானே
அநேகநெடுநேரம் ஆனபிறகாக
மூர்ச்சைதெளிந்து முடிமன்னன்தானெழுந்தான்
கண்டானேநல்லனுமான் கடுகியவனேதுரைப்பான்
என்னுடையசண்டையிலே எவரும்பிழைத்ததில்லை
இவன் ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
அடித்தஅடியோடே அவனியில்விழுந்தவன்காண்
தவறியெழுந்தவன்காண் தப்பிப்பிழைத்தானே
என்றுமனதிலெண்ணி இயல்னுமானேதுரைப்பான்
ஆரடாராட்சதனே ஆங்காரமுள்ளவனே
ஆரென்றிருந்தீர்நான் அரிராமதூதனல்லோ
லங்கையழித்தவன்நான் ராவணனைவென்றவன்காண்
அஞ்சனாதேவிபெற்ற அனுமந்தன்நானல்லவோ
என்னோடெதிர்த்தவனும் இனிபிழைக்கப்போறீரோ
என்றவுரைகேட்டு இயலானவீமனவன்
உற்றதுகேட்டு மெத்தப்பயந்தவனும்
அண்ணரென்றறியாமல் அமரதுசெய்தோமே
என்று பச்சைத்தழையுருவி பாதத்திற்றான்போட்டு
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டான்
ஐங்கால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கதெண்டனிட்டான்
கண்டந்தநல்லனுமார் கடுகியேதுரைப்பார்
ஆரடாதம்பிநீ அரியவுரையுமென்றான்
உன் ஊரேதுபேரேது உன்னுடையபேரென்ன

ஆருடையபுத்திரன்காண் அறியவுரையுமென்றான்
வெற்றிமதயானை வீமனவனேதுசொல்வான்
என்தகப்பன்வர்புராஜர் என்தாயார்குந்தியம்மாள்
மந்திரக்குந்தியம்மாள் பெற்றெடுத்தமகாராஜன்
குந்தியம்மாள்பெற்றெடுத்த குலமணிகளைவருண்டு
தருமராசர்தம்பி தாக்குடன்வீமனென்பேர்
இவ்வார்த்தைகேட்டு ஏதுசொல்வான்நல்லனுமான்
உந்தமனைநாமிருவர் ஒக்கப்பிறந்ததினால்
என்னுடையசண்டைக்கு எவரும்பிழைத்ததில்லை
தம்பியென்றதாகையினால் தப்பிப்பிழைத்தீரே
மாளாமல்நீபிழைத்தாய் மதவீமனுகையினால்
என்று ஒருவர்க்கொருவர் உறவாடிதான்பேசி
ஏதுவகையாக யிங்குவந்தாய்தம்பியரே
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
வெற்றிமதயானை வீமரவரேதுசொல்வார்
இந்தவனமதனில் வந்தோம்வனவாசம்
பாஞ்சாலன்பெற்றமகள் பஞ்சவர்ணகற்கிளியாள்
பாரிசாதபூமலரை பார்த்தாசைபட்டாளாம்
காணுதபூமலரைக் கண்டாசைபட்டாளாம்
பாரிசாதபூமலரைப் பறிக்கவென்றுயிங்குவந்தேன்
வேண்டிவந்தபூமலரை வேல்வேந்தேதாருமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அனுமந்தனேதுசொல்வான்
ஒருபாரிஷிவனத்தில் கோடியுண்டுகாவலர்கள்
ஏழுலட்சங்குங்கிலியர் இவ்வனத்திற்காவலுண்டு
இந்தனைகாவலிலே எப்படிக்குப்போய்வருவாய்
அந்தரிஷியறிந்தால் ஆக்கினைசெய்திடுவார்
கொல்லவினைப்பாரே குடிகேடுவந்திடுமே
ஆருமறியாமல் அவருடையபுட்பவனம்
என்னசெய்வேன்தம்பியரே எப்படிப்போய்நீவருவாய்
உனை வால்முனையில்கட்டிநான் வனத்திலேவிட்டிடுவேன்
ஆருமறியாமல் அம்மலரைநீபறித்து
வாலையசக்கிவிட்டால் எடுத்துநான்வந்திடுவேன்

வீமன் அனுமான்வாலின் வழியாகச்சென்று ராட்சதரை
யெல்லாங் கொல்லுகிறது

என்று வாலிலேகட்டினன் மதகரியான்வீமனைத்தான்
வாலைக்கிளப்பி வனத்திலேபோகவிட்டான்
இந்தவனப்பு எல்லாமறியவென்று
வாலையவிழ்த்தானே மதகரியானப்பொழுது
அசக்கிவிட்டானென்றுசொல்லி அனுமாரும்வாங்கினார்
வீமனைக்காணுமல் மெத்தமனந்தளர்ந்தார்
ஆயாசப்பட்டு அனுமந்தன்தானிருந்தான்

வெற்றிமதயானை வீமனவனைதுசொல்லான்
அந்தவனத்திலே அதிசயம்பார்க்கவென்று
சுற்றிவருகிறான் சுந்தரமாய்வனத்தை
மல்லிகைமுல்லை மலரோடுசெண்பகமும்
பாரிசாதபுஷ்பமரம் பரிமளம்வீசுகுது
வீசுகின்றபுட்பமரம் வேருடனேபிடுங்கி
படுத்துப்புரண்டானே பரிமளத்தைதானறிந்து
அந்தவனமெல்லாம் அதம்பண்ணுணப்போது

பூமரங்களைவீமன் அதம்பண்ணகாவலர்கள்வந்துசண்டைபண்ண
இறந்தவர்போக மற்றவர் ரிஷியாருக்குச்சொல்லல்

அந்தவனத்திலே அனேகம்பேர்ராட்சதரும்
எல்லவருந்தான்வந்து எட்டினார்வீமரண்டை
வந்துவளைத்தார்கள் மதகரியானவீமனுடன்
எட்டினார்சண்டை எழும்புதுசமருமப்போ
ஒருவற்கொருவர் யுத்தங்களாகுது
வெற்றிமதயானை வீமன்வெகுண்டெழுந்து
அடிப்பான்கெதையாலே அனேகம்போகீழேவிழ
அனந்தம்பேர்ராட்சதரை அமாக்கிக்கொன்றானே
இந்தவிதமாக எண்கோடிராட்சதரை
கொன்றுவதைத்தானே கோடானகோடிகளை
கொன்றவர்தான்போக நின்றமிதாருராட்சதர்கள்
குருபாரிஷியருகே கொப்பெனவோடிவந்தார்
அபயமபயமென்று அடிபணிந்துதெண்டனிட்டார்
எதுக்கபயமிட்டீர் என்னகருமமென்றார்
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
சிங்காரமாவனத்தைச் சீரழித்தான்பாவியவன்
மரங்களைத்தான்பிடுங்கி வனமெல்லாம் அதமாக்கி
ஏழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்போட்டுவிட்டான்
இவ்வார்த்தைகேட்டு எரிக்குமகதிரவன்போல்
காயுங்கதிரவன்போல் கண்சிவந்தார்குருரிசியும்
கோபம்வருகுது கொடுங்காலருத்திரன்போல்
என்னுடையபூவனத்தில் எவரும்வருவதில்லை
தேவர்முனிவர் தீண்டொணாபூவனத்தை
ஆரடா தூதுவரோ ஆயிரம்பேர்போங்களென்றார்
கைப்பிடியாய்த்தான்பிடித்துக் கடுகெனவேகொண்டுவாருங்கள்
என்றசத்தங்கேட்டு எழுந்தார்களாயிரம்பேர்
வாய்வேகமாகவே வனத்திலேபோயிறங்கி
ஆரடாராட்சதரே ஆங்காரகோபமுடன்
வனத்தையதமாக்கி வந்தவனைக்கொன்றவனே
எங்களுடைஐபரும்மை இட்டுவரச்சொன்னாரே
குலத்திற்பெரியவர்காண் குருபாமகாரிசியும்

உன்னை அழைத்துவரச்சொன்னார்காண் ஐயருமிப்போது
கூடுகெனவெவாறுமென்று கையைப்பிடித்திழுத்தார்
கைபோடேகைப்பிடித்தான் கட்டியோகையைவிட்டார்
ஆயிரந்தூதுவரை அரைக்ஷணத்தில்தட்டிவிட்டான்
அத்தண்டபேரையும் அவனொருவன்கொன்றுவிட்டான்
நானொருவன்தப்பிவந்தேன் நல்வார்த்தைசெதிசொல்ல
என்றவன்கூறலுமே எழில்குருபர்முனிகேட்டு
கோவைப்பழம்போலே கூரவிழிகள்கண்சிவக்க
சவுரிப்பழம்போலே தன்னிரண்டுகண்சிவக்க
நெருப்புப்போல்கண்சிவக்கநெறநெறென்றுபல்கடித்து
ஆவாசமனலெழும்பச் சுரணைபொன்றுந்தோன்றாமல்
தானுகவந்து சபிக்கமனந்தானாகி
எழினார்கனகதண்டி யெழில்குருபாமுனியவரும்
பாரவனத்திருக்கும் பங்களாதன்னருகே

புஷ்பவனத்தையழித்தவனை சபிப்பதற்காக குருபா
முனிவருகிறதை எம்பெருமாயரிந்து அனை
வரையும் சமாதானப்படுத்துதல்

வருகிறவேளையிலே மாயனதுவறிந்தார்
காவலர்கள்பஞ்சவர்க்குக் கைமோசம்வந்ததே
மோசங்கள்வந்து மிடிந்துதேபஞ்சவர்க்கு
பொல்லாதகாலம் பிறந்ததுபஞ்சவர்க்கு
ஆகாதகாலம் ஐவர்க்குவந்ததையோ
உள்ளங்கைநெல்லிக்கனி உருக்குலைந்துபோகுதையோ
தொவில்செபமாலே தொண்டழிந்துபோகுதையோ
பெட்டியிலேஆபரணம் பெருமைகுலையுதையோ
எழில்குருபாரிசியுடனே எதிர்ப்பாரொருவரில்லை
மரமாக்கிகல்லாக்கி வனத்திலேகொன்றிடுவார்
ஐவரைக்கொன்றிடுவார் அனர்த்தம்வரலாச்சே
காத்ததுகாத்தோமே கடைப்போகக்காப்போமென்று
வட்டமாங்கருடனேறி வாராரேமாயவனார்
ஐவருக்கும் ஆரணியம்வந்துவிட்டார்
சாயம்புமன்னன் தருமருங்கண்டாராம்
கண்கிளிபூந்திருந்து கார்வண்ணரைத்தொழுது
சரணமடைந்தார்கள் தர்மமுடிநாசாக்கள்
சிங்காதனங்களிட்டார் ஸ்ரீராமர்வீற்றிருக்க
இட்டசிங்காதனத்திலேறியிருந்தாராம்
சாயம்புமன்னர் தருமவரேதுரைப்பார்
இன்னேரவேளையிலே எம்பெருமானெங்குவந்தீர்
அடியாரைத்தேடியே ஆண்டவரேவந்ததென்ன
வந்தகருமமதை வாய்திறந்துசொல்லுமென்றார்
அடியனந்தமாயவனார் ஆதிமூலமேதுசொல்வார்

நால்விருக்கையிலேநல்லதம்பியெங்கேயென்றார்
வெற்றிமதயானை வீமராசனெங்கேயென்றார்
தருமரறியேனென்றார் தம்பியரைக்காணேனென்றார்
தோராவடிவழகி துரௌபதையாளேதுசொல்வாள்
பாரிசாதமலரைப் பார்த்தாசைப்பட்டேனையா
பிரியமாய்வேண்டுமென்று பிணங்கினேன்வீமரண்டை
பூப்பறித்துவாரேனென்று போய்விட்டார்வீமராசன்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
கைமோசம்வந்ததுகாண் கபடமில்லா தருமராயர்
ஐவர்பஞ்சபாண்டவரே அனர்த்தம்வரகாலாச்சே
குருபாரிசிவனத்திற் கொப்பெனவேபோய்புகுந்தான்
மரத்தைப்பிடுங்கியவன் வனநாசமாக்கிவிட்டான்
எழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்ப்போட்டுவிட்டான்
அந்தவனத்தை அதமாக்கினபடியால்
கொல்லவருகிறார் கொடும்புடனேமாமுனியும்
தவத்திற்பெரியவர்காண் சகலகலைவல்லவர்காண்
வரத்திற்பெரியவர்காண் வல்லகுருபாமுனியும்
அதிகசாபம் தாவிடுவார் ஐவரைக்கொன்றிடுவார்
என்னசெய்யப்போரேனென்று எம்பெருமாள் கூறுகையில்
அஞ்சிப்பயந்துமல்லோ ஆண்டவரங்கேதுசொல்வர்
இத்தனைநாள் காத்தீரே இன்றுகைவிட்டீரே
அரக்குமாமாளிகையில் ஐவரைக்காத்தீரே
அம்பலவாசலிலே அபிமானங்காத்தீரே
ஆபத்தைத்தீர்க்கவந்த ஆண்டவரும்நீரலவோ
உம்மைவிடவேறெமக்கு உற்றதுணைதானுமுண்டோ
காக்கக்கடனுனக்கு என்றுமவர்கைதொழுதார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
குருபாரிசியுடனே பேசிக்கொண்டுதானிருப்பேன்
அப்போதுநாலுபேரும் அந்தவழிவந்திடுங்கள்
தருமரேயும்மைநான் தாழ்ந்துவணங்குகிறேன்
உன்னைவணங்கினால் வுபசாரவார்த்தைசொல்லும்
ஆரென்றுகேட்பாரே அந்தக்குருபாமுனியும்
உம்மிலும்வல்லபிரான் வுண்மையுள்ளமாமுனியும்
என்றுவுரைத்தாலே எழுந்துவணங்கிடுவார்
வணங்கிநமஸ்கரிப்பார் வாழ்த்தியெடுத்தணைப்பீர்
வெற்றிமதயானை வீமனிந்திர்வந்தாலும்
அடிபணிந்துதெண்டனிட்டு அவரைவணங்கிநிற்பேன்
அந்தரிசியாரும் ஆரென்றுதான்கேட்பார்
உன்னிலும்வல்லபிரான் வுண்மையுள்ளமாமுனியும்
என்றுசொல்லிநானிருப்பே னிவ்விதமாய்ச்செய்யாவிட்டால்
அந்தகுருபாமுனியும் அனர்த்தம்பண்ணிப்போட்டிடுவார்

ஆகையால்நான்போறேன் ஐயரேபின்வாரும்
என்றுஎழுந்தாராம் இயலானமாயவரும்
வாரார்பெருமாளும் வனத்தூடுதான்நடந்து
குருபாமுனியெதிரே கொப்பெனவேவருகையிலே
மாயவரைக்காணுகையில் வணங்கினார்குருபாமுனி
ஒருவர்க்கொருவர் உறவாடிபேசினார்கள்
மாயன்பெருமாளே வனத்திலேயெங்குவந்தீர்
இந்தவனந்தனிலே துவகையாகவந்தீர்
வந்தவகையதனை வாய்திறந்துசொல்லுமென
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
வனசாரியாகவே வந்தேன்குருபாமுனியே
வந்தயிடத்திலிந்த வனத்திலுமைக்கண்டேன்காண்
இன்னேரவேளையிலே எங்குவந்தீர்சொல்லுமென
ஆரோதெரியாது ஆங்காரமுள்ளவன்காண்
வனத்திலேபோய்புகுந்து மரங்களைத்தான்பிடுங்கி
ஏழுலட்சந்தூதுவரை எல்லவரைக்கொன்றிடுவான்
பொல்லாதபாவியைக் கொல்லவென்றுபோறேன்காண்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
உம்முடையவனத்திலே ஒருவர்வரப்போரதில்லை
தெய்வலோகத்தாரும் தீண்டாதபூவனத்தை
அமரர்சித்தமுனிவராலும் ஆகாதுன்வனமழிக்க
ஐயரேஉன்றன்வனத்தை அதமாக்கும்பாலகனை
இட்சணமேசொல்லுகிறேன் இட்டுவரச்சொல்லுமென்றார்
இருவருமாகவே ஏகமாய்க்கொல்லமென்று
ஆராதாதுவனை அழைத்துவரராட்சதனை
என்றுஅவர்பேசுகையில் இயலானதருமரவர்
நகுலனைத்தானனுப்பிநல்வீமர்க்கேதுரைப்பார்
அண்ணருந்தம்பியரும் ஆதிநாராயணரும்
குருபாரிசியருகே கூடிபேசியேயிருப்பார்
கொல்லவென்றுதூதுவரைக் கூட்டிவரச்சொல்வார்கள்
அப்போதுதூதுவாக ளழைத்தும்மைத்தான்வருவார்
வந்தவுடனும்மை வணங்கிநமஸ்கரிப்பார்
அப்போதுநீரண்ணு ஆசிர்வதிப்பீரென
சொல்லிவரச்சொன்னார்காண் துரிதமுடனேயென்று
தருமரிவையுரைக்கத் தார்வேந்தநகுலனுமே
வாயுவேகமாகவே வந்துவிட்டான்வீமனண்டை
அண்ணுமதவீமா அண்ணருங்கிருஷ்ணரும்
இப்படிக்குச்சொல்லச் சொன்னார்களென்னையென்
வீமனுக்குச்சொல்லிவந்து விட்டான்நகுலனுமே
வனத்திதருமரிடம் வந்துவிட்டான்நகுலனுமே
தம்பிமார்புடைசூழ தருமர்வருகையிலே

அருகேவரப்பார்த்து அரிராமர்தானெழுந்து
அடிபணிந்துதெண்டனிட்டு அவரைவணங்கிநிற்க
பார்த்தார்குருபாரிசி பயந்தவருமேதுசொல்வார்
எந்தவூர்எந்தநா இவர்பேச்சைசொல்லுமென்றார்
ஜெபத்திலும்தபத்திலும் செய்திடுமோர்நிஷ்டையிலும்
அதிகமுடையவர்காண் அழகானதருமரிசி
ஆதிகயிலாசம் அரனாரிடந்தனிலே
உன்னுடையபேர்விளங்க ஒருமணியடிபடுது
முனிவர்பேரிலே மூன்றுமணியடிபடுது
அன்னதானங்களிலே அதிகமுடையவர்காண்
யோகத்திற்பெரியவர்காண் அன்னிலும்வல்லபிரான்
ஏரெடுத்துப்பார்த்தாலே எரிந்துவிடும்லோகமெல்லாம்
பொய்வசனஞ்சொல்லாதார் புகழானதருமரிசி
தருமரிசியாரை தழுவியணைத்துக்கொண்டு
சிங்காதனத்தில் சிறாகவீற்றிருந்தார்
தக்கபுகழுடைய தருமரிசியேதுசொல்வார்
சாமிபெருமாளே சந்நியாசியானவரே
இருவருமாகவே இங்குவந்தவாறேது
என்றுநான்சொல்லுகையில் ஏதுசொல்வார்குருபாரிசி
தருமரிசியாரே சாமியேநீர்கேளும்
என்னுடையதோட்டத்தில் எவரொருவர்வந்ததில்லை
அந்தரலோகத்து அமரர்கள்வந்ததில்லை
ஆரோஒருராட்சதன் ஆங்காரமுள்ளவன்காண்
வந்துபுகுந்து வனத்தைப்பாழாக்கினான்
ஏழுலட்சம்ராட்சதரை இருதுண்டாய்ப்போட்டுவிட்டான்
ஆகையாலிங்குவந்தேன் அவனைஅதமாக்கவென்று
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வார்தருமரிசி
உம்முடையதோட்டத்தை அழிப்பாரொருவரில்லை
இங்கேயழையுங்கள் இக்ஷணமேசெயித்திடுவேன்
என்றவர்சொல்லுகையில் இட்டுவந்தார்வீமனை
திக்கெனவேதானெழுந்து ஸ்ரீராமர்மாயவரும்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டார்வீமருக்கு
முக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டார்
கண்டார்குருபாரிசி கடிகியேயேதுசொல்வார்
அவன் பாரென்றுதெண்டனிட்டார்ஆயன்பெருமாளே
ஆனாலுங்கேளுமையா அரியரிசியாரே
ஆதிகயிலாசம் அரனாரிடந்தனிலே
உம்முடையபேராலே ஒருமணியடிபடுது
தருமரிடபேராலே மூன்றுமணியடிபடுது
அந்தரிசிபேராலே ஐந்துமணியடிபடுது

போகத்திற்பெரியவர்காண் உத்தமரிசியாரும்
ஆதிசிவனிலும் அதிகமுடையவர்காண்
தினமூன்றுவேளையிலே திரவியக்களஞ்சியங்கள்
அவரிருக்குமிடங்களிலே அன்னக்களஞ்சியங்கள்
ஆரோஎவரோ அறியாமல்கொல்லவந்தேன்
இன்றுஅவர்நினைத்தால் எல்லவரைக்கொன்றிடுவார்
என்றுசொன்னபோதே எழுந்தார்தருமரிசி
தருமரிசியெழுந்திருந்து சாஷ்டாங்கதெண்டனிட்டார்
குருபாமுனியங்கு கொப்பனவேதெண்டனிட்டார்
அடியார்கள்செய்ததெல்லாம் அய்யாமனம்பொறுத்து
தெரியாமற்செய்ததெல்லாம் தேவர்மனம்பொறுத்து
வனத்தைபழித்ததொரு மகிமையைச்சொல்லுமென்றார்
ஆசனம்போட்டார்கள் அமர்ந்துகொலுவிருந்தார்
அப்போதுவீமரிசி அங்கவர்க்குளதுசொல்வார்
குருபாரிசிபெருமை குவலயத்திற்சொன்னார்கள்
அந்தப்பேர்சொல்லுகையில் அதிசயபட்டிருந்தேன்
பார்க்கப்பிரியமாக பாருலகில்நான்திரிந்தேன்
அந்தவனத்திலே அனந்தங்கோடிராட்சதர்கள்
எந்தனைக்கொல்ல எழுந்தார்கள் தூதுவர்கள்
ஆரென்றுங்கேளாமல் அல்லவருங்கொல்லவந்தார்
ஆக்ருஷம்வந்ததினால் அல்லவரைக்கொன்றுவிட்டேன்
இதுவேதருமமென்றான் இபலானவீமரிசி
குருபாமுனியவரும் கொப்பெனவேதெண்டனிட்டு
அடியார்கள்செய்ததெல்லாம் ஐயர்மனம்பொறுத்து
பாக்கியஞ்செய்ததினால் பாதங்கிடைத்ததுகாண்
கருதிதவஞ்செய்தாலுங் காணஅரிதாகும்
பார்த்தபடியாலே பாவந்துலைத்துவிட்டேன்
வாராததேவர்கள் வந்தபடியாலே
என்னுடையஆச்சிமரம் எல்லாரும்வாங்களையா
பாலடிசிலுண்டு பழவர்க்கந்தான்புசித்து
போசனஞ்செய்துநீங்கள் போவீர்கள்வாங்களென்று
குருபாரிசியாரும் கொப்பெனவேதெண்டனிட்டு
பட்டுரத்தினப்பாய்போட்டுப் பாய்மேலேவீற்றிருந்தார்
மாயவருந்தருமரிசி மதம்பெரியராமரிசி
தம்பிமார்நால்வருடன் தாமுங்கொலுவிருந்தார்
குருபாரிசியுமங்கே கொப்பெனவேதானெழுந்து
தூதுவரைத்தானழைத்துச் சொல்லுவாரோர்வார்த்தை
ஆயிரக்கலஅரிசி அடிசில்சமையுமென்றார்
காயுங்கனியுங் கடுகச்சமையுமென்றார்
நல்லபொரிக்கறியும் ராசாக்கள்போசனமும்
அடிசில்சமைத்தோமென்று அடிவணங்கித்தெண்டனிட்டார்

குருபாமுனிகேட்டுகொப்பெனவேதாமெழுந்து
கடுகசரணமென்று கைக்குச்சலங்கொடுத்தார்
பலாயிலேதைத்துப் படைத்தார்களன்னமதை
சமைத்திட்டசாதங்கறி தானேபுசித்தார்கள்
உபசாரம்பண்ணியவர் உண்ணுங்கள்சாமியென்றார்
அத்தண்டபேரும் அமுதுபுசித்தார்கள்
சந்தனம்புட்பமும் தாம்பூலம்வாங்கிக்கொண்டார்
அத்தண்டபேரும் ஆலிங்கனஞ்செய்துகொண்டார்

பஞ்சவர்களைந்துபேரும் பெருமாளுமவரவரிடஞ்
சொல்லுகிறது.

போய்வாரோமென்றுபோநடந்தார்கள்
பர்னசாலைதன்னருகே பஞ்சவர்கள்வந்தார்கள்
ஏழுலகையாண்டவராம் எம்பெருமாளேதுசொல்வார்
வெற்றிமதயானை வீமன்செய்தகாரியத்தை
நாமிருந்தபடியாலே நாடியமைக்காக்கவந்தோம்
அல்லாதேயாமானல் அனைவருமாண்டிடுவார்
எங்கேயிருந்தாலும் இடரல்லோசெய்திடுருன்
ஆகாதகாரியங்கள் அழும்புகள்செய்யலாமோ
இந்தவனத்தைவிட்டு ஏகுங்களடுத்தவனம்
அந்தவனத்தில் ஐவரும்போயிருங்கள்
ஆண்டுகழிந்தது அவ்வனத்தில்போயிருங்கள்
போய்வாரோமென்றுசொல்லி போகலுற்றுரெம்பெருமாள்
எட்டாம்வருஷம் முடிந்ததுபஞ்சவர்க்கு

எட்டாவது குருபாமுனிவனம் முற்றிற்று.

9 வது, ரோமரிசி வனம்.

அந்தவனத்தைவிட்டு அப்புறம்போருர்கள்
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசிமாடு கூடைதலைமேல்வைத்தார்
மன்னிவைத்தசிம்மாடு கூடைதலைமேல்வைத்தார்
சுபரோமரிசிவனத்தில் துரிதமுடன்வந்தார்கள்
ஐந்தடுக்குபர்னசாலை அழகாகவுண்டுபண்ணுர்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணுர்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்குமவேளையிலே
நெஞ்சில்ரோமமாமுனியை நினைத்தார்தருமராசர்

ஐவரிடத்துக்கு ரோமரிசியவர் தருமர்தனதுதுன்
பத்தை அவரிடத்தில்சொல்ல அவர்
அதற்குவழிமானஞ்சொல்லுகிறது.

ஆசனம்போட்டு அடிபணிந்தார்தருமராசர்
எந்தவூர்எந்தநாடு எங்கிருந்துஇங்குவந்தீர்
ஊரேதுபேரேது உத்தமனேசொல்லுமென்ருர்

வந்தவயணமதை வகையாகச்சொல்லுமென்றூர்
அப்போது தருமலிங்கம் ஆண்டவருக்கேதுரைப்பார்
குருகுலவம்மிசத்தில் குந்திமைந்தரைந்துபேர்கள்
தருமன்நான்வீமனவன் தம்பிதனஞ்சயனும்
நகுலசகாதேவ ராசாக்களைவரையா
தருமாபுரமென்னுந் தாரணியையாண்டிருந்தோம்
பங்கும்பகையாளி பாதிநாள்தாயாதி
ஜென்மப்பகையாளி சேனைநாள்தாயாதி
பெரியதந்தைபிள்ளை பேரானதுரியோதிரன்
ஐவரைக்கொல்லவென்று ஆலோசனைதேடி
விருந்துண்ணவாருமென்று விருந்தோலைத்தானனுப்ப
மெய்யானஓலையென்று விரைவாகப்போறோமையா
வாரவழிதனிலே வைத்தானேதண்ணீர்பந்தல்
வசநாபிதண்ணீர்பந்தல் வைத்தானேபாவியவன்
கொல்லநினைத்தானே கொப்பெனவேஎங்களைத்தான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தில்
பின்னுமொருயோசனையும் செய்தான்பெரும்பாவி
வருகிறவழியிலே வசிகளைநாட்டினான்
ஊருக்கூசிசெப்பூசி ஒருகோடிநாட்டினான்
எழுக்கூசியநேகமொடு இரும்பூசிதான்புதைத்தான்
கொடிமுன்னூகத்திகளும் குறுக்கேபுதைத்துவைத்தான்
மாண்டுமடிவாரென்று வசிகளைநாட்டினான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னைமொருயோசனை செய்தான்பெரும்பாவி
பொய்க்குழியைவெட்டியே போட்டுவைத்தார்சிம்மாசனம்
ஆழக்குழியிலே யாட்களையுள்நிறுத்தி
ஆயுதந்தன்னுடனே ஆள்நிறுத்திவைத்தானே
கொல்லநினைத்தானே குருடன்மகன்சத்ராதி
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
எண்ணெயிட்டுக்கொள்ளுமென்று எங்களுக்குச்சொல்லியவன்
எழுலட்சம்மல்லர்தனை எங்களிடந்தானனுப்பி
எண்ணெயிடச்சொல்லி என்னுயிரைவாங்குமென்றான்
அதற்கும்பிழைத்தோமே யாண்டவனார்புண்ணியத்தால்
பின்னைமொருயோசனை செய்தான்பெரும்பாவி
அரைப்புகிண்ணங்கைகொடுத்து அபிஷேகமாடுமென்றான்
பாரவசிநாட்டிவைத்தானே நிசமுடன்
பாரவசிகளைப் பர்வதம்போல்நாட்டினானே
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
உண்ணுகிறசாதத்தில் ஒருந்நால்மருந்தையிட்டான்

குடிக்கிறதண்ணீரில் கொலைக்காரன்கஞ்சையிட்டான்
தப்பிப்பிழைத்தோமே சாமியுடபுண்ணியத்தால்
பின்னுமொருயோசனை செய்தான்பெரும்பாவி
சோழிவிளையாடி சொக்கட்டான்சூதாடி
நாடுபறித்து ராச்சியத்தைகொள்ளைகொண்டான்
சீமைத்துரைத்தனமும் தேசத்தைக்கொள்ளைகொண்டான்
ஐவரையுங்கெலித்து ஆஸ்தானமுங்கெலித்து
காற்றுநுழையா கல்லாரைக்கிடங்கில்வைத்தான்
ஐவருடதேவியரை அம்பலத்திற்கொண்டுவந்து
தமையனுடபெண்சாதி தாயென்றுமெண்ணுமல்
மூலையிலிருந்தபெண்ணை முற்றத்திலிழுத்துவைத்தான்
அம்பலமேற்றியவன் அவமானத்தாழ்வுபண்ணுன்
வாடியென்றும்போடியென்றும் வம்புசிலபேசினுன்
அரசர்சபைநடுவே அம்பலத்துத்துரைகள்முன்னே
சொல்லாதுசொல்லியே துகிலுமுரிந்தானே
பாரவனவாசம் பரதேசம்போனபின்பு
பன்னிரண்டுவருஷம் பாரவனந்திரிந்து
அஞ்ஞாதவாசமல்லோ ஆரணியமொருவருஷம்
வேஷமிட்டுவேஷமாறி வீற்றிருங்களென்றுசொன்னுன்
பதின்மூன்றுவருஷஞ்சென்று பட்டணத்தில்வந்தாக்கால்
அங்குள்ளபிரகாரம் பாதிநாடுதாரேனென்றுன்
ஆகையாலாண்டவரே ஆரணியம்வந்துவிட்டோம்
வருஷமொன்பதும்பிறக்க வந்தோமிவ்வனந்தனிலே
உங்கள்வனத்திலே ஒருவருஷம்வனவாசம்
உம்மைவருந்தினேன் உண்மையுள்ளரிசியரே
இந்தவனத்திலே இருக்கச்செலவருளும்
என்றல்லோதருமரவர் இறங்கியேதெண்டனிட்டார்
தவத்திற்பெரியவர்காண் சன்யாசியானவரும்
உற்றுற்றுக்கேட்டாரே உரோமரிசியாரும்
ஆயாசப்பட்டுமவர் அறவேமனஞ்சலித்து
இத்தனைவஞ்சனைகள் இடறுசெய்தபாவியவன்
கொல்லநினைத்தானே கொடும்பாவிதிரியோதிரன்
நாடுகொடுப்பதில்லை ராச்சியந்தருவதில்லை
சீமைகொடுப்பதில்லை சிங்காதனம்தருவதில்லை
ஐவர்தனிலேயொருவன் அரன்பதியேபோனீரானுல்
ஆதிசிவன்கையில் அஸ்திரப்பேருபெற்றுல்
மாற்றானைக்கொன்றிடலாம் வையகத்லைதஆண்டிடலாம்
அல்லாதேயாமானுல் அரசுனக்குக்கிட்டாது
என்றவர்சொல்லுகையில் ஏதுசொல்வார்தருமராயர்
ஐவரிலேயொருவர் அவ்விதியையடையவென்றுல்
ஆர்சொல்லெல்லாது ஆகாதொருக்காலும்

மாயன்சொல்லல்லாது மற்றொன்றுமாகாது
அவ்வார்த்தைகேட்டு அரியசிபேதுசொல்வார்
மாயன்பெருமாளை வரவழையுமிங்கேயென்றார்

## தருமர் எம்பெருமாளை நினைத்து தோத்திரம் பண்ணுகிறது

சாயாம்புமன்னவனார் தருமரவரேதுசொல்வார்
ஆடியளந்தமாயவரே ஆண்டவரேவாருமென்றார்
ஏழுலகையாண்டவரே எம்பெருமாள்வாருமென்றார்
மச்சவடிவுகொண்டு மறுகடலிற்பள்ளிகொண்டாய்
ஆலிலைமேற்பள்ளிகொண்ட ஆண்டவரேவாருமென்றார்
தருமர்வருந்துகையில் சாமியவரறிந்து

## தருமர்தோத்திரம்பண்ணினதைப் பெருமாளறிந்து தருமரிடம்வருதல்.

ஏழுலகையாண்டவராம் எம்பெருமாள்வாராராம்
வட்டமாங்கருடனேறி மாயவரும்வந்துவிட்டார்
ஆயரைக்காணுகையில் ஐவருந்தாமெழுந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
தேடித்தும்பைமலரெடுத்து சிங்காதனம்போட்டார்கள்
சிங்காதனத்தின்மேலே ஸ்ரீராமர்வீற்றிருந்தார்
என்னையழைத்தது ஏதுகருமமென்றார்
மனதிலிருக்கின்ற மார்க்கமுறையுமென்றார்
சாயாம்புமன்னவனார் தருமரவரேதுசொல்வார்
மற்றொன்றுமில்லையையா மாயவரேநீர்கேளும்
இந்தவனத்திலே யிருக்கிறரோமரிசி
மாமுனியைத்தெரிசித்து வணங்கியடிபணிந்து
ஆரென்றென்னைக்கேட்டார் அரிதானமாமுனியும்
வந்தகருமங்களை வார்த்தையெல்லாம்நானுரைத்தேன்
துரியோதிரன்செய்த சேதியெல்லாம்நானுரைத்தேன்
அத்தனையுங்கேட்டு ஆயாசப்பட்டவர்காண்
துரியோதிரன்றன்னைச் செயிக்கவேவேணுமென்றார்
ஐவரிலேயொருவனையும் அரன்பதியேபோகவென்றார்
பஞ்சவரிலொருவனையும் பரமபதிபோங்களென்றார்
ஆதிசிவனிடத்து அஸ்திரம்பெற்றுவந்தால்
மாற்றானைவென்றிடலாம் வையகத்தைஆண்டிடலாம்
போங்களெனவுரைத்தார் புனிதமகாமுனியும்
ஆகையாலும்மை அழையுமென்றார்அந்தரிசி
மயங்குகின்றவேளையிலே வந்தீரேமாயவரே
இனிநடக்குங்காரியங்கள் எம்பெருமாள்சொல்லுமென
ஆய்ன்பெருமாளும் அவருமங்கேதுசொல்வார்
வாருமபெரியவரே வளம்வாழ்தபோதனரே
ஐவருட்வார்த்தை அதிகாரமெந்தனுக்கேன்

பஞ்சவர்கள் தங்களுக்குப் பாட்டனிருக்கின்றார்காண்
அவரையுமிங்கே அழைத்தாற்பெரியுமென்றார்
வேதவியாசரை வேண்டியழையுமென்றார்

ஐவரும்வியாசபகவானை நினைந்துவணங்க
வியாசர் வருதல்,

ஐவர்பஞ்சபாண்டவர்கள் அங்கெனவே தான்வணங்கி
வேண்டிநமஸ்கரித்து வியாசரைக்கைதொழுது
வாருமென்று தானினைக்க வந்தார்வியாசரிஷி
சடையுஞ்சடைபழகும் நம்பிரான்போலேவாரார்
ஐவரிருக்குமந்த அடவியில்வந்தாரே
எழுலகைபாண்டவனார் எதிர்கொண்டார்வியாசருக்கு
ஐவரெழுந்திருந்து அடிபணிந்தார் இருவருக்கும்
ஆபரும்வியாசருமே ஆலிங்கனம்பண்ணிக்கொண்டார்
ஆசனத்துமேலாக அனைவோரும்வீற்றிருந்தார்
வேதவியாசருமே வேந்தரைப்பார்த்துரைப்பார்
என்னகருமமாக என்னையழைத்தீர்கள்
மனதிலிருக்கின்ற மர்மத்தைச்சொல்லுமென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
பரமன்பதம்நோக்கி பர்ரதவஞ்செய்யவென்று
பாசுபதம்பேறுபெற்று பாரதத்தைவெல்லவென்று
ஆரைநாம்போகச்சொல்வோம் அரன்பர்தம்கள்ணுதற்கு
தருமரைப்போகவிட்டால் சர்மிபதந்தானரியார்
வெற்றிமதயானை வீமனால்ஆகாது
நகுலசகாதேவ ராசராலாகாது
அருச்சுனரைப்போகவிட்டால் அரனுரைக்கர்ணவல்லார்
பரமசிவனருகில் பாசுபதம்பேறுபெற்று
வேணவரம்வாங்க விஜயனவர்வல்லவன்காண்
என்றுமவர்யோசனையாய் எழில்விஜயனைப்பார்த்து
பார்த்திபா அர்ச்சுனரே பரமன்பதிநோக்கி
ஆதிசிவன்பதிக்கு அருச்சுனும்போநீரே
கைலாசபதியிலே கர்த்தாவைநீகண்டு
அதிகவரம்பேறுபெற்று அருச்சுனரேவாருமென
காண்டீபரருச்சுனரும் கானையேதுசொல்வார்
அடியேனை அனுப்பிவைத்தால் அவசியம்போய்வாரேன்
அப்போபெருமாளும் அருளாளரேதுசொல்வார்
கைலாசம்போனாலே கட்டழகர்சொல்வேன்காண்
எகும்வழிதனிலே இருப்பார்கள்வேண்பெண்கள்
மின்னல்ரம்பையூர்வசியும்மேனகைதிலோர்த்தமையும்
அழகில்மிகுந்தபெண்கள் அனேகம்பேர்தானிருப்பார்
கண்டால்விடுவதில்லை கடுகியேயோகங்கொள்வார்
பார்த்தாசைபட்டாலே பார்த்திபாவிடுவதில்லை

கண்மூன்றுடையாரைக் காணவரிதாகும்
அல்லாமெயாமானல் அருச்சுனனுந்தனுக்கு
போரவழியிலே பெண்கள்தொடர்ந்தாலும்
தங்கைதமக்கையென்று தள்ளிவிட்டுப்போங்காணும்
பார்த்தாசைபட்டாக்கால் பரமசிவன்பாதம்
எத்தனைகாலம் இருந்துதவம்பண்ணாலும்
பாரத்தவஞ்செயினும் பரமசிவன்காட்சிதாரார்
பயபத்தியாயிருந்தால் பரமசிவன்வந்தருள்வார்
அந்திபகலும் அதிராத்திரிவேளையிலும்
நினைவுமறவாதே சிவனைநிலைநிறுத்து
மோனத்துடனறிவை மூட்டிதவஞ்செய்தாலே
சிவனார்மனமகிழ்ந்து சேனவரந்தருவார்
முப்பத்துமுக்கோடி முனிவரெல்லாங்கூத்தாட
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள்நடப்புரிய
பார்வதிசமேதராய் பரமசிவன்வந்திடுவார்
கோரும்வரங்களெல்லாம் கொடுப்பார்பரமசிவன்
அப்படிக்குப்போகவுன்றனாகுமோவாள்விஜயா
மாயனுரைகேட்டு வாள்விஜயனேதுசொல்வான்
ஆதிசிவனைநான் அரைநாழிமறந்திருக்கேன்
தேசமாய்ப்பெண்களென்மேலாசைமிகக்கொண்டாலும்
வாரவழிமறைத்து வார்த்தைகள்பேசினாலும்
தாயென்பேன்தங்கையென்பேன் சாமியேநீயுமென்பேன்
கர்த்தாவைக்கண்டுநான் கடுகிவரம்வாங்கிவாரேன்
போகச்செலவருளும் போய்வாரேன்சாமியென்றான்
அதுவுமேயல்லாமலாண்டவனேயெந்தனுக்கு
போகும்வழிதனிலே புதுமைநடந்தாலும்
சிவனார்பதியிலே செய்யுந்தவமழிக்க
மழுவேந்துஞ்சிவனாரும் வஞ்சனைகள்செய்தாலும்
ஏதுவினைவந்தாலும் எந்தனுக்குத்துணைவாரும்
மகாதேவரைக்கண்டு வாங்கிவாரேன்வாங்களென்றான்
அப்போதுமாயவரும் அவ்வார்த்தைக்கேதுசொல்வார்
போகும்வழிதனிலே பொற்கொடியாளேலகன்னி
ஆதிசிவனைநோக்கி அருந்தபசுசெய்பவள்காண்
அம்பலமான்போலே அழகில்மிகுந்தவள்காண்
அர்ச்சுனரேவுனையணைய அதிகவரம்பெற்றவள்காண்
உன்னைகலியாணம்பண்ண உகந்துயிருக்கிறாள்காண்
அவள் வந்துவழிமறிப்பாள் வாள்விஜயமன்னவரே
மாதரைக்கண்டுநீ வார்த்தையொன்றுஞ்சொல்லாதே
தாயென்றும்தங்கையென்றும் தார்வேந்தாசொல்லாதே
வரும்போதுபெண்ணேயுனை மாலையிட்டுக்கொள்வேனென்று
காயாம்புமேனியனே கண்டங்கருப்பழகா

தக்கதுசொல்லிப்போம் சாமியுடபதிக்கு
அதிகவரம்பெறும்பெற்று அருச்சுனரேவரும்போது
ஏலகன்னிமாதரசை இளங்கொடியைமாலையிடு
வரும்போதுமாலையிட்டு வந்துவிடும் அருச்சுனரே
மற்றொருவினைவந்தால் வந்துநான்காத்திடுவேன்
போய்வாருமென்றுசொல்லிப் பெருமாள்செலவுதந்தார்

அருச்சுனன்சிவனைக்காண போவதற்குச்சோடிக்கல்

சூலபாணிருபம்போற் சோடித்தானர்ச்சுனனும்
எந்தெந்தமுஸ்தீபு இளவிஜயன்தான்தரிப்பான்
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள
குந்துசடையங்கே குலுங்கஅருச்சுனற்கு
உள்ளமெல்லாம்லிங்கம் உடம்பெல்லாம்வெண்ணீறு
ஆவியெல்லாம்லிங்கம் அங்கமெல்லாம்வெண்ணீறு
காவிகாசாம்பரமுங் கட்டினன் அரைதனிலே
அன்றுரித்தமான்தோலும் அழகானபுலித்தோலும்
கன்றுபுலித்தோலும் கயிலாசமான்தோலும்
காதிலேகுண்டலமுங் கையிற்கமண்டலமும்
ஏகவேஷ்டிதானணிந்தான் இயலானஅர்ச்சுனனும்
பிரமமுடித்தாழ்வடங்கள் பெரியருத்திராட்சமணி
பஞ்சமணித்தாழ்வடமாம் பலவிதமாலைகளாம்
நாகமணிக்கங்கணமாம் லாடமிகச்சங்கிலியாம்
வேலாயுதம்சூலாயுதம் வெண்புலித்தோலாசனமாம்
அரைசுற்றிக்கிண்கிணியாம் அழகுமயில்தாழ்வடமாம்
குருயோகபுத்தகமாம் சுரையோடுகமண்டலமாம்
கஞ்சாக்குடுக்கைகளாம் கௌதமர்ஜோரிகளாம்
சங்குஜெயகண்டிகை தானணிந்தாரருச்சுனனும்
கணுக்கால்சிலம்புகளாம் காலில்மிதியடியாம்
அஷ்டாபரணமெல்லாம் அருச்சுனன்தான்றரித்தான்
வியாசரும்மாயவரும் மிக்கவரமொன்றுதந்தார்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
ஐவர்களுந்தனுக்கு சீக்கிரந்தந்தோமென்றார்
போய்வாருமருச்சுனரே பொன்னுலகந்தான்தேடி

அருச்சுனன்ஈஸ்வரரைக் காணப்போகிறது

அந்தச்சமயத்தில் அருச்சுனனுந்தானெழுந்து
எல்லாரையும்பணிந்து எழுந்தானருச்சுனனும்
போய்வாரேனென்றுசொல்லி போனானருச்சுனனும்
அருச்சுனன்போனபின்பு அங்குவியாசருமே
எல்லாரையும்வாழ்த்தி யிருவருமேபோய்நடந்தார்
மாயன்பெருமாளும் வாழ்கருடன்மேலேறி
ஐவரைவாழ்த்தியே அரிராமர்போய்நடந்தார்
வில்வேந்தரருச்சுனனும் விரைவாய்வனந்தாண்டி

காடுசெடி தாண்டி கடிகியேவாராளே
அரணியவல்காணவென்று அதிகதூரிதமாகவாருன்
சிவசிவாவென்றுசொல்லி சீக்கிரமாய்வாருனே

எம்பெருமாள் பெண்வேஷமாய்வருகிறது.

அருச்சுனன்நினைவறிய அரிராமரேதுசெய்வார்
மோககன்னிபெண்போல முடிமன்னர்வடிவுகொண்டார்
சின்னஞ்சிறியபெண்ணாய் ஸ்ரீராமர்வடிவெடுத்தார்
மின்னலொளிபோல மேகவண்ணர்வடிவெடுத்தார்
அல்லார்தலைமயிரும் ஐந்துமுழம்ஆறுமுழம்
ஆரணங்குகூந்தலது அறுபத்துநான்குமுழம்
காசாம்பழத்திலும் கறுத்தகருப்பழகும்
ஈச்சம்பழத்திலும் இருண்டகறுப்பழகும்
வாரிக்குழல்முடித்து வான்கவுரியுட்சொருகி
கொண்டைக்குக்குப்பியிட்டு கொலுமுகத்துத்தொங்கலிட்டு
கம்மல்ஜிமிக்கிகளும் காதிலேயிட்டாளாம்
கழுத்திலணிந்தாளாம் கனகமணித்தாழ்வடமும்
நல்லதொருபொன்காரை நடுக்கழுத்திலேதரித்தாள்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுறமாம்பொன்சரிகை
இரட்டைச்சரடுகளாம் இராங்காப்பொன்தாலி
முத்துச்சரப்பளியாம் மோகனமாலைகளாம்
அரைக்கிசைந்தஒட்டியாணம் ஆடைமேற்றரித்தாளாம்
காலுக்குதண்டைகளாம் கனத்தகொலுசுகளாம்
காலாழிபீலிகளும் கல்லணையும்புல்லணையும்
அழகுபணிகளெல்லாம் அலங்காரம்பண்ணினர்
கதம்பமுஞ்சந்தனமுங் கஸ்தூரிமணங்கள்வர
அன்னம்போல்நடந்து ஆண்டவனர்வாராரே
அருச்சுனன்போனதொரு அடவியிலேவந்துவிட்டார்
அருச்சுனரைத்தான்பார்த்து ஆண்டவனரேதுசொல்வார்
ஐயாபெரியவரே அறிவுள்ளசங்கமரே
தீரப்படித்தவரே தெளிவுள்ளசங்கமரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தகற்றவரே
எங்கிருந்துபோநீர்காண் இயலானசங்கமரே
கோடிசரணமையா கும்பிட்டேன்சுவாமியென்றுர்
உன்னழகும்பாவனையும் உலகத்தில்கண்டறியேன்
உம்மைக்கண்டபோதையோ உருகுதேதேகமெல்லாம்
காமவிகாரத்தாற் கனைதாங்கிப்போறேனையா
மோகவிகாரத்தால் மூர்ச்சைபட்டுப்போறேனையா
காமக்கனலைத்தான் கவிதீர்க்கலாகாதோ
மோகவிகாரத்தை மூர்ச்சையைத்தீருமையா
மன்மதனெய்தகனை மார்புருகிப்போகுதையா
சித்தசன்விட்டகணை சிறுமார்புருகுதையா

அரைநாழிஎன்னுடனே அணைந்திருந்துபோகொணுதோ
ஒருநாழிஎன்னுடனே உளமகிழ்ந்துபோகொணுதோ
மார்பைப்பார்தோளைப்பார் வண்ணஸ்தனத்தைப்பார்
என்னழகும்பாவனையும் ஏறெடுத்துப்பாருமையா
என்னைப்போல்பெண்களுமக் கெங்கேகிடைப்பார்கள்
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
காணக்கிடையாது கலியுகத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைந்து மகாவிடாய்தீருமையா
தோளோடேதோளணைந்து சுகத்தைமெள்ளத்தாருமையா
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சிவிளையாடுமையா
குங்குமமெத்தையிலே கூடிவிளையாடுமையா
வாருமையாசங்கமரே என்றுவழிமறித்தாள்

அருச்சுனன்மோகினியைப்பார்த்துச் சொல்லுகிறது.

ஏறெடுத்துபார்த்தானே எழிலாரருச்சுனனும்
எண்ணுதுமெண்ணுகிறுன் இயல்விஜயனப்போது
மாயவனுர்சொன்னதொரு வார்த்தையெல்லாமெய்யாச்சு
என்றல்லோவாள்விஜயன் ஏதுரைப்பான்கன்னியற்கு
ஆதிகயிலாசம் அரன்பதியேபோறேனம்மா
கர்த்தாவைகாணவென்று கைலாகம்போறேனம்மா
வம்புகளைச்சொல்லாதே வழிதனைமறிக்காதே
பெற்றுவளர்த்ததொரு பேர்பெரியதாயல்லோ
கூடப்பிறந்தவள்நீ கூட்டுப்பாலுண்டவள்தான்
தங்கைதமக்கையுநீ தாயாருநீயல்லோ
தூரநில்லும்ஆச்சியரே தோதங்கள்பண்ணுதே
இடையநில்லும்ஆச்சியரே என்னருகேவாராதே
என்றுநடந்தாளே ஏறெடுத்துப்பாராமல்
மற்றுமந்தக்கன்னியரும் வார்த்தைகளேதுசொல்வாள்
சேரவென்றுவந்தேனே செல்லுமென்றுசொல்லலாமோ
பெண்சாதியென்றுவந்தால் பெற்றதாயெண்ணலாமோ
ஆத்தாளென்றெண்ணலாமோ அடுத்தமுறைவந்தாலே
தாயென்றுற்றுன்போமோ தனிமுறைவந்தாக்கால்
ஆண்டிக்கிமுறையுமில்லை அரிவாளுக்குறையுமில்லை
எருதுக்குபேச்சுமில்லை இடையனுக்குமுறையுமில்லை
அரைநாழிபோகத்திலே அமர்ந்திருந்தால்போதுமையா
மார்போடேமார்பணைந்து மருவிமுத்தந்தாருமென்றுள்
தின்னப்பழமிருக்க சேனதூரம்போவானேன்
கானலிலும்வெய்யலிலும் காட்டுவழிபோவானேன்
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கத்தாதியுண்டு
சோழிசதுரங்கம் சொக்கட்டானுடலாம்வா
தின்னநல்லபாக்குமுண்டு செலவழிக்கஒருக்கமுண்டு
வாருமையாசங்கமரே மனைக்குநாம்போயிருப்போம்

தானுகவந்தபெண்ணை தள்ளிவிட்டுப்போகலாமோ
போனுற்பலனுமில்லே பித்தனைக்காண்பரிது
விளையாடிப்போனுலே வித்தகரைக்கண்டிடலாம்
தனமிரண்டைக்காட்டியே தான்மறித்தாள்மோககன்னி
இவளுடையவார்த்தைகளை இளவிஜயன்தான்கேட்டு
கோபம்வருகுது கொல்லமனந்துணிந்தான்
வில்லெடுத்துக்கைபிடித்து வில்நாரிபூட்டிவிட்டு
அம்புறாத்தூணியிலே அலகம்பைத்தானெடுத்து
கொல்லவினைத்தானே கோதைமறைந்தாளே

அருச்சுனன்பாணமெடுக்க பெண்மறைந்து

பெருமாள்வருதல்,

கோபாலகிருஷ்ணரவர் கொப்பெனமாயவனுர்
கண்டானேவாள்விசையன் கர்த்தனுடமாயையென்று
இளவிஜயன்அருச்சுனனு மினியவனம்போகையிலே
மாயன்பெருமாளும் வாராரேயந்தவழி
வட்டமாங்கருட்னேறி வாராரேயந்தவழி
கண்டானே அருச்சுனனுங் கடுகியவன்தெண்டனிட்டு
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
இந்நேரமெங்கிருந்தீர் இயலானவாள்விஜயா
கானையந்த அருச்சுனனுங் கடுகியேஏதுசொல்வான்
மாயவரேசொன்னதுநீர் வனத்திலேமெய்யாச்சு
ஆரோஒருதெய்வகன்னி அநேகநேரமெனைமறித்தாள்
வந்தவழிமறித்து வார்த்தைகளாடினுளே
சொல்லாதுஞ்சொல்லியே தோதங்கள்பண்ணினுளே
என்றுசொல்லிஅருச்சுனனும் ஏறெடுத்துப்பார்த்தானே
கன்னியிளமையுமே கழுத்திலேகரிமணியும்
கண்டானேவாள்விஜயன் கடிகநகைத்தானே
அனைத்துங்குலைத்தீரே ஆயன்பெருமாளே
மையைக்குலைக்க மறந்தீரேமாயவரே
மணியையவிழ்க்க மறந்தீரோமாயவரே
பொட்டைக்கொலைக்க மறந்தீரோபுண்ணியரே
ஆபரணந்தான்கழட்ட மறந்தீரோஅச்சுதரே
என்னகோலம்வந்தாலும் ஏற்குமையாவுந்தனுக்கு
அப்போதுமாயவரும் அருளாளரேதுசொல்வார்
ஆயன்பெருமாளும் அங்கனவேயேதுசொல்வார்
மைத்துனனுஉந்தனுட மனவலுமையென்னசொல்வேன்
அருச்சுனனுஉந்தனுட ஆண்மையுமென்னசொல்வேன்
வாள்விசையாஉந்தனிட மனதரியவந்தேன்காண்
கர்த்தாவைகாணவல்லாய் கடிகிவரம்வாங்கவல்லாய்
பரமனைக்காணவல்லாய் பாசுபதம்வாங்கவல்லாய்
ஈசனைக்காணவல்லாய் இனியவரம்வாங்கவல்லாய்

போய்வாருமென்றுசொல்லிப் பெருமாளனுப்பினார்
ஆணலழகுமன்னன் அருச்சுனராசதுரை
விடைபெற்றுக்கொண்டானே வேந்தனருச்சுனனும்
அருச்சுனன்போனபின்பு அரிராமரேதுசெய்தார்
வட்டமாங்கருடனேறி வந்துவிட்டாரெம்பெருமாள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
சில்லென்றுபூத்ததொரு செடியும்வனந்தாண்டி
துவாரகாபுரிதனக்கு சுவாமியும்போய்சேர்ந்தார்

ஒன்பதாவதுரோமரிஷிவனம்
முற்றிற்று.

௰-வது, பேரண்டவனம்.

பத்தாம்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு
கூடைதலைமேலே குடிவாழ்க்கைகானகத்தில்
கோலிவைத்தசீமாடு கூடைதலைமேலேவைத்தார்
மன்னிவைத்தசீமாடு வனவாசம்போனார்கள்
அந்தவனத்தைவிட்டு அப்பாலேபோனார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
பேரண்டவனத்திலேதான் பிரியமாய்ப்பஞ்சவர்கள்
வந்தார்குடித்தனமாய் வனத்திலேவாசம்பண்ண
ஐந்தடுக்குபர்னசாலை அழகாகவுண்டுபண்ணார்
ஏழடுக்குபர்னசாலை எழிலாகவுண்டுபண்ணார்
அந்தவனத்திலே ஐவர்குடியிருந்தார்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
பூதநாதனைத்தேடி போரானேவாள்விசையன்
அரகராவென்றுசொல்லி அடித்தானேசெயகண்டிகை
ஓம்சிவாவென்றுசொல்லி ஒலித்தானேசெயகண்டிகை
ஒருவன்அரனேயென்ன உலகம்அரனேயென்னும்
ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
இருண்டவனத்திலே இருக்கிறபேரண்டன்
அநேகதூரம்போயிருந்தா னுகாரந்தேடிவர

பேரண்டச்சி அருச்சுனன்மேல் மோகித்தல்.

பேரண்டராட்சதன்றன் பெண்சாதியானவளும்
தன்னந்தனியவளாய்த் தானிருந்தாள்மண்டபத்தில்
அரகராவென்றசத்தம் ஆரணங்குதான்கேட்டு
கொத்தளம்போல் மூக்கழகும் மத்தளம்போல்புட்பங்களும்
ஊளமூஞ்சிகுரங்குதலை ஓணான்முதுகழகாம்
செம்பட்டமயிரழகன் சிங்காரப்பல்லழகாம்

பனைமரம்போற்பல்லழகாம் பருவதம்போற்கண்ணழகாம்
கழுத்தைசுத்திகண்டமாலை இடுப்பைசுத்தி அரைக்கடுவன்
துடையைசுத்திஒட்டுப்புண் தோளைசுத்திபெருஞ்சிறங்கு
நின்றுளேயாமாகில் நிலத்தில்விழுமிரண்டுஸ்தனம்
இன்னமுஞ்சொல்லிகிறேன் இரண்டுஸ்தனத்தழகை
கப்பலின்மேல்வாரதொரு கொப்பரைத்தேங்காய்போல்
தோணிமேல்வாரதொரு சொரக்காய்போல்தானிருக்கும்
பல்லிலேபடிந்திருக்கும் பாசிபடர்தாமரைப்போல்
சீழுஞ்சலநீரும் தேகமெல்லாம்நாற்றம்வரும்
காயமதிற்படிந்தழுக்கு கற்றுழைநாற்றம்வரும்
அருகேவந்துநின்றுலே அசங்கிதமாய்த்தோன்றும்
மரவுரியைத்தானுடுத்தி வாராளேபேரண்டச்சி
ஆண்டிபெரியவர்தன் அருகில்வந்தாள்ராட்சசியும்
பண்டாரம்பெரிவனைப் பார்த்தாசைபட்டாளாம்
வாயைத்திறந்துமவள் வார்த்தைகளேதுசொல்வாள்
நில்லுமையாசங்கரமே நெடுந்தூரம்போகாதே
உன்னுடைசைப்பட்டதல்லால் வுலகில்வேருசையில்லை
மார்பைப்பார்தோளைப்பார் மருவிவிளையாடவேபார்
அழகாநாதிஎன்னுடனே அமர்ந்திருந்துபோங்காணும்
வருவீர்வருவீரென்று வழிபார்த்துக்கார்த்திருந்தேன்
மன்மதபாணமது மார்புருகப்போகுதையா
மோகவிகாரமதை மூர்ச்சையைத்தீருமையா
என்னைப்போல்பெண்ணுமக்கு எங்கேகிடைப்பார்கள்
தேடிப்புறப்பட்டாலுந் தேசத்திற்கிட்டாது
மார்போடேமார்பணைந்து மருவிவிடாய்தீருமையா
தோளோடேதோளணைந்து சுகங்கள்தெளிபுமிப்போ
பஞ்சணைமெத்தையிலே கொஞ்சியிருப்போமென்றுள்
ஏறெடுத்துப்பார்த்தானே என்னென்றுங்கேளானே
அரகராஅரனேயென்று ஆண்டியுந்தானடந்தான்
காமவிகாரத்துடன் கடிகியந்தராட்சசியும்
பேரண்டராட்சசியும் பின்னேதுவார்த்தைசொல்வாள்
கண்டாசைபட்டுவந்தேன் கண்ணெடுத்துபார்க்கவில்லை
என்னென்றுகேட்கவில்லை ஏறமுகப்பார்க்கவில்லை
என்னை பாராமல்போரீரோ பாதகனுசையாலே

பேரண்டச்சி அருச்சுனனுடன்சபதங்கூறுதல்.

என்புருஷன்வந்தபின்பு இட்டுன்னைவரவழைத்து
என்னெண்ணப்பிரகாரம் இருந்துமருவிடுவேன்
என்றுசபதமிட்டு இயலானராட்சசியும்
காமவிகாரக் களையுடனே தானடந்தான்
மோர்கவிகாரமெனும் மூர்ச்சையுடன்போனுளே

வளையலைத்தானுடைத்து மார்பெல்லாந்தான்கிழித்தாள்
முகத்திலறைந்துகொண்டு மோதிப்புலம்புகிறான்

பேரண்டச்சி அழுகுரல்கேட்டு பேரண்டன்வருதல்.

அழுதகுரல்சத்தம் அறிந்தானேபேரண்டனும்
எதுக்கழுகிறாள் என்னுடையதேவியரும்
வயிறுபசியாகி வாய்விட்டழுதாளே
என்று-ஐம்பதுயானை அவன்கையில்தானெடுத்து
சினந்துஎறிந்தானே தேவியருகில்விழ
பின்னும்புலம்புகிறாள் பேரண்டராட்சசியும்
எதுக்கழுகிறாள் இளங்கொடியாளென்தேவி
இத்தனைநாளில்லாம லின்றுபுலம்புவதேன்
அறிந்துவருவோமென்று ஆங்காரமுள்ளவனும்
நிமைப்போதிலங்குவந்து நின்றுமேபேரண்டன்
எதுக்கழுகிறாய்நீ என்னுடையதேவியரே

பேரண்டச்சி தன்புருஷனுடன் தன்வாலாறுகூறிச்சண்டைக்
போகச்சொல்ல பேரண்டன்சண்டைக்குப்போகிறது.

பேரண்டராட்சசியாள் பிரியமுடனேதுசொல்வாள்
மாலையிட்டநாள்முதலாய் மனதுகுறைவந்ததில்லை
நான் பெண்பிறந்தபாவமது போதுமையாஎந்தனுக்கு
என் பாவிதலையிலே பத்தெழுத்தைஎழுதிவிட்டான்
செல்வத்தலையிலே செப்பேடெழுதினது
அல்லல்படவோ அமைத்துவிட்டார்பிரமதேவர்
ஐயையோபெண்பிறப்பு ஆகாதுஎன்னசெய்வேன்
நான் புத்திபில்லாவரசியல்லோ பேரண்டராட்சதனே
வாரவழிதனிலே வைத்தீர்சமுசாரம்
என்னைத்தனியேவிட்டு இனிப்போகஞாயமுண்டோ
உன்தேவியாயிருந்தும் ஊருக்குப்பெண்டாவேனோ
சுந்தரப்பெண்நானல்லவோ சொரூபமுடையவள்காண்
அழகில்மிகுந்தவளை ஆரோஒருவன்காண்
பத்தினியாளென்றென்னை பாராமலிங்கொருவன்
உத்தமியாளென்றுசொல்லி வுணராமலிங்கொருவன்
ஆண்டிபெரியவர்காண் அரண்மனையில்வந்தார்காண்
வந்தபெரியவரை வணங்கியேதெண்டனிட்டேன்
தன் கஞ்சாகுடிக்கைக்குத் தண்ணீர்கொண்டுவாருமென்றார்
தண்ணீரும்தான்கொடுத்தேன் சரணங்கள்தான்செய்தேன்
நெருப்பெடுத்துவாவென்றார் நெருப்பைக்கொடுத்தேனே
அள்ளியயேநீறுந்தந்தா ரணிந்துகொண்டேன்நெற்றியிலே
வாடிநீபோடியென்றான் வலதுதொடையேறுமென்றான்
கையைப்பிடித்திழுத்துக் கடிகிமருவவென்றான்
பொல்லாத்தனங்கள்செய்து போய்நடந்தான்சங்கமனும்
அவனை கைப்பிடியாகவே கடிகிப்பிகொண்டுவாரும்

அல்லாதேயாமானல் அநீதமாய்மாண்டிடுவேன்
பேரண்டச்சிஅழுகையிலே பேரண்டன்தானெழுந்து
எழுந்தானேராட்சதனும் என்றுமில்லாக்கோபமுடன்
ஆலமரம்பிடுங்கி தோளிலேவைத்தவனும்
கோபித்துக்கண்சிவந்து கொப்பெனவேஓடிவந்தான்
நில்லும்நில்லும்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
ஆரடாபண்டாரம் அறவுகெட்டசங்கமரே
என்னுடையபெண்சாதியை எந்தனிருகண்மணியை
அழகில்மிகுந்தபெண்ணை ஆகடியஞ்செய்ததென்ன
வழியிலேவீடுகட்டி வனத்திற்குடியிருந்தால்
பிச்சையெடுக்கிறவன் பெண்ணோடிபிடிக்கிறவன்

## பேரண்டனுக்கும் அருச்சுனனுக்கும்சண்டை.

அரைநாழிக்கொள்ளையிலே அவசியங்கொன்றிடுவேன்
இட்சணம்போதையிலே எமபுரஞ்சேர்த்திடுவேன்
என்றேஉருமினன் இபலானராட்சதனும்
ஆனாலழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
வாடாநீராட்சதனே வார்த்தையொன்றுநீகேளாய்
ஆதிசிவன்பாதம் அரன்பாதங்காணவென்று
வார்த்தபசுபண்ண பரமர்பதிபோகையிலே
வாரவழிதனிலே வழிமறித்தாளுன்தேவி
கண்டாசைபட்டேனென்று கடிதிமையல்தீருமென்றுள்
பெல்லாதாள்சேர்ந்தணைந்து போங்களென்றுளுன்தேவி
கால்வாயைதிறக்கவில்லை வண்ணமுகம்பார்க்கவில்லை
ஏனென்றுகேட்கவில்லை ஏறெடுத்துப்பார்க்கவில்லை
வீணானவார்த்தையிது மேல்போட்டுவாராதே
அநியாயச்சண்டையிது அமரதுசெய்யாதே
என்னோடெதிர்த்தாலே இருதுண்டாய்ப்போட்டிடுவேன்
பெண்சாதிவார்த்தையினல் பிராணழிக்காதே
மானுவதுதருமமல்ல மன்னுடவுயென்றான்
எத்தனைசொன்னலும் இரங்காமல்ராட்சதனும்
எதிர்த்தானமர்ப்போர்க்கு இருண்டவனம்நடுங்க
கண்டானருச்சுனனுங் கண்கள்சிவப்பேற
கோபம்பெரிதாகி கொல்லமனந்துணிந்தான்
வில்லவளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
காதுமட்டாய்தானிழுத்துக் கைக்கணையைவாங்கினன்
பேரண்டராட்சதன்றன் பிராணனைப்போக்கவென்று
ஆலகம்பைத்தானெடுத்து அஸ்திரத்தைபூட்டினன்
மந்திரவுபதேசஞ்செய்து மார்புரளவாங்கினன்
மேலிட்டுராட்சதன்மேல் விழுந்ததுஅஸ்திரந்தான்
பேரண்டன்தன்தலையைப் பிடரிவிட்டுக்தானறுத்தே

## அருச்சுனன்பாணத்தால்பேரண்டன் தலைவிழ பேரண்டச்சிபுலம்பல்.

அறுத்ததலைக்கீழேவிழா தாகாசமாயெழும்ப
மற்றொருகணைதொடுத்தான் வாள்விஜயனருச்சுனனும்
அறுத்ததலையுமல்லோ அவன்தேவிவாசலிலே
கொண்டுபோய்ப்போடுமென்றான் கொப்பெனவேவாள்விஜயன்
தள்ளிப்போய்விட்டதுவே சண்டாளன்தன்தலையை
அவன்மாண்டபிற்பாடு அருச்சுனனுந்தானடைந்தான்
அந்தச்சமயத்தில் அடைவானபேரண்டச்சி
தலையையவள்பார்த்து தன்புருஷன்தலையெனவே
கண்ணீரைச்சோரவிட்டுக் கதறிப்புலம்புகிறாள்
விழுந்தாளெழுந்தாள் மண்மேலேபுரண்டழுதாள்
மாரடித்துத்தோளடித்து மண்தூற்றியேயழுதாள்
கோவென்றசத்தமுடன் குழறிபுலம்புகிறாள்
மலையேபருவதமே மண்மேல்சாய்ந்தீரோ
மேகமலையேநீ விண்ணுலகம்சேர்ந்தீரோ
நீமடியுங்காரியங்கள் நிண்ணயத்தைநானறியேன்
வச்சிரத்தூணேநீர் மண்ணோடுளுத்தீரோ
கல்லான தூணைக் கறையானரித்ததுவோ
இரும்பான தூணேநீ இற்றுவிழுந்தாயோ
எங்கேயோவானம் இடிக்குதுயென்றிருந்தேன்
தப்பாமல்வானந் தலையிலிடித்ததையோ
தெருவிலேகையைவிட்டுத் தினகரனைசாட்சியென்றாள்
சந்தியிலேகையைவிட்டுச் சந்திரனைசாட்சியென்றாள்
ஆரைச்சதமென்பே அன்னியரைத்தஞ்சமென்பே
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகங்களெல்லாம் வேற்றுமுகமாகுதையோ
மலையேபருவதமே மாண்டுமடிந்தீரோ
செம்மலையேபருவதமே செத்துமடிந்தீரோ
செத்துமடிந்தீரோ சிவலோகஞ்சேர்ந்தீரோ
நீமடியுங்காரியத்தின் நிண்ணயங்கள்நானறியேன்
சந்தனமிருபுஜத்தை சரிவெட்டிப்போட்டாரோ
குங்குமமிருபுஜத்தைக் குளிரவெட்டிப்போட்டாரோ
கொண்டைபரிகொடுத்த கோழியைப்போலானேனே
செட்டைபரிகொடுத்த செம்பருந்துபோலானேனே
அடிவானத்திடிபோலே அழுதுபுலம்புகிறாள்
பேரண்டராட்சசியாள் புரண்டுபுரண்டழுதாள்

பெண்டாட்சி யழுகிறதுகேட்டு தெய்வகன்னிகள்வருதல்:

அந்தச்சமயத்தில் அழகானதெய்வகன்னி
ஏழுபேர்சத்தகன்னி இளங்கொடிமாதர்களும்
தீர்த்தங்களாட்டவென்று தெய்வகன்னிவாரார்கள்
அழுதகுரல்கேட்டு ஆயாசப்பட்டார்கள்
ஒருவர்க்கொருவர் ஒற்றுமையாய்ப்பேசுகிறார்
ஆரோதெரியாது அழுதுபுலம்புகிறாள்
இந்தனைநாள்வரையில் இவ்வோசைகேட்டதில்லை
அழுதகுரல்கேட்டு அப்புறம்போகொணாது
அழுதவிடத்திலே யாவரும்போவோமென்று
புலம்புமிடத்திலே பொட்டெனவேவந்தார்கள்
ஆரடிமங்கையரே அழுதுபுலம்புவதேன்
பெண்டாட்சியும் பிரண்டழுதுசொல்லலுற்றாள்
அரைக்கழுத்தி அரைக்கழுத்தியானேனே
கொரைக்கழுத்தி குரைக்கழுத்தியானேனே
மஞ்சளிழந்தேன் மணமிழந்தேன்பூவிழந்தேன்
தாலிச்சரடிழந்து தலைவிரிக்கநாளாச்சே
ஏதென்றுநானுரைப்பேன் என்னுடையஅக்கமாரே
ஆரோவொருபண்டாரம் அரன்பதிக்குப்போறான்காண்
வாடியென்றும்போடியென்றும் வம்பாகப்பேசினானே
சொல்லாதுசொல்லியே சேர்ந்துஅணையவந்தான்
புருஷனுடனுரைத்தேன் போய்க்கேட்டார்சங்கமனை
என்கணவனைக்கொன்றுவிட்டு கடுகியேபோறார்காண்
மங்கிலியப்பிக்ஷை வரங்கொடுத்துப்போங்களம்மா
என்றவுரைகேட்டு இயலாளகன்னியர்கள்
ஆயாசப்பட்டுமெல்லோ அதிகமனஞ்சலித்து

தெய்வகன்னியர் அருச்சுனனைக்கண்டு இரக்கஞ்சொல்லல்:

சங்கமரைத்தேடியே நடந்தார்கள்தையலர்கள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்தபசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
நில்லுநில்லுஞ்சங்கமரே நெடுந்தூரம்போகாதே
பேரவழிதனிலே பொல்லாங்குசெய்யலாமோ
சிவவதைகள்பண்ணி சிவன்பதியேபோகலாமோ
ஆதிசிவன்வாழும் அரன்பதிக்குப்போனாலும்
கோரும்வரத்தை கொடுப்பாரோபரமசிவன்
ஏழையாசங்கமரே இப்படிக்குச்செய்யலாமோ
ஆகாதகாரியங்கள் அழிவுதேடிப்போகலாமோ
என்றுமறித்தார்கள் இளங்கொடிமார்கன்னியர்கள்
ஆறெலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
சிவனார்பதிக்குநான் தெரிசிக்கப்போறேனென்ற

அவன்-வந்துவழிமறுத்து வார்த்தைகள்பேசினானே
சொல்லாதுஞ்சொல்லியே சொந்துஅலையாயென்றான்
அவள்புருஷன்வந்தென்னை அநீதமாய்க்கொல்லவந்தான்
எத்தனைசொன்னாலும் இரங்காமற்கொல்லவந்தான்
ஆயுதத்தினாலே அறுத்தேனவன்றலையை
என்மேலேகுற்றமுண்டோ ஏனோதடுக்கிறீர்
இருவர்விசேஷமெல்லா மெதிராகக்கேட்டிடுவோம்
வாருமையாவென்றுசொல்லி லரவழைத்தார்சங்கமரை
பேரண்டராட்சசியாள் பிரண்டுமபூமிடத்தே
அருச்சுனராசாவை அழைத்துவந்துவிட்டார்கள்
தெய்வலோககன்னியர்கள் தேன்மொழிமாரேதுசொல்வார்
இருவருடவார்த்தைதனை யெல்லாமிவர்கேட்டு
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
புதிதாய்த்தபசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
பெண்ணின்பிழையைப் பொருத்தருளும்புண்ணியனே
அடியார்கள்செய்தபிழை ஆண்டவர்நீர்பொறுத்து
மங்கிலியப்பிட்சைதந்து மகாதேவர்பதிபோனால்
ஆதிசிவனார் அதிகவரமருள்வார்
எங்களைப்பற்றியே இவனையெழுப்பிவிடும்
என்றுவணங்கியே இறங்கியேதெண்டனிட்டார்
அருச்சுனராஜாவும் அதிகமனமகிழ்ந்து

தெய்வகன்னியர் அருச்சுனனை கேட்கஅருச்சுனன்மகிழ்ந்து
தேவேந்திரனுக்கு ஓலையெழுதி அனுப்புதல்.

சேமக்குருத்தோலை சிக்கெனவேதான்வாரி
வாரியவோலையிலே வக்கணைகள்வைத்தெழுதி
என்னவென்றுவோலை எழுதுகிறானர்ச்சுனனும்
அமரர்பதியாளும் அங்கபிராணனென்தகப்பா
தெய்வலோகமாளும் தேவேந்திரனென்தகப்பா
மந்தாரக்குந்திபெற்ற வாள்விஜயனர்ச்சுனனும்
ஆதிசிவன்பாதம் அடியேனுங்காணவென்று
வாரவழிதனிலே வதைத்தெரிந்தேன்பேரண்டனை
அமாதுசெய்தேன்காண் அறுத்தேனவன்தலையை
பேரண்டன்தன்னுயிரை யிர்மலோகத்திருந்தாலும்
இங்கேயிருந்து எமலோகம்போனாலும்
அவனுடையதன்னுயிரை அனுப்பிவையும்என்தகப்பா
எந்தனைப்பற்றியே இட்சணமனுப்பிவையும்
அல்லாதேயாமானால் அமராபுரம்வருவேன்
தேவேந்திரன்பதியை சிதரவேகொள்ளைகொள்வேன்
ஆடுகொள்ளைமாடுகொள்ளை அழகானவீடுகொள்ளை
ஐயாவுன்பட்டணத்தை அனைத்துமேகொள்ளைகொள்வேன்
என்றுமெழுதினான் இப்படியோலையிலே

இலைசுருள்மடித்து உகந்துசெந்திரிக்கையிட்டு
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தெறித்து
அந்தச்சுருளோலைதனை அம்புவாயில்தான்கொடுத்து
ஏந்துமணியசைக்கி அம்பேறிபாயுமென்று
மந்திரதாபமிட்டு வாங்கிவிட்டானஸ்திரத்தை
மார்புரளத்தானெடுத்து தோள்புரளவாங்கிவிட்டான்
வருகுது அஸ்திரந்தான் வானுலகந்தான்தேடி
தேவேந்திரனுடைய தேசமணிக்கம்பத்தில்
வாள்விஜயனஸ்திரத்தால் மணியசைந்தாடிற்று
மணிக்கூண்டருகேவந்து வாங்கினான்அஸ்திரத்தை

அருச்சுனனோலையைத் தேவேந்திரன்பார்த்து
எமனிடத்திற்சென்றுகெண்டபோணடன்
உயிரைவாங்கிஅனுப்புதல்.

செந்திரிகைஓலைச்சுருள் தேவேந்திரன்விரித்து
எழுதியவாசகத்தை இந்திரனுந்தான்படித்தான்
அதிலிருக்கும்லட்சணத்தை யாவுமறிந்துகொண்டான்
நீக்கெனவேதானெழுந்து தேவேந்திரன்வருவான்
எமபுரந்தேடி எமனருகிற்போய்ச்சேர்ந்தான்
உம்பர்கோனைமனும் கடுகியெழுந்திருந்து
எதிர்கொண்டழைத்து இட்டுவந்தான்மாளிகையில்
இருவருமாய் இருந்துவந்தகாரணமேவ
அந்தியாசம்புக்கதுபோல் அதிசயமாய்த்தோணுதுகாண்
என்றபொழுதேயவ னேதுசொல்வாரிந்திரனும்
எல்லோருமுயிர்வாங்கும் எமதர்மராஜனேகேளும்
பொல்லாதபாவியவன் புகழும்பேரண்டனுயிர்
இந்தவந்தநாளால் எந்தனுக்காய்த்தயவுபண்ணும்
என்றுஉபசாரனை இரக்கமாய்த்தானுரைத்தார்
சேதியெல்லாங்கேட்டு திருப்பிஎமன்னேரம்
பண்டையுப்புள்ளுக்கா போற்பதித்துப்போதையிலே
பேரண்டன்தன்னுயிரை பொட்டெனவேதான்கொடுத்தார்
மாபாதகனுயிரை மைச்சிமிழிலேயடக்கி
அப்புவாய்தனிலடக்கி அனுப்பினானிந்திரனும்
வாய்வேகமாகவே வந்ததுஅர்ச்சுனர்முன்

அருச்சுனன் பேரண்டனுக்கு உயிரளித்தல்.

மைச்சிமிழைத்தான்திறந்து வல்லுயிரைமாற்றினான்
வெவ்வளிறுதான்போட்டு வேறுபட்டதலையெடுத்து
அறுத்தலைமுண்டமும் அணைத்துத்தண்ணீர்தெளித்தான்
கட்டியெழுப்பினான் தன்னுடையபொற்பிரம்பால்
தூங்கிவிழித்தவன்போல் திடுக்கிட்டெழுந்திருந்தான்
ஆடாப்பண்டாரம் அறிவுகெட்டசங்கமனே
என்றுஎழுந்தானே இயலானபேரண்டனும்

எழுபேர்கன்னியர்கள் இளங்கொடிமாரேதுசொல்வார்
ஆங்காரராட்சதனே ஐயரைச்சரணம்பண்ணும்
அபசாரமுன்மேலே அனந்தங்குற்றம்வந்திருக்க
உந்தனுயிர்தான்கொடுத்த உம்பர்பிரானுக்குமடா
சாஷ்டாங்கமாக சரணம்பண்ணும்ஐயருக்கு
என்றுசொன்னபோதையிலே இரங்கியேதெண்டனிட்டான்
சரணஞ்சரணமென்று சரணமிட்டார்பேரண்டனும்
இறந்துவிட்டசிவனை எழுப்பிவிட்டீராண்டவனே
உமக்-கேதுதரப்போறேன் இயலானசங்கமரே
ஆபத்துவேளையிலே அழைத்தால்வருகிறேன்
உந்தனுக்குதவியாக ஒத்தாசைபண்ணுகிறேன்
என்றுஉபசரித்தான் இயலான்ராட்சதனும்
அனைவரையுங்கையமர்த்தி அருச்சுனனும்போய்நடந்தான்
அரகராஅரனேயென்று அறன்மேலேதியானமானான்
சிவசிவாசிவனேயென்ன சிவன்மேலேதியானமானான்
ஒருவன்அரனேயென்ன உலகம்அரனேயென்னும்
அடித்தானேசெயகண்டிகை தொனித்தானேசங்குதனை
ஏலகன்னிதன்வனத்தில் எழில்விஜயன்போகலுற்றான்

ஏலகன்னி அருச்சுனனைப்பார்த்து அழைத்தல்.

அரகராவென்றசத்தம் அறிந்தாளேஏலகன்னி
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
வாரவாரர்காணும் மயிலனையேபாருமென்றாள்
திக்கெனவேதானெழுந்து தெருவீதிவந்தார்கள்
வருகிறசங்கமனை மாதர்கள்தானறிந்து
ஓட்டம்நடையுமா யோடிவந்தார்தாதியர்கள்
என்தாயேஏலகன்னி எவரோதெரியாது
ஆதிசிவன்போல அழகுபடைத்தவர்காண்
ஒருக்காலும்வந்ததில்லை உச்சிதமாய்வாரூர்காண்
என்றசத்தந்தான்கேட்டு யெழுந்தாளேஏலகன்னி
தண்டையசையவே தார்குழலாள்தானடந்தாள்
அருச்சுனரைக்கண்டு அதிகமயலானாள்
கண்டாசைபட்டாளே கட்டழகிஏலகன்னி
பார்த்தாசைப்பட்டாளே பசுங்கிளியாளேலகன்னி
வடிவழகுஒப்பனையும் வாள்விஜயன்சிரழகும்
உற்றுற்றுப்பார்த்துமவள் உள்ளமுருகுகிறாள்
காமவிகாரத்தாலே கட்டழகியேதுசொல்வாள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
நீரப்படித்தவரே தெளிவரிந்தசங்கமரே
புதிதாய்த்தபசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரே
வருவீர்வருவீரென்று வழிபார்த்துநானிருந்தேன்
எப்போவருவீரென்று இந்தவனங்காத்திருந்தேன்

உன்னாசைப்பட்டிருந்தேன் உலகில்வேறாசையில்லை
காமவிகாரத்தாலே களைப்பட்டுப்போறேனையா
மன்மதனெய்த்கணை மார்புருகிபோகுதையா
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதையா
அதிகவிசாரங்கொண்டேன் ஐயாபெரியவரே
மார்பைபார்தோளைப்பார் வண்ணமுகம்நீர்பாரும்.
என்னிலும்அழகுடையாள் எங்குங்கிடையாது
தேடக்கிடையாது தேசத்திற்கிட்டாது
காணக்கிடையாது கருளனாற்கிட்டாது
மார்போடேமார்பணைந்து மகாவிடாய்திருமையா
தோளோடுதோளணைந்து சுகத்தைமெள்ளதெளியுமையா
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கத்தாதியுண்டு
பொன்னும்பொருளுமுண்டு பொக்கிஷங்கள்மெத்தவுண்டு
தின்னநல்லபாக்குமுண்டு செலவழிக்கரொக்கமுண்டு
ஆடவென்றால்உஞ்சலுண்டு அமர்ந்திருக்கமேடையுண்டு
பத்தியுலாவுதற்குப் பர்ணசாலைமெத்தவுண்டு
மருவிவிளையாடி மன்மதரேவீற்றிருப்போம்
வாருமையாவென்றுசொல்லி வருந்தியேதெண்டனிட்டாள்
ஏறெடுத்துப்பாரானும் இளவிஜயனருச்சுனனும்
ஏலகன்னிமாது அவள் இளங்கொடியாளேதுசொல்வாள்
ஏன்காணும்அருச்சுனரே யென்றன்முகம்பார்க்கொணாதோ
முத்தானவாய்திறந்து உத்தாரஞ்சொல்லொணாதோ
வாயைத்திறந்தாலே வச்சிரமுதிர்ந்திடுமோ
வச்சிரமுதிர்ந்தாலே வாரியெடுக்கேனே
தாளைத்திறந்தாலே தங்கஉதிர்ந்திடுமோ
தங்கமுதிர்ந்தாலே தடவியெடுக்கேனே
என்னுடன்பேசினால் ஏதுகுறையுமுண்டோ
கல்லுங்கரையுமே கட்டைதுளிர்த்திடுமே
இரும்புகரையுமே இரங்கலையோயுன்மது
மார்பைப்பார்தோளைப்பார் வண்ணமுகத்தைப்பார்
முகத்தோடேமுகமணைத்தால் மூர்ச்சைதெளிந்திருப்பேன்
மார்போடேமார்பணைந்தால் மகாவிடாய்தீர்ந்திருப்பேன்
தோளோடேதோளணைந்து சுகங்களைத்தீருமையா
வாருமென்றுசொல்லி மறித்தாளேஏலகன்னி
வாயைத்திறவானும் வண்ணமுகம்பாரானும்
ஏனென்றுகேளானும் ஏறமுகம்பாரானும்
சிவனைமறவாமல் சிவன்மேலேதியானமானான்
அரனைமறவாமல் அரன்மேலேதியானமானான்

ஏலகன்னி அருச்சுனனைக்கோடுகிழித்து ஆணையிட்டுநிறுத்தல்

ஏலகன்னிமாது இளங்கொடியாள்கோபமானாள்
ஏழுகோடுகிழித்து இங்கேநில்லுமென்றாள்

உன் குருவின்மேலாணைகாணுங் கோடிவிட்டுப்போகாதே
ஐவர்மேலாணைகண்டாய் அடிவிட்டுப்போகாதே
தம்பிநமையன்மார் தாய்மேலேயாணையிட்டாள்
ஆணையிட்டுஏலகன்னி அரண்மனைக்குப்போய்ச்சேர்ந்தாள்
மாளிகைவாசலுக்குள் மண்டபத்தில்வீற்றிருந்தாள்
அவள் வருவதற்குள்ளாக வாள்விஜயனேது செய்தான்
என்னதுமெண்ணியே ஏதேதுதானினைப்பான்
ஆறாகினைந்தானே அளவற்றசிந்தையிலே
ஏவலாகினைந்தானே எண்ணமுற்றசிந்தையிலே
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
ஏவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
பார்த்தமுகமெல்லாம் வேற்றுமுகமாகுதையா
ஏவலாகினைந்தால் இந்தவேளைகாத்திடுவார்
ஆபத்துக்காப்பதற்கு ஆராலேயாகுமென்று

கோட்டிலிருந்தும் அர்ச்சுனன்காளியைத்
தோத்திரம்பண்ணல்.

அந்தவனக்கன்னியரை அருச்சுனன்தானினைந்து
சூலிகபாலியம்மா சுந்தரிதுர்க்கையம்மே
சண்டாளிபிடாரியம்மா சங்கரியோகவல்லி
மன்னுப்பிடாரியம்மா வழக்காடித்துர்க்கையமே
ஆபத்துவேளையிலே ஆதரிக்கவேணுமம்மா

அருச்சுனன் காளியைநினைக்க காளிவந்துவாலாறுவிளவல்.

என்றுநினைத்தானே இபலானகாளியவை
வாள்விஜயன்தான்வருந்த மாகாளிதான்வருவாள்
டக்கையொருகையில் டமாரமொருகையில்
வாளுமொருகையில் வளைதடியொருகையில்
அம்புவில்லுங்கைபிடித்து ஆயுதமாகவந்தாள்
ஆடாதம்பியே அடவியிலேயேனினைத்தாய்
ஊமையாய்ப்போகாது உன்றனுடையவன்மையென்ன
என்றவள்கேட்கையிலே யிரங்கிசரணமிட்டான்
ஆமென்றுகேட்டாயே ஆச்சரியமேசொல்லுகிறேன்கேள்
பாண்டுமகாராஜன்பெற்ற பஞ்சவர்களைவருண்டு
குந்தியாதேவிபெற்ற குலமணிகளைவருண்டு
ஐவர்பஞ்சபாண்டவரில் அருச்சுனராஜனென்பேர்
பரமனைமைத்துனன் வாள்விஜயனென்பேர்
ஆதிகைலாசம் அரன்பதிப்போனேனம்மா
பரமனைநோக்கியே பாரதவஞ்செய்யநான்
போறவழிதனிலே பொற்கொடியாளேலகன்னி
கலியாணம்பண்ணுமென்று கட்டியெனைமறித்தாள்
கோடுகிழித்துஎன்னைக் குறுக்கேதடுத்தாளே
ஆணையிட்டுயெனைமறித்து அரண்மனைக்குப்போய்விட்டாள்

மறுபடியும்வருவேனென்று மாளிகைக்குப்போய்விட்டான்
ஆகையாலெந்தாயே அடயமிட்டுஉனையழித்தேன்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாள்ஈஸ்பரியும்

காளியம்மன் அருச்சுனனை ஆணைவிடுவித்தனுப்புதல்.

அந்தாதேவியென்மகனே ஆணையிட்டேன்தோஷமில்லை
முக்காலுந்தோஷமில்லை முத்திரையைக்கழற்றி
கத்தரித்தமுத்திரையை நிலத்தனிலேவைத்துவிடும்
இந்தவனங்கடந்து என்னைநினைத்தாக்கால்
உந்தனுடமுத்திரையை உனக்கேதயவுசெய்தேன்
என்றுசொல்லக்காளியம்மாள் ஈய்ந்துவிட்டான்வாள்விஜயனா
ணிந்திருந்தமுத்திரையைத் தாயாரின்கைக்கொடுத்தான்

காளி அருச்சுனன்போல் நிற்பதை ஏலகன்னிகண்டு
தா அலங்காரம் பண்ணிக்கொள்ளல்.

வாள்விஜயன்போனபின்பு மாகாளியென்னசெய்தாள்
அருச்சுனனைப்போலாக அங்கேவடிவுகொண்டாள்
காளிகாசாம்பரமும் கட்டிஅரைதனிலே
ஐந்துசடைகொஞ்ச அழகுசடைமார்புரள
வாள்விஜயன்போலே மறைப்பிலேநின்றுளாம்
இப்படிக்குகாளி யிருக்கின்றவேளையிலே
ஏலகன்னிமாது இளங்கொடியாளேதுசெய்தாள்
மஞ்சள்குளித்தாள் மையெழுதிப்பொட்டுமிட்டாள்
வாரிமுடித்தாளாம் வான்சவுரியுட்சொருகி
கொண்டைக்கழகாக கொண்டைமயிர்தான்முடித்தாள்
சந்திரபிறைசூரியபிறை தலையிலணிந்தாளாம்
ஆண்மயிலும்பெண்மயிலும் அழகாகத்தான்முடித்தாள்
முத்தாலேசுட்டியும் முன்னாலேதொங்கவிட்டாள்
காதுக்குப்பொன்னோலை கைக்குவளையலிட்டாள்
செண்பகப்பூநாசியிலே சேர்த்தணிந்தாள்மூக்குத்தி
தோள்வந்திகைவந்தி தொடுத்தாள்ரவிக்கைதனை
கண்டசரமாம் கல்பதக்கமோதிரமாம்
கொத்துசரப்பளியாம் கொத்துமுத்துதாழ்வடமாம்
முத்துசரப்பளியாம் மோகனமாலைகளாம்
சன்னல்பின்னல்தாழ்வடமாம் தாயித்துப்பேரொளியும்
கடகஞ்சரிபவளங் கைநிறையபொன்வளையல்
தண்டைகொலுசுடனே சலங்கையும்பாடகமும்
காலாழிபீலி கல்லணையாம்புல்லணையாம்
அரைக்கிண்சந்தஒட்டியாணம் அலங்காரம்பண்ணுளாம்
பொன்னிழைத்தபட்டாடை பூவாடைதான்தரித்தாள்
சாந்துசவ்வாதுடனே சந்தனமும்பூசினாள்
மருக்கொழுந்தும் மல்லிகைப்பூமுடித்தாள்
வாசனைபரிமளக்க வாராளேஏலகன்னி

ஆரடிதாதி அலங்காரத்தோழிகளே
எடுத்துவாகனகதண்டி இட்சணமேபோகவேணும்
தாதிமாரோடிவந் துதண்டிகைகொண்டுவந்தார்
ஏறினாள்தண்டிகையை எடுத்தார்நெடுங்குடையை
சங்கமர்தாவிருக்கும் தாவிதேடிவர்ராளாம்
பல்லக்கைவிட்டிறங்கிப் பாதஞ்சரணமென்றான்
ஆணையிட்டேன்தோஷமில்லை ஆண்டவனேபாருமென்றாள்
ஏறினார்பல்லக்கில் இபலானசங்கமரும்
ஏலகன்னிதாமும் ஏறினாள்பல்லக்கில்
மாளிகைவாசலிலே வந்துஇரக்கினாராம்
பட்டுரத்னப்பாய்போட்டு பண்டாரம்வீற்றிரென்றார்
ஆசனத்தின்மேலே அமர்ந்தானேஏலகன்னி

ஏலகன்னி அருச்சுனனுக்கு விருந்திடச்சமையல்பண்ணல்.

இளங்கொடிமாதரை ஏலகன்னிதானழைத்து
அடிசில்சமையுமென்றாள் அரண்மனையிலெல்லவர்க்கும்
சர்க்கரைப்பால்போசனங்கள் சமையுங்கள்மாதர்களே
பஞ்சணைமெத்தையும் பள்ளிபரைசோடியுங்கள்
இவ்வார்த்தைசொல்ல எழுந்தார்கள்தோழியர்கள்
நித்தமுறைசெய்யுஞ் சித்தினிந்தாதியர்கள்
இந்தமுறையெங்களுது என்றுஎழுந்தார்கள்
அடுப்புமெழுகுவார் அட்சதைக்காப்பிடுவார்
வெங்கலப்பானையிலே வெந்நீருலைசாய்ப்பார்
பால்சம்பாவரிசி பதிங்கலந்தான்களைந்து
கொதிப்பாற்றியேஇறக்கக் கொப்பெனவேதான்சமைத்தார்
வாழைக்காய்கொய்வார் வழுதலங்காய்காம்பரிவார்
ஈழப்பலாக்காயை இளமுள்ளுபோக்கிடுவார்
கொத்தவரைக்காய்தனைக் கூட்டியறிந்திடுவார்
செம்பொனவரக்காய் சேரஅறிந்திடுவார்
பாவற்காய்தானறிவார் பரங்கிக்காய்தானறிவார்
இலசுசுரக்காய் இளந்தமர்த்தைதானறிந்தார்
தேங்காய்திரிகிடுவார் மாங்காயறிந்திடுவார்
பாம்புப்புடலங்காய் பாதரிப்பீர்க்கங்காய்
பிஞ்சிமுருங்கக்காய் பேரானகொத்தவரை
சுண்டைக்காய்வண்டைக்காய் சுத்தமுள்ளமுள்ளாங்கி
வள்ளிக்கிழங்குகளும் வாழைத்தண்டுகீரையுடன்
சிறுகிழங்குசிறுவள்ளி சிறப்பானசேமத்தண்டு
கருணைக்காராக்கருணை காராதஆள்வள்ளியும்
அரைக்கீரைசிறுகீரை அகத்திமுருங்கக்கீரை
முன்னைமுசுட்டை முக்குரண்டைகீரையுடன்
காரைபிரண்டையும் கடற்கீரைபுள்ளமுவும்
பிடிங்கினரிளங்கீரை பேரானகொத்தமல்லி

கடலைஉளுந்துபச்சை காராமணிப்பருப்பும்
அவரைத்தொவரையொடு அநேகஞ்சிறுபருப்பும்
கொள்ளுடனேஎள்ளுகளுங் கோதுமையுங்கலந்து
பத்துவகைத்தப்பளமும் பாங்கானகூட்டமுது
பத்துவகைப்பச்சடியும் பாங்கானகீரையுடன்
புளிக்கீரை துவர்க்கீரை பிரட்டினகீரையுடன்
ஆயிரத்தெட்டுவகை அரிக்கறிபொறிக்கரியும்
ஐந்நூறுவகைக்குழம்பும் அடவுடனே தான்சமைத்து
காரமும்உப்பும் கலந்து அறுசுவையும்
புத்துருக்குநெய்த்துளியைப் போதவேதான்வார்த்து
வடகப்பொடிபோட்டு மணிச்சீரகம்போட்டு
சீரகமும்வெந்தயமும் சீராகத்தான்போட்டு
கறிவேப்பிலையும் கறிக்குதிட்டமாய்ப்போட்டு
சையுஞ்சையுமென்று தனித்தனியேதான்மணக்க
மணங்கள்கமகமென்ன மாதற்குப்புறையேற
தாளித்திறக்கினார் தர்மரவர்கையாலே
செம்பொன்பிரிமணைமேல் சேர அடுக்கினார்
ஊறியதாய்சேர்ந்த உகமைகளைச்சொல்லுறேன்கேள்
இஞ்சிபெலுமிச்சை இயலானதமர்த்தையும்
நாரத்தைகிச்சிலியும் நல்லகடுக்காயுடனே
மூங்கில்குருத்துகளும் முற்றுவள்ளிகிழங்கு
அத்திக்காய்மாவுலிங்கம் அழகானதூதுவேளை
வில்வக்காய்சுக்கங்காய் விளாம்பிஞ்சுப்பச்சடியாம்
கண்டக்காய்களாக்காயும் சுருக்கானமுள்கருணை
மாங்காய்முதலான மற்றுமுள்ளஊறுகாயும்
வத்தல்வகைசேர்த்த வகைமாணங்கேளுங்கள்
ஆதண்டங்காயும் அரிதானசுக்கங்காயும்
பாவற்காய்கோவற்காய் பச்சவிளாங்காயும்
சுக்கங்காய்தூதுவேளை சுருக்கானபாவற்காயும்
அறுசுவைவர்க்கமுடன் அறுபதுஊறுகாயும்
பழவகைகள்தான்சேர்த்த பலவகையைத்தான்கேளும்
மாம்பழம்வாழைப்பழம் மலையின்பலாப்பழமும்
செவ்வாழைகரிவாழை திரண்டகொட்டைவாழையும்
மாதளைகிச்சிலியும் மாவொட்டுமாம்பழமும்
அன்னுசிபருநெல்லி அழகுகொய்யாப்பழமும்
தமரத்தம்பழங்களும் தலைவிரித்தமாதளையும்
மற்றுமுண்டானபழ வகையெல்லாஞ்சேர்த்தார்கள்

ஏலகன்னிக்குத் தாதிகள்பள்ளியறை சோடித்தல்.

அதிலேயொருதாதி ஆரணங்குதானெழுந்து
பள்ளியறைதான்திறந்து பைங்கிளிபாள்சுத்திபண்ணி

ஒருவன்சிவனேயென்ன உலகம்சிவனேயென்னும்
அரகராவென்றுசொல்லி அடித்தானேஜெயகண்டிகை
சிவசிவாவென்றுசொல்லி தொனித்தானேசங்குதனே
சங்குதொனிகேட்டு சபாமிருகந்தானெழுந்து
வால்கிளப்பிகுமாளமிட்டு வருகுதுவெள்ளானை
தன்னிழலேயேபார்த்து தானேடுமந்தானை
கொம்பினுல்மலையைபது குத்திக்கிளப்பிவிடும்
அருச்சுனரைக்கொல்லவென்று ஆனைவருகையிலே

அருச்சுனன் யானையைக் கொல்லுகிறது.

கண்டானேவாள்விசையன் கண்கொள்ளாக்கோபமுடன்
வில்வளைத்துநாணிபூட்டி வில்லைக்குணத்தொனித்தான்
அரத்தசந்திரபாணமெடுத் தஸ்திரத்தைஉச்சரித்தான்
மதயானையைக்கொல்லவென்று மார்புரளவாங்கினன்
அருச்சுனன்விட்டதொரு அர்த்தசந்திரபாணமது
மதயானைதன்னையே வகுத்துஇருபிளவாய்
வீரிட்டுவிழுந்துதே வில்விசயன்தன்கையால்

அருச்சினன்கையினுல் விழுந்தயானை ஒருபிராமணனுகவந்தது.

ஆனைமடிந்திடவே அதிலொருபிராமணன்தான்
பஞ்சாங்கப்பிராமண்ணுய் பார்ப்பான்வெளியானன்
கண்டானே அருச்சுனனும் கடிகிப்பிராமணனை
வாரும்பிராமணரே மதயானைமுழுகிறீரே
ஆனர்கேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
தெய்வலோகந்தன்னிலே சிவனுடையபூங்காவனம்
ஐயாபூங்காவனத்தில் அதிகாரமென்னுதுகாண்
அம்மைபூங்காவனத்தில் அதிகாரமென்னுதுகாண்
அம்மைபூங்காவனத்தார்கள் ஐயர்வனம்போகொணுது
ஐயர்வனத்தார்கள் அம்மைவணம்போகொணுது
ஒற்றைஒருநாளில் உச்சிதத்தைப்பார்ப்போமென்று
அம்மைவனங்களிலே அதிகாரியோபோகையிலே
ஆயிரம்பெண்களிலே அதிலேஒருகாதி
கண்ணுக்கினியபெண்ணை கண்டாசைபட்டேனே
பார்த்தாசைபட்டேனே பைங்கிளியைக்கைபிடித்தேன்
என்னைதிமிறிவிட்டு ஈஸ்பரியாள்பக்கஞ்சென்றுள்
ஈஸ்பரியாள்தன்னுடனே இச்சேதியுரைத்தாள்காண்
அம்மையதுகேட்டு ஆதிசிவள்பக்கஞ்சென்றுள்
உமையவளதுகேட்க உம்பர்பிரான்பக்கல்வந்து
ஐயரதுஉன்வனத்தில் அதிகாரஞ்செய்கிறவன்
எந்தன்வனக்கன்னியரை இவன்பிடிக்கஞாயமுண்டோ
என்றுமிகச்சொல்லுகையில், ஈஸ்பரனர்தான்கேட்டு
என்னைவரவழைத்து ஈய்ந்தார்பெருஞ்சாபம்
என்னுடையசாபமது எப்போதுலையுமென்றேன்

ஆதிகைலாசம் அருச்சுனன்வருகிறான்
அருச்சுனனைக்கொல்லவே ஆங்காரமாய்போகையிலே
அருச்சுன்கோபமுற்று அம்பாலேகொன்றிடுவான்
என்றதுபோல்நீரும் என்சாபம்போக்கிவிட்டீர்
வாருமென்றிருவருமாய் வனத்திலேபோறார்கள்
போகப்பிராமணனும் புதுமையொன்றுசொல்லலுற்றான்

அருச்சுனனுக்குபிராமணன் குயவன் வரலாறுகூறல்.

ஆனாற்கேள்சங்கமரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்
செப்புமொழிதவறான் திருநீலகண்டரவர்
கோடுகடவாதார் குயவன்குயத்தியரும்
இப்படியாக இவரிருக்கும்நாளையிலே
மகாராசன்வாசலிலே மங்களகாரியத்தால்
கோவுங்குயமுட்டி கொண்டுவாவென்றுரைத்தார்
அக்ஷணம்நீலகண்டன் அனேகமுட்டிசொப்பனிட்டு
பொன்போலழைத்துமே போட்டான்பெருஞ்சூளை
சூளைகளைந்து சுட்டசிறுமுட்டிசுட்டி
மகாராஜன்வாசலிலே வைத்தானேகொண்டுவந்து
மகாராஜன்தான்பார்த்து மகிழ்ச்சியாய்குயவருக்கு
சொர்ணமணிமுத்தும் துகிலாடையுமெடுத்து
சீர்வரிசை பூஷணத்தை நீலகண்டனுக்கருளி
போய்வாருமென்றுமே போகச்சிலவருள்
வெகுமானம்பெற்றுமவன் வீதிவருகையிலே
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
காற்றுமழையுங் கடிகிவருகுது
தேவதாசிவீதி தெருத்திண்ணையோரத்தில்
வந்துயிரங்கினான் வான்மழைபோகளவும்
அந்தச்சமயத்தி லவ்வீட்டுத்தாசியவள்
போசனமுண்டுமே பொற்கலத்தைத்தான்தழுவி
சன்னல்கதவையவள் தாள்திறந்துஊற்றினாள்
மண்ணுடையான் தன்மேலே வந்துவிழுந்தது
சம்போசிவசங்கரனே சலந்தெளித்தாரரென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டுஆரணங்குதாசியவள்
அஞ்சிபயந்துமே ஆரென்றுகேட்கலுற்றாள்
மண்ணுடையான்நான்காணும் வந்தேனிதுவழியாய்
வான்மழைக்குமாதரசே வந்துஒதுங்கினேன்
அம்ராமதெரியாது அள்ளிஜலந்தெளித்தார்
என்றதுகேட்டுமே ஏலப்பசுங்கிளியாள்
மெத்தப்பயந்துமவள் வீட்டோரங்கொண்டுசென்று
அபிஷேகமாட்டிவைத்தாள் ஆனந்தமாரனுக்கு
சரமுல்லர்த்தி இழைசேர்ந்தபட்டுடுத்தி
ஆபரணமிட்டு அலங்காரம்பண்ணினாள்

குயவனுடதேவிமாரும் குடிவாழ்க்கைசெய்திருந்தாள்
அனேகநெடும்போது ஆனபிறகாக
மண்ணுடையான்தானெழுந்து வாசலிலேவந்துநின்று
பாவற்பந்தலைப்பார்த்தான் பாத்திரத்தைக்காணோமென்று
தேவிமெதிரில்வந்து திகைத்தார்போல்நின்றுவிட்டான்
கைநீட்டிநீலகண்டன் கண்காட்டிகேட்கிறான்
ஆரணங்குமாதுகன்னி அறியேனென்றுசாடைபண்ணுள்
மனதுசஞ்சலமாக மண்ணெடுத்துப்பண்ணுகிறார்
பன்னிரந்தானெடுத்து பாத்திரம்பண்ணினான்
கடிகியேகுளேபோட்டு கவிழ்த்துவைத்தான்பந்தலிலே
ஐயரும்அம்மையுமாய் ஆதிசிவன்வாராராம்
திருநீலன்மாளிகையில் சிவசிவாவென்றுவந்தார்
கடிகியேநீலகண்டன் கைக்குச்சலங்கொடுத்தான்
கைப்பூசிக்கொண்டு கடுகியேஉள்நுழைந்தார்
பாத்திரங்கொண்டுவந்தார் பண்டாரம்பார்த்துவிட்டார்
என்னுடையபாத்திரம் எங்கேஎன்றார்சங்கமரும்
வைத்துநீர்போனபின்பு மாயமாய்ப்போச்சுதையா
ஆகையால்ஆண்டவனே அட்சணமேசெய்துவைத்தேன்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்சங்கமரும்
என்-பாட்டனார்நாளையிலே பண்ணிவைத்தபாத்திரத்தை
ஏமாத்திமோசம்பண்ணி இல்லையென்றுசொல்லலாமோ
மகாராஜனிடத்தில்வாரும் வழக்கைப்போய்ச்சொல்வோமென்றார்
மடிபிடித்துசங்கமரும் வாராரேதானிழுத்து
முடிமன்னன்றன்சபைக்கு முன்பாகவந்துசொன்னார்
பசித்ததென்றுசோறுகேட்டேன் பகலைக்குவாருமென்றார்
வச்சிரத்தாலிழைத்த மாணிக்கப்பாத்திரத்தை
இவர்கையில்நான்கொடுத்து இஷ்டரிடம்போயிருந்தேன்
வந்துபின்னேகேட்டாலே மாயமாச்சுகாணோமென்றான்
ஆகையினாலேதான் அழைத்துவந்தேனும்மிடத்தில்
அதிக்பரதேசி யாருமில்லையெங்களுக்கு
ஆண்டியுடைமையென்று அவரிடத்தில்நீர்கேட்டு
வாங்கியேதாருமென்றார் மகாராஜராஜாவே
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்மகாராஜன்
ஆரடாநீலகண்டா அறிவுகெட்டபாதகனே
பரதேசியுடைமையைநீ பறிக்கிறதுதரும்மோடா
குயவன்குயத்தியரைக் கொண்டுவேகட்டுமென்றார்
வெள்ளிப்பிரம்பாலே வீசியடியுமென்றார்
மாறியடியுமென்றார் வந்தகுயவனைத்தான்
இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தார்தலையாரி
எருக்கமலராலே எட்டியடித்தாரே
உள்ளம்நடுங்கமேனி உதிரம்வடியுதங்கே

அப்போமகாராசனிடம் ஆண்டியவரேதுசொல்வார்
இன்னஞ்சிலராசாண்டை இட்டுவாம்போறேனையா
கட்டவிழ்த்துவிட்டிடென்றார் கடிநீலகண்டனைத்தான்
அரண்மனையைத்தாண்டி அப்புறம்போகையிலே
ஆதிசிவனாரும் அங்கேகமனமகிழ்ந்து
ஈசன்ரிஷபத்திலே ஈஸ்வரிசிங்கத்திலே
பேழைவயிற்றோனும் பெருச்சாளிவாகனத்தில்
கந்தர்மயில்மேலே கடுகியேவந்துநின்றார்
தங்களுடவாகனத்தில் சாமிகளுமேறிவந்தார்
வந்தாரெதிராக மன்னனையான்கண்டுவிட்டான்
சரணஞ்சரணமென்று சாஷ்டாங்கந்தெண்டனிட்டான்
சுயவன்குபத்தியுட குறைகளைத்தீர்த்தாரும்
காட்சிகொடுத்துக் கைலாசம்போனாராம்
நீலகண்டன்பேருபெற்ற நிலயாகுமிவ்வனந்தான்
என்றதுகேட்டு ஏதுசொல்வானருச்சுனனும்
புண்ணியவனத்திலே போய்ஸ்நானம்பண்ணிவந்தால்
என்பாவந்தீரவே ஈஸ்வரனார்வரமளிப்பார்
என்றுபொய்கைதனிலே பொட்டெனவேஸ்நானஞ்செய்து
சிவனைநினைந்து திருநீறுக்காப்பணிந்து
அரனைநினைந்து அள்ளியிட்டான்வெண்ணீறு
பஞ்சாட்சரமணிந்து பகவானைப்பூசைசெய்து
அரகரா அரனேஎன்ன, அடித்தானே ஜெயகண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலித்தானே சங்குதனை
ஒருவன்சிவனேயென்ன உலகஞ்சிவனேயென்னும்
அரகராவென்றுசொல்லி அந்தவனந்தாண்டினான்
மற்றுமொருவனத்தில் வாராரிருவருமாய்
இந்தவனம்ஆருடைய தென்றானிளவிஜயன்

சபாமிருகவனங்கடந்து ஊர்க்குருவிவனம்வருதல்.

ஊர்க்குருவிபேறுபெற்ற வனமென்றானந்தபனும்
வாயில்லாச்சீவன் மாமேருப்பட்சிகள்தான்
எந்தவிதமாய்த்தான் ஈஸ்வரனைக்கண்டதுகாண்
அந்தஅதிசயத்தை ஆண்டவனேசொல்லுமென்றார்

பிராமணன் அருச்சுனனுக்கு ஊர்க்குருவிவரலாறுகூறுதல்.

அப்போபிராமணரும் அருச்சுனற்கேதுசொல்வான்
ஊர்க்குருவிப்பட்சியிதி லுண்டாணும்பெண்ணுமாக
இந்தவனமதனி லிருந்துவாழும்நாளில்
பிள்ளைகள்பெற்றிருக்கப் பெருத்தமரங்களிலே
போவார்வருவார்குஞ்சைப் போயெடுத்துக்கொள்வார்கள்
இரைதேடிவருவதற்குள் எடுத்துக்கொண்டுபோவார்கள்
கூண்டிலிடமாகக் குருவிவந்துபார்க்கவுடன்
அழுதுபுலம்பியே ஆயாசப்பட்டிருக்கும்

மறுகாலொருதரமும் மைந்தனுண்டாயிருக்கும்
பெண்குருவியானது புருஷனுக்கேதுசொல்லும்
என்புருஷாஎன்கணவா என்வார்த்தைநீர்கேளும்
நான்பெற்றபிள்ளையெல்லாம் நமனுக்கிறைகொடுத்தேன்
போவார்வருவாரெந்தன் பிள்ளையைக்கொண்டுபோனார்
இப்போதுபிள்ளைபெற்றால் எவராகிலுமெடுப்பார்
ஆசைகள்தோணுகுது ஆணழகாயென்னசெய்வேன்
எங்கேநான்பெற்றெடுப்பேன் எனக்கரியச்சொல்லுமென
ஆனால்கேள்பெண்மயிலே ஆரணங்கேயொருவார்த்தை
இந்தவனத்திலே இங்கேகுளிகுளித்தால்
நமக்குஅன்னங்கிடையாது அன்னமேநீர்கேளும்
சமுத்திரக்கரையோரம் தாவுண்டுபிள்ளைபெற
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்லும்பெண்குருவி
அலைபெருகிதண்ணீர்வந்து அடித்துக்கொண்டுபோய்விடுமே
இப்போதும்பிள்ளைபெற்று ஏமாந்துபோவேனோ
என்றதுகேட்டு ஏதுசொல்லும்ஆண்குருவி
இவ்விடத்திற்பிள்ளைபெற்றால் ஏதுகுற்றம்வந்தாலும்
சமுத்திராசருடன் சண்டைகள்செய்திடுவேன்
யுத்தங்கள்செய்திடுவேன் உன்பிள்ளைவாங்கிடுவேன்
என்று-தலையிலடித்துமே சத்தியங்கள்செய்திடுமாம்
சபதங்கள்பண்ணினதை சமுத்திராசன்கேட்டு
இது-எவ்வளவுஊர்க்குருவி என்னுடன்சண்டைபண்ண
சொல்லாதவார்த்தையைச் சொல்லுகுதுசிட்டினங்கள்
ஆண்மையைப்பார்ப்போமென் றவ்வருணன்தானிருந்தான்
அப்போதுசிட்டினத்தில் அழகானபெண்குருவி
செத்தையைத்தான்பொருக்கி சிறுவீடுகட்டிடுமாம்
இருமுட்டையிட்டு இருந்துஅடைகாக்க
பின்னுமடைகாத்துப் பெற்றதிருகுஞ்சுகளை
கொப்பெனவேதான்பறந்து குழந்தைக்கிறைதேடும்
இப்படியாகவே இருக்கின்றவேளையிலே
தாயுந்தகப்பனும் தானில்லாவேளையிலே
சமுத்திராசனவன் தண்ணீர்பெருகிவந்து
குழந்தையிரண்டையும் கொப்பெனவேகொண்டேகி
பாதாளந்தன்னிலே பத்திரப்பண்ணினாம்
பட்சிசமர்த்துகளைப் பார்ப்போமென்றுதானிருந்தார்
அந்தச்சமயத்தில் அழகானபெண்குருவி
குழந்தைக்கிறைதேடிக் கொண்டுவந்துபார்க்கையிலே
மக்களைக்காணமல் மருகிப்புலம்புகுது
மார்பிலேயுந்தோளிலேயும் வண்ணமுகத்திலேயும்
அறைந்துபுலம்புகுது ஐயோமகனேயென்று
மக்களைப்பறிகொடுத்து மண்மேலேதங்குவேனோ

மைந்தனைப்பறிகொடுத்து வயிற்றிலறைந்துசொல்லும்
பாவிகெடுத்தாயெந்தன் பாலகரைக்கொல்லவென்று
என்றும்பகையாள னேற்பட்டானெந்தனுக்கு
புதல்வனைப்பறிகொடுத்து புலம்புதுபெண்குருவி
ஐயையோதெய்வமென்று அலையுதுபெண்குருவி
அந்தச்சமயத்தி லாண்குருவியதுசொல்லும்
மனதுசலியாதே மக்களைவாங்கிதாரேன்
சமுத்திராசருடன் சண்டைமிகச்செய்து
புதல்வரைவாங்கித்தாரேன் புலம்பாதேபெண்மயிலே
என்றுஎழுந்தது இயலான ஆண்குருவி
மூக்கிறற்பனைகிழித்து மூனையாலெழுதுகுது
என்னவென்றுஓலை யெழுதுகுதுசிட்டினந்தான்
காக்காய்க்குருவி கழுகுகள்பருந்துகளாம்
மாடப்புறவாம் மயிலுங்குயிலினமாம்
காடைக்குருவிகளாங் கவுதாரிமீடைகைகளும்
அன்னமயிலாழ்வாரும் ஆனமயிலினமும்
கூளிகழுகுழுதற் கோட்டானுமாந்தைகளும்
ஓலைகண்டநாழிகைக்கு ஓடியேவாங்களென்று
சமுத்திராசருடன் சண்டைபண்ணப்போகவேணும்
என்னுடஇனத்தாரக ளெல்லோரும்வாங்களென்று
வருத்திபெரிதியே வாயசத்தைதானழைத்து
ஓலையைக்கொடுத்து உண்மைசிலசொல்லி
தெய்வலோகத்தார்க்கும் சேதிசொல்லிவாருமென
வாயுவேகமாக வருகுதுவாயசந்தான்
அவனியிலுள்ளவர்க்கும் அந்தரமுள்ளவர்க்கும்
செப்பித்திரும்புகையில் திருமாலருகிருக்கும்
ஆயருடவாகனம் ஆழ்வாரெழுந்திருந்து
மாயனைத்தெண்டனிட்டு வணங்கியேயேதுசொல்லும்
தன்குலராசனுக்கும் சமுத்திராசனுக்கும்
யுத்தங்களாகிறதாம் உலகளந்தபெருமானே
என்னைவரவழைத்தார் யானும்போய்ச்சேரவேணும்
சாஷ்டாங்கதெண்டனிட்டு சாமிக்குரைத்துதப்போ
ருலுங்கநகைத்துக் கொப்பெனவேவிடைகொடுத்தார்
பிரமருடவாகனம் பேடன்னத்தோரினமும்
இந்தருடவாகனம் கானமயிலினமும்
மன்மதவாகனம் வர்னக்கிளியினமும்
சனியனுடவாகனம் சமர்த்தானவாயசமும்
அவரவர்தேவரண்டை அடிபணிந்துதெண்டனிட்டு
சமுத்திராசருடன் சண்டைசெய்யப்போறோமென்றார்
அமரநடக்குமென்று ஆளோலையனுப்பினது
ஆகையாலாண்டவனே அடியேனும்போகவேணும்

எங்களுக்குச்செலவருளும் என்றுபணிந்தது
அத்தண்டதேவர்களும் ஆச்சரியப்பட்டார்கள்
சமுத்திராசருடன் சண்டைகளெப்படியோ
இப்புதுமைபார்ப்போமென்று இயலானதேவரெல்லாம்
நாமும்வருகிறோம் நடவுங்கள்முன்னேயென்றார்
தெய்வலோகப்பட்சி திரும்புதுபூமியிலே
தனித்தனிபட்சியெல்லாம் சமுத்திரக்கரையோரம்
தன்குலத்தாசருக்குச் சரணமிடுப்பட்சியெல்லாம்
அப்போதுசிட்டினந்தான் அனைவருக்குமேதுசொல்லும்
சமுத்திரக்கரையோரம் தாவுதேடிபிள்ளைபெற்றால்
அலைபெருகித்தண்ணீர்வந்து அடித்துக்கொண்டுபோனது
என்னுடையபிள்ளைதனை எடுத்துக்கொண்டுபோனது
ஆகையாலுங்களையும் அவசியம்நானழைத்தேன்
வாருமென்றபோதையிலே வந்தீர்கள்தயவுசெய்து
சமுத்திராசருடன் சண்டைகள்செய்திடுங்கள்
என்னுடையபிள்ளையை எவ்விதமும்வாங்கிடுங்கள்
உகந்துஅனைவோர்க்கும் உபசாரஞ்செய்கையிலே
அத்தண்டபட்சிகட்கும் அதிககோபமுண்டாகி
காக்காயொருவரிசை கழுகுமொருவரிசை
அன்னமொருவரிசை ஆழ்வாரொருவரிசை
பருந்துமொருவரிசை பச்சைக்கிளியொருவரிசை
மயிலுமொருவரிசை வல்லூறொருவரிசை
குயிலுமொருவரிசை குருவியொருவரிசை
காடையொருவரிசை கவுதாரியொருவரிசை
புல்புல்லொருவரிசை புறாக்களொருவரிசை
உள்ளானொருவரிசை ஊர்க்குருவியொருவரிசை
நாரையொருவரிசை நாகணவாயொருவரிசை
கொக்குமொருவரிசை கோட்டானொருவரிசை
அந்தச்சமயத்தில் அனேகவிதப்பட்சியெல்லாம்
அந்தப்புறங்களிலே அவ்வகுப்பாசேர்ந்திருந்தார்
அப்போதுமூவர்களும் அயிராவதத்தோனும்
முப்பத்துமுக்கோடி தேவர்முனிவர்களும்
ஆகாயமார்க்கமதில் அந்தரமாய்நின்றுக்கொண்டு
பட்சிகள்நின்றிருக்கும் பாவனையைப்பார்த்தார்கள்
எழும்பியேஅந்தரமாய் எட்டிப்பறக்கிறதும்
தானுகவேபறந்து தண்ணீரில்தான்குதித்து
இருபக்கம்றெக்கையிலே எடுத்துஜலங்கொண்டுவந்து
பாரெல்லாம்நீர்தளும்ப பறந்துதெளிக்கிறது
அரைநாழிக்கொள்ளையிலே அடியோடேவற்றிவிட
சமுத்திரமானதெல்லாம் தண்ணீர்வரண்டுவிட
சமுத்திராசன் சகிக்கமுடியாமல்

தேவர்கள்தலைவனுடன் செப்பமுறையமிட்டான்
அத்தண்டபேரும் அணைவரும்வந்திறங்கி
சிட்டினத்தைத்தானழைத்து செப்புவார்தேவரெல்லாம்
உன்-தநயனைவாங்கித்தாரோம் சமுத்திரநீருண்டுபண்ணும்
எப்போதும்போலேநீர் ஏற்படுத்தும்சமுத்திரத்தை
என்றுசொல்லப்பட்சிகள் யெல்லாமொருமித்து
மயிலையருகழைத்து வார்த்தைகளேதுசொல்லும்
கந்தருக்குச்சொன்னீரானல் கைவேலாலுண்டுசெய்வார்
என்றுசொல்லமயிலினங்களெல்லாமொருமித்து
வேலவனார்தன்பதத்தில் விழுந்துமுறையமிட்டு
ஆண்டவனேயென்சாமி அடியேனால்முடியாது
நீர்நிலைத்தாவிட்சணமே நீரும்பெருகிவிடும்
அடியேனைப்பற்றியே அலைகடல்உண்டுபண்ணும்
என்றுபணிந்து இறங்கியேதொழுதுநிற்க
கந்தர்மனமகிழ்ந்து கடிகியேவில்வளைத்து
வில்லெடுத்தாணிபூட்டி வேலெடுத்துமந்திரித்து
அலைகடலில்நீரையெல்லாம் அம்பிலொருமுத்தாக
பூபதிரவே போய்ப்பாயும்வேலிதுதான்
மண்ணிலுள்ளநீரையெல்லாம் வழித்தொருமுத்தாக
முக்கால்வளர்ந்து முனிந்துகடல்பெருக
சந்தோஷப்பட்டானே சமுத்திரராசனவன்
குருவிட்டபிள்ளையை கொண்டுவந்துதந்தாராம்
ஆதிசிவனாரும் அதிகவரந்தந்தாராம்
முப்பத்துமுக்கோடி தேவர்முனிவரெல்லாம்
சுகமாகச்செல்வத் துடனேயிருப்பீரென்று
வாழ்த்திவிடைகொடுத்து மகாதேவர்போய்நடந்தார்
ஊர்க்குருவிபேருபெற்று ஓங்குவனமிதுகாண்
என்றதுகேட்டு எழில்விஜயராசாவும்
உற்றுற்றுக்கேட்டு உள்ளமிகமகிழ்ந்தார்
அந்தச்சமயம் அருச்சுனராசரிடம்
போகவிடைதாருமெனப் புகன்றான்பிராமணனும்
போய்வாருமென்றுசொல்லி போகலுற்றான்போர்விஜயன்

பதினோராவது ஊர்க்குருவிவனம் முற்றிற்று.

## ௧௨-வது, காளபயிரவ வனம்

பன்னிரண்டாம்வருஷம் பிறந்ததுபஞ்சவற்கு
சடைதலைமேல் சூடிவாழ்க்கைகானகத்தில்
கோவிவைத்தசீமாடு சடைதலைமேலேவைத்தார்
அந்தவனத்தைவிட்டு அப்புறம்போனார்கள்
காளபயிரவ வனத்திலேகாவலர்கள்
அங்கேகுடித்தனமாய் ஐவர்குடியிருந்தார்
காண்டாவனமெரித்த காளையருச்சுனனும்

காளபயிரவ கானகத்தில்வந்தமர்ந்தான்
அங்கேதவமுனிகள் அனேகம்பேரப்பொழுது
சாமியென்றுவந்தோமே தவசுதுலைந்ததையா
சிவனுமென்றுவந்தோங்காண் செப்ததவம்வீணாச்சு
என்றுமனங்கலங்கி எப்போதும்போலிருந்தார்
அந்தரிஷிகளண்டை அருச்சுனன் தவஞ்செய்தான்
அங்கிருக்கும்ரிஷிகள் அனேகம்பெரியவர்கள்
இத்தனைகாலமட்டும் இருந்துதவம்பண்ணுகிறோம்
இருந்துதவம்பண்ணி ஈஸ்பரனும்வந்ததில்லை
ஆதிசிவனுரை ஆண்டவனரைக்காணவில்லை
பரமசிவனுரைப் பார்க்கஅரிதாகும்
கைலாசவாசலிலே கடுகதவம்பண்ணினுலே
பரமசிவனுரும் பாக்கியந்தந்திடுவார்
சுகயாகவாழ்ந்திடுவீர் துரிதமாயேகுமென
இவ்வார்த்தைதான்கேட்டு இயலானவாள்விஜயன்
எல்லோர்க்குஞ்சரணமிட்டு எழில்விஜயன்போய்நடந்தான்
கடுகிநடந்தானே கைலாசபருவதத்தில்
பொய்கையில்ஸ்நானம்பண்ணி பூசைதவமுடித்து
காளபயிரவனைக் கடிகித்தியானம்பண்ண
எழுபதடிக்கம்பம் எழில்விஜயன்நாட்டினுன்
எழுபதடிகம்பத்தின்மே லேழுயிளநீரைவைத்தான்
ஏழுயிளநீரின்மேல் ஏழுவிளாம்பழத்தைவைத்தான்
ஏழுவிளாம்பழத்தின்மேல் எலுமிச்சங்கனியைவைத்தான்
எலுமிச்சங்கனியின்மேல் ஏழுகொட்டைபாக்குவைத்தான்
ஏழுகொட்டைபாக்குமேல் ஏழுகுண்டுமணியைவைத்தான்
ஏழுகுண்டுமணியின்மேல் ஏழுகடுகைவைத்தான்
ஏழுகடுகதன்மேல் ஏழுசெப்பூசிவைத்தான்
ஏழுசெப்பூசியின்மேல் ஏழுசெவ்வலரிவைத்தான்
ஏழுசெவ்வலரியின்மேல் ஏறினுன்தேர்விஜயன்
ஒருக்காலைத்தானூன்றி ஒருக்கால்முழங்காலில்வைத்தான்
கண்ணிரண்டுமூடியே கர்த்தன்மேல்தியானமானுன்
அரகராஅரனென்று அடித்தான்செயகண்டிகை
ஓம்நமசிவாயவென்று ஒலித்தானேசங்குதனை
ஒருவன்சிவனேயென்றால் உலகம்சிவனேயென்னும்
அருந்தவசுபண்ணுகிறுன் அருச்சுனராசதுரை
அகோரத்தவசுபண்ணுறுன் ஆண்டவனைக்காணவென்று
ஆதிசிவனுர்க்கு அருச்சுனன்செய்ததவம்
பொறுத்துமுடியவில்லை போர்விஜயன்செய்ததவம்
ஆதிசிவனுர்க்கு அக்கினியாய்வீசுகுது
காலனைக்காலாலுதைத்த கைலாசநாதரவர்
கோபம்பெரிதாகி கொப்பெனவேயேதுசொல்வார்

ஆராடா தூதுவனை அழையுங்கள்மாயவரை
எமன்பிரமாவை இங்கேயழையுமென்றார்
விண்ணாட்டுத்தேவனை விரைந்தோடியழையுமென்றார்
விக்கினவிநாயகனை வேலவனையழையுமென்றார்
ஓடியழைத்து ஒருநொடியில்வாங்களென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அவரவர்கள்பயணமானார்
வைகுந்தம்ஓடிவந்து மாயவரைத்தெண்டனிட்டு
ஆதிசிவனா ரழைத்துவரச்சொன்னாரென்றார்
அமராவதியாளும் ஆயிரங்கண்ணனுக்கும்
எமலோகமாளும் எமதர்மராசனுக்கும்
பிரமலோகந்தன்னிற் பிரமதேவனானவற்கும்
வசிஷ்டரும்வால்மீகர் மகாதவமுடையவற்கும்
அத்தண்டதேவர்முதல் அனைவருக்குஞ்சொல்லினான்
சிவனார்வரவழைத்தார் சீக்கிரம்வாருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அவரவர்கள்பயணமானார்
வாழ்கருடனேறியங்கு வந்துவிட்டார்மாயவனார்
மத்தகஜமேறியங்கு வந்துவிட்டாரிந்திரனார்
எமன்கடாவின்மேலேறி ஈசரருகில்வந்தான்
அன்னபிரமாவும் அன்னத்தின்மீதில்வந்தார்
காமயில்மேலேறிக் கந்தரும்வந்துவிட்டார்
மூஷிகவாகனத்தில் மூன்றோனும்வந்துவிட்டார்
முப்பத்துமுக்கோடி முனிவரும்வந்துவிட்டார்
ஆதிசிவன்பக்கலிலே அனைவரும்வந்துவிட்டார்
வந்துபணிந்தார்கள் மகாதேவன்பக்கலிலே
அத்திபுரிக்கவனார் ஆதிசிவனேதுசொல்வார்
மாயன்பெருமாளே வார்த்தையொன்றுகேட்டீரோ
ஆரோதெரியாது ஆதிகைலாசம்வந்தான்
எவனோதெரியாது இங்கேதவம்பண்ணுகிறான்
கைலாயந்தன்னிலேதான் கடிகிவரஞாயமுண்டோ
கைலைக்குஅப்பாலே கானகந்தன்னிலேதான்
கருகிதவம்பண்ணுக்கால் காட்சிவரந்தந்திடுவோம்
இங்கேதவம்புரிய எற்குமோசொல்லுமென்றார்
இவன்: ஆரோதெரியாது ஆண்மையால்வந்துவிட்டான்
என்-தலைமாட்டில்நின்று சத்தங்கள்போடுகிறான்
ஆரோதெரியாது அறிந்துவந்துசொல்லுமென்றார்
மாயன்பெருமாளும் வார்த்தையங்கேதுசொல்வார்
பாண்டுமகாராசன்பெற்ற பஞ்சவர்களிலொருவனுண்டு
குந்திமாதேவிபெற்ற குலமணிகளிலொருவனுண்டு
ராவிலேநட்சத்திரம் நயனவிழிப்பார்வையுள்ளோன்
மீசைமுறுக்கழகன் விழியிற்கருப்பழகன்
தோளிற்றுளசிமாலை தொப்புளில்அமிர்தகலசம்

பல்லில்பாசவினை பாதத்தில்செந்தாமரை
பஞ்சவரிலிவனொருவன் பார்த்திபனென்றார்காண்
இடதுகால்பொம்மைவிருது வலதுகால்வீரதண்டை
சலவிருதுகுலவிருது சமர்த்துகல்படைத்தவன்
சிவபூசைகுருபூசை சிவன்பாதம்மறவான்காண்
என்னதவம்வேண்டி யிங்குவந்தேனென்றறியேன்
என்றதுதான்கேட்டு யேதுசொல்வாரிவ்வாரும்
தருமர்தப்பியானாலும் சமர்த்துடையோனானாலும்
கைலாயந்தன்னிலே கடிகிவாஞாயமுண்டோ
இவன்-இந்தவிதமாயிருந்து எதுதவம்பண்ணினாலும்
எருந்திருந்தாலும் வரமருளப்போறேனோ
தவசைக்கெடுத்திடுவேன் தருமர்தம்பிஅர்ச்சுனரை
என்றுமகாதேவர் எரிபறந்துகண்சிவந்து
வாயுராசன்தன்னையே வாவென்றழைத்தாராம்
அருச்சுனன்செய்துமந்த அருந்தவசக்கம்பமதை
தவசுநிலைகம்பமதை சமுத்திரத்திற்போடுமென்றார்
அரைநாழிக்கொள்ளையிலே அதமாக்கிவாருமென்றார்
என்றதுதான்கேட்டு எழுந்தானேவாயுராசன்
ஆபன்பெருமாளும் அவ்வார்த்தைதானறிந்தார்
கைமோசம்வந்ததென்றே கரியமாலப்போது
அருச்சுனராசனுக்கு அனர்த்தம்வரநாளாச்சு
காக்கவேணுமென்று கரியமாலோடிவந்தார்
மாயையாய்வந்தாரே வான்விஜயன்முன்னாலே
காண்டீபாஅர்ச்சுனரே கைமோசம்வந்ததடா
ஆதிபரமசிவன் அதிககோபங்கொண்டாரே
வாயுராசன்தன்னையிப்போ அனுப்பினார்மகாதேவர்
தவசுநிலைகம்பமதை சமுத்திரத்திற்போடவாரான்
வாயுராஜனுக்கு வலுவாயிருப்பாயா
என்றதுதான்கேட்டு எழில்விஜயனேதுசொல்வான்
உம்மையேநம்பியே உம்பர்புரம்வந்தேன்
ஆரைச்சதமென்பேன் அவனியனைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உள்ளங்கைநெல்லிப்பழம் உருக்குலைந்துபோகாமல்
தோளில்செபமாலை தொண்டழிந்துபோகாதே
பெட்டியில்பூஷணம் பெருமைகுலையாதே
காக்கக்கடனுமக்கு கரியமாலெப்பெருமாள்
அண்ணருந்தம்பியரும் அனுப்பினார்உன்னைநம்பி
ஆரைநம்பியிங்குவந்தேன் ஆதிகயிலாசம்
என்னமாயிருந்தாலும் ஈஸ்வரனொரந்தனுக்கு
வந்தவினைமாற்றி வரமருளச்செய்யுமையா
என்றுவணங்கினான் இயலானவாள்விசையன்

சிந்தைமனங்குளிர்ந்து ஸ்ரீராமனென்னசெய்தார்
தருமர்தம்பிஅர்ச்சுனன்தன் தவசுநிலைக்கம்பமிது
வாயுராசன்வந்து வலுமையாயசைக்கினாலும்
ஆதிசிவன்வந்து அசைக்கிவலித்தாலும்
மேலாதிதேவரொன்றாய்ச் சேர்ந்தசைக்கினாலும்
அர்ச்சுனன்தவசுநிலை அசையாமலிருக்கவென்றார்
மாயனார்வரங்கொடுத்து வந்துவிட்டார்கைலையிலே
ஆருமறியாமல் ஆதிசிவனருகில்வந்தார்
அந்தச்சமையத்தில் ஆங்காரவாயுராசன்
மண்ணும்விண்ணும்தானதிர வாறானேவாயுராசன்
தெற்கேயிருந்து திசைவடக்குமுகம்நோக்கி
இறைந்துவந்துமோதினான் இவ்விசயன்தவசடியை
அப்புறத்திங்கிப்புறந்தான் அசையாமல்தானிருக்கும்
மலுக்கொலொருதாமும் வந்துஅறைந்தானும்
சாயாமல்நின்றது தவசுநிலைக்கம்பமிது
தன்னாலேயாகாமல் சங்கரிக்கமுடியாமல்
திரும்பினான்வாயுராசன் சிவனாற்குசேதிசொல்ல
அருச்சுனனைப்பார்த்து அதிகப்பிரியமுமாய்
என்னிலும்வல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
அர்ச்சுனனுக்குத்தனுக்கு அஸ்திரந்தாரேனென்றான்
வாயுவினஸ்திரத்தை வாள்விஜயன்கைகொடுத்தான்
வாங்கிநமஸ்கரித்து வாள்விஜயனேதுசொல்வான்
எவனுப்பவந்தீர்காண் என்தவசைநீரழிக்க
என்றதுகேட்டு ஏதுசொல்வான்வாயுராசன்
ஆதிசிவனழைத்து அனுப்பினார்உன்னிடத்தில்
தவசுநிலைகம்பத்தை சமுத்திரத்திற்போடுமென்றார்
ஆகையாலிங்குவந்தேன் அசக்கினேன்கம்பமதை
என்னால்முடியவில்லை இளவிசையாஉனைஜெயிக்க
ஆதிசிவன்வந்திடுவார் அதிகவரந்தந்திடுவார்
என்றுரைக்கையிலே இளவிஜயனேதுசொல்வான்
உம்பர்பிரானுக்கு ஒருவார்த்தைசொல்லுமையா
என்னவென்றுசொன்னாலெனறில்விசயனர்ச்சுனனும்
திருவடியைத்தாபாசுபதம்கிரீடிக்குத்தாருமையா
வேண்டும்வரங்கள்தனை விமலரேதாருமையா
கேட்டவரங்கள் கிருபைவைத்துத்தாருமையா
வரங்கள்தந்தாலொழிய மலையைவிட்டுப்போவதில்லை
தவசுநிலைவிட்டுத் தனஞ்செயனும்போவதில்லை
ஆண்டவனேகேளுமேல் அசட்டையாகியிருந்தால்
மண்டையிலடிப்பேனென்று வாமதேவருக்குரையும்
தண்டையுடைப்பேனென்று சங்கரற்குநீருரையும்
என்றுவிசயனெடுத்துரைத்தானப்போது

வாழ்த்திவிடைபெற்று வருகிறார்வாயுராசன்
ஆதிசிவனாற்கு அடிபணிந்துதெண்டனிட்டு
மான்மழுதரித்ததேவா மலர்ப்பாதம்சரணமையா
அர்ச்சுனன் தவசழிக்க ஆண்டவனேமுடியாது
உம்பர்பிரானே உமமாலுமாகாது
காட்சிதராவிடிலோ காண்டீபத்தாலடிப்பான்
வரங்கள்கொடாவிடிலோ மண்டைபிளப்பேனென்றான்
என்றதுகேட்டு ஈஸ்வரனார்கோபமானார்
கேட்டீரோமாயவரே கெர்வத்துடன்சொன்னது
மண்டையுடைக்கவும் வரம்வாங்கும்வல்லவனோ
காண்டீபத்தாலடித்து கடிகிவரம்வாங்குவானோ
தலையையுடைப்பேனென்ற தனஞ்செயனையிப்போதே
மண்டைதனையுடைத்து வல்லுயிரைவாங்கிடுவேன்
என்றுபரமசிவன் எரிபறந்துகண்சிவந்து
ஆடாயிடிபகவான் அதிவிரைவாய்வாருமென்றான்
ஏழிடியுங்கூடியொரு பேரிடியாயிடித்து
அருச்சுனன்தன்தலையை அறுபதுசுக்கலாக்கி
கொன்றுஅதமாக்கிக் கொப்பெனவேவாருமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆங்காரஇடிபகவான்
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துநடுக்கமுற
எழுந்தானிடிபகவான் ஏழுலகந்தானதிர
அந்தச்சமயத்தில் அரிராயரோடிவந்தார்
அர்ச்சுனாபார்த்தீபா ஆதிசிவன்கோபமானார்
இடிபகவான்தன்னை ஈஸ்வரனாரனுப்பினார்
தலையையுடைக்கவென்று தான்வாறான்இடிபகவான்
தப்பித்துக்கொள்ளுமென்று சாமியவர்போய்விட்டார்
அந்தச்சமையத்தில் ஆங்காரஇடிபகவான்
தெய்வலோகந்தானதிர தேவர்கிடுகிடென்ன
பாதாளஆதிசேஷன் பயந்துகிடுகிடென்ன
கெற்பங்கிடுகிடென்ன கிளிகள்கடிக்கொள்ள
அஷ்டகிரிபர்வதங்கள் அதிர்ந்துகிடுகிடென்ன
எட்டுதிசைநடுங்க ஏழுலகந்தத்தளிக்க
ஏழிடியுங்கூடியொரு பேரிடியாய்தானிடித்து
அர்ச்சுனற்குநேராய் ஆகாயமீதிருந்து
உறுதியாய்ப்பலங்கூட்டி உச்சியிலேதானிடித்தான்
வறட்டுமிடிபகவான் என்றல்லோவாள்விசயன்
இடிபகவான்வருகையிலே எழில்விஜயனென்னசெய்தான்
ஒஞ்சரித்துத்தானிருந்து ஒருபக்கம்இடிக்கவே
கண்முழிபிதுங்குது கண்ணீருந்தான்வடிய
இளைப்புந்தவிப்புமாயிருக்குதிடிதேவருக்கு
பெச்சிமினன்மருமகனை விட்டுவிடுமென்னையென்றார்

என்மகளையின்னொளியை எந்திடுவேனுந்தனுக்கு
இப்பொழுதுந்தனுக்கு இடியால்திரந்தாறேனென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனேதுசொல்வான்
இனிமேல்கலியுகத்தில் எங்கேயிடித்தாலும்
அருச்சுனனென்றுசொன்னால் அப்பால்நீர்போறீரோ
என்பேருசொன்னால் எழுகாதம்போறீரோ
அவசியம்போறேனென்று ஆணையிட்டானிடிபகவான்
எவனுப்பவந்தீர்காண் என்னையிடித்துகொல்ல
என்றதுகேட்டு ஏதுசொல்வானிடிபகவான்
ஆதிசிவனுரனுப்பினாருன்னிடத்தில்
ஆங்காரத்துடனேவந்து அகப்பட்டேனுந்தன்கையில்
சத்தியவானென்தலையை தப்பவிட்டால்மகாராசா
உன்-புண்ணியத்தாலே பிழைத்துநான்போறேன்
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனேதுசொல்வான்
ஆதிசிவனுற்கு அடிபணிந்தேனென்றுசொல்லும்
எதுவருந்தங்கள் என்னையிடர்செய்தாலும்
அர்ச்சுனன்வார்த்தைக்கு அழிவுவரப்போறதில்லை
சொல்லாருன்கையில் எந்தவிதமானாலும்
வைப்வாங்கவல்லான் வாள்விசயனென்றுசொல்லும்
இடிபகவானுக்குரைத்து எழில்விசயன்தானனுப்பி
அறிவைமறவானும் அரன்மேலேதியானமானான்
சிவனைமறவானும் சிவன்மேலேதியானமானான்
அந்தச்சமயத்தில் ஆதிசிவனாரிடத்தில்
வந்தானிடிபகவான் வணங்கியேநமஸ்கரித்தான்
ஆண்டவனேஐயாவே அடியேனொருவிண்ணப்பம்
உன்வார்த்தைகேட்டுப்போய் உயிரிழக்காளாச்சே
எழிடியுங்கூடியொரு பேரிடியாய்த்தானிடித்தேன்
இறங்கித்தலைசாய்த்து என்னையேபிடித்துக்கொண்டான்
சத்தியவான்அருச்சுனனும் தப்பவிட்டானென்தலையை
ஏதுநீர்செய்தாலும் இளைத்துவிடானர்ச்சுனனும்
வரம்வாங்கிப்போகவல்லான் வாள்விஜயனருச்சுனனும்
அவனை-சிக்கமதில்நினைக்கத் தேகம்நடுங்குதையா
பின்னும்நினைவுகொண்டால் பிராணன்பதைக்குதையா
என்றுசொல்லஇடிபகவான் ஈசனதற்குரைப்பார்
அத்தனைக்கும்வல்லவனோ ஆண்பிள்ளை அருச்சுனனோ
அரைநாழிக்கொள்ளையிலே அதமாக்கிப்போகிறேன்
அநேகமானசெல்லுகளை ஆண்டவனுருண்டுபண்ணார்
செல்லுகளேநீங்களும்போய் சீக்கிரம்விசயனுடன்
சரீரமுதியங்கமெங்குஞ் சல்லடைக்கண்களாகத்
துளைத்துவிட்டுவாருமென்று சொன்னார்பரிசுபாணி
வருகுதுசெல்லதுதான் வாள்விசயன்தன்னருகே

அந்தச்சமயத்தில் அரிராமரோடிவந்தார்
அருச்சுனவாள்விசையா அநேகமோசம்வருகுதடா
ஆண்டவன்கோபமதாய் அநேகஞ்செல்லனுப்பிவைத்தார்
எச்சரிக்கையாகவே இருங்காணருச்சுனரே
என்றதுசொல்லியே எம்பெருமாளெவிவிட்டார்
அந்தச்சமயத்தில் அநேகமானசெல்லுவர
சுரேந்திரன்மைந்தனையுஞ் சூழ்ந்ததுசெல்லுகள்தான்
கண்டானே அர்ச்சுனனும் காண்டீபந்தான்வளைத்தான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனிதகான்
அக்கினிஅஸ்திரத்தை அருச்சுனன்உச்சரித்து
மாரிபிரளவாங்கினன் வளரவிட்டான்அக்கினியை
அருச்சுனன்தபசுநிலை கம்பத்தருகாக
அக்கினிவருகுது அண்டமுடியாது
செல்லுகளண்டாமல் செந்தணலாய்ப்பத்துகுது
பார்த்துபயந்து பறந்ததுசெல்லுகள்தான்
சங்கரன்தன்னருகே சரணமிட்டுவதுசொல்லும்
ஐயாவேஈஸ்வரரே ஆண்டவரேநீர்கேளும்
அர்ச்சுனன்தன்னருகே அக்கினிவளருகுது
ஆற்றமுடியாமல் ஐயாவேவந்துவிட்டோம்
ஆதிசிவன்கேட்டு அதிககோபமுண்டாகி
அத்தனைக்கும்வல்லவனோ அர்ச்சுனராசனுந்தான்
என்றுபரமசிவன் எரிபறந்தாகே பமுடன்
வருணபகவானை வாருமென்றுதானழைத்து
யானையுடகால்பெருமை யானைமழைபெய்யுமெனக்
கட்டளையிட்டு கடிகியேபோமென்றார்
ஆதிசிவன்வார்த்தை அவ்வருணன்தவறாமல்
சமுத்திரத்தின்நீரையுண்டு தான்வருதுமேகங்களும்
கார்மேகமெழும் கறுத்துஎழும்பியது
ஆனைக்கால்போலவே அவ்வருணன்மழைபொழிய
அந்தச்சமயத்தில் ஆபரும்ஓடிவந்தார்
அர்ச்சுனவாள்விசயா ஆண்டவனார்கோபமதாய்
வருணபகவானை மழைபொழிய அனுப்பினார்
எச்சரிக்கையாக இருமென்றுதானடந்தார்
அந்தச்சமயத்தில் ஆங்காரவருணராசன்
மேகமெழும்பி மின்னல்வருணகயிலை
கண்டானேவாள்விசயன் கனமோசம்வருகுதென்று
வில்வளைத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
சங்கரமாரிபோலே சரமேபஞ்சரம்பொழிந்தான்
அம்பினால்மேற்பந்தல் அர்ச்சுனன்போட்டுவிட்டான்
வான்மழைபொழியாமல் வான்சரத்தால்பந்தலிட்டான்
வருணபகவானும் வந்துமழைபொழிந்தான்

வெள்ளமாய்த்தான்பெருக வேணமழைபொழிந்தான்
அர்ச்சுனன்வளர்த்தனை அக்கினிக்குச்சேதமில்லை
வருணபகவானும் மனதுமிகக்குளிர்ந்து
சந்தோஷப்பட்டானும் தார்விசயனர்ச்சுனன்மேல்
என்னிலும்வல்லபிரான் என்றுமனமகிழ்ந்து
வருணாஸ்திரத்தை வாள்விசயன்கைகொடுத்தான்
வாங்கியேவாள்விஜயன் வருணனுக்கேதுசொல்வான்
ஆரனுப்பநீர்வந்தீர் அமரதுசெய்யவென்று
என்றதுகேட்டு ஏதுசொல்வான்வருணராசன்
பரமசிவனார் அனுப்பினார்வந்தேனென்றான்
எழில்விஜய உனைசெயிக்க என்னால்முடியாது
ஈசனார்தன்தமக்கு இவ்வார்த்தைசொல்லப்போறேன்
ஆனால்வருணரேநீர் அரனுக்கெடுத்துரையும்
கோடிசரணமும் கும்பிட்டேனென்றுசொல்லும்
அகச்சாடல்செய்வதேனோ அர்ச்சுனன்மேல்கோபமேனோ
கடிகியேவந்தெனக்கு காட்சிதரச்சொல்லுமையா
போய்வாருமென்று பொட்டெனவேசரணமிட்டான்
வாய்வேகமாகவே வருணராசன்வந்துவிட்டான்
ஆதிசிவனுக்கு அடிவணங்கிதெண்டனிட்டான்
அர்ச்சுனன்தனைசெயிக்க ஆராலும்முடியாது
உம்பர்பிரானாரே உம்மாலேமுடியாது
அத்தனைக்கும்வல்லபிரா னைகையினாலிங்குவந்தான்
கோறினவரத்தைநீர் கொடுத்தனுப்புமீஸ்வரரே
என்றதுகேட்டு ஈஸ்வரனார்கோபமானார்
வாள்விசயன்தன்னுடைய மனமுடுக்கழிக்கிறேன்பார்
கழுகுகளுங்கூளிகளுங் கடிகியேயுண்டுபண்ணார்
அருச்சுனன்மாங்கிஷத்தை அடங்கலுமுண்ணுமென்றார்
கவ்விப்பிடுங்கியே கடிகியேகொல்லுமென்றார்
இமையோர்பிரானாரும் இன்னமேதுண்டுபண்ணார்
கருவண்டுசெவ்வண்டு கணக்கில்லாதுண்டுபண்ணார்
கொட்டுகின்றகுளவியை கோடியவருண்டுபண்ணாக்
சுரேந்திரமகனுடலைத் துளையாய்த்துளையுமென்றார்
அரைக்ஷணநாழிகையில் அர்ச்சுனரைக்கொல்லுமென
மகதேவர்சிலவருள வருகுதுசேனைகள்தான்
குளவிகளுங்கூளிகளும் கூட்டமாய்வருகுதங்கே
கனமோசம்வருகுதென்று கரியமால்தானிருந்து
அர்ச்சுனராசரண்டை அரிராமரோடிவந்தார்
காண்டீபாஅர்ச்சுனரே கழுகுகள்வருகுதடா
குளவிகளுங்கழுகுகளும் கூளிகளும்வண்டுகளும்
அநேகம்வருகுது அங்கந்துளைப்படுத்த
எச்சரிக்கையாகவே இருங்காணுமர்ச்சுனரே

என்றதுகேட்டு இந்துமகனேதுரைப்பான்
அடியேனுமேலாகும் ஐயர்பெருமாளே
உன்வலிமையாலே உம்பர்புரம்வந்தேனே
எந்தவிதத்திலேயும் ஈடேறப்பாருமையா
வணங்கிச்சரணம்பண்ணான் மாயன்பெருமாளை
தரணியளந்தவரும் சந்தோஷப்பட்டாராம்
கழுகுகளுங்கூளிகளும் கவ்விச்சதைகொண்டாலும்
அருச்சுனன்தேகத்துக்கு அழிவில்லாதேயிருக்க
என்றுவரமளித்து எம்பெருமான்போய்நடந்தார்
வந்துவிடுங்கிறது வாள்விஜயன்தேகமெல்லாம்
கல்லடைக்கண்போல் சமமாய்த்துளைப்படுத்தும்
எப்போதும்போல் ஏற்படுத்துந்தேகமெல்லாம்
கைகள்நகம்பேர்த்து கடித்தபல்லுங்கூர்மழுகி
மூக்குகள்தானொடிந்து முண்டங்களாயோடுகுது
ஆதிசிவனருகில் அடிபணிந்துதெண்டனிட்டு
வாய்கட்டிவாய்புதைத்து கழுகுகள்முறையிடும்
எங்களாலானமட்டும் எழில்விஜயன்தேகமதை
கல்லடைக்கண்களைப்போற் சதையைத்துளைத்திடுவோம்
சதைசைபத்துளைத்திடுவோம் சதையைப்பிடுங்கிடுவோம்
குப்பல்குப்பலாகவேதான் குவிப்போமேமாங்கிஷத்தை
குவித்தநாழிகைக்குள் கூடிவிடுந்தேகமாய்
துளைத்தநாழிகைக்குள் தோன்றுமுடல்முன்போல்
பின்னுஞ்சதைகவ்விப் பிடுங்கியெறிந்திடுவோம்
அருச்சுனன்தேகமதை அழித்தோம்அழியவில்லை
கடித்தபல்லுங்கூர்மழுங்கி கைகள்நகம்பேர்ந்துதையா
எங்களால்முடியாது இளவிஜயனைச்செயிக்க
ஆராலும்முடியாது அருச்சுனனைச்செயிக்க
கோரினவரத்தை கொடுத்துவிடும்ஆண்டவரே
அவ்வார்த்தைகேட்டு ஆதிசிவனேதுசொல்வார்
எத்தனைநாள்தவசிருந்து ஏனென்றுகேட்டேனோ
என்றுபரமசிவன் இருந்தார்சிங்காதனத்தில்
கற்பூரமண்டபத்தில் கர்த்தர்கொலுவிருந்தார்
மாயன்பெருமாளு மறுபடியுமோடிவந்தார்
அருச்சுனன்பார்த்தபோ ஆதிசிவன்மோசஞ்செய்தார்
கற்பூரக்கொடிமுடியில் கர்த்தர்கொலுவிருந்தார்
கற்பூரக்கொடிமுடியைக் கனலாற்கொளுத்திவிட்டால்
கலகத்தைச்செய்துவிட்டால் காட்சிதனைத்தந்திடுவார்
என்றதுசொல்லி எம்பெருமான்போய்நடந்தார்
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
வில்வளைத்துநாண்பூட்டி வில்லைக்குணக்கொணித்தான்
அக்கினிபாணமதை அருச்சுனன் உச்சரித்து

அந்தச்சமயத்தில் அரிராமரோடிவந்து
அருச்சுனபார்த்தீபா அதிகமோசம்வந்தது
பாதாளமண்டபத்தில் பரமசிவன்போனார்
போய்விட்டாராமானால் பிற்பாடுகாணொணாது
காணக்கிடையாது கர்த்தருடசேர்வை
போக[illegible]மேலதடுத்தால் பெருமாளைக்கண்டிடலாம்
என்றது[illegible]சொல்லி எம்பெருமாள்போய்நடந்தார்
ம[illegible]னபின்பு வாள்விஜயனேதுசொல்வான்
கா[illegible]வில்லைவளைத்து கணையெடுத்துஉச்சரித்தான்
கடிகைமறித்துவிடும் என்றுகணைதொடுத்தான்
வந்துவளைந்தது வாள்விசயன்விட்டபாணம்
மகாதேவர்முன்பாக வளர்ந்தது அக்கினிபோல
முக்கண்ணுடையவரை முன்னேதடுத்ததுகாண்
கண்டார்பரமசிவன் கண்கொள்ளாக்கோபமுடன்
கண்டீரோதேவர்களே காண்டீபன் ஆண்மைகளை
இப்படிப்பட்டவற்கு எப்படிவரங்கொடுப்பேன்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்தேவரெல்லாம்
தருமர்தம்பிஅருச்சுனற்கு சமார்த்துகள்மெத்தவுண்டு
இவருடன்எதிர்த்தவர்கள் எவரும்பிழைப்பதில்லை
காட்சிதந்தாலல்லாது கனமோசம்வந்துவிடும்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்ஈஸ்பரும்
அருச்சுனன்சமர்த்துகளை ஆண்மைகளைக்காணுகிறேன்
தவசுநிலைக்கம்பமதை தரையோடமிழ்த்துகிறேன்
என்றுபரமசிவன் எமனைத்தானழைத்து
எமதர்மராசரே நீர் ஏனம்போல்வடிவெடுத்து
அருச்சுனன்தன்னருகில் அபயமிட்டோடுமென்றார்
கடுகியனுப்பினார் கடவுளுமவனையங்கே
எமதர்மராசன் ஏனம்போல்வடிவெடுத்து
பன்றிவடிவெடுத்து பார்த்தீபன்அருகில்வந்தான்
அபயம்அபயமென்று அழுதுபுலம்பிவாரான்
அபயமென்றசத்தம் அருச்சுனன்தான்கேட்டு
அபயக்குரல்கேட்டால் ஆதரிக்கவேணுமென்று
அலதம்புஅஸ்திரத்தை அருச்சுனன்விட்டுவிட்டான்
காட்டுப்பன்றிதன்னையுநீ கம்பத்தில்கட்டுமென்றான்
மந்திரதாபமிட்டு வாங்கினனருச்சுனனும்
வந்ததுஅஸ்திரந்தான் வளைந்துமேகட்டுது
கம்பத்துடனேதான் கட்டியேபோட்டுது
கட்டுண்டான்காலன் காண்டீபன்தன்ரதத்தால்
அந்தச்சமயத்தில் ஆதிசிவனெழுந்தார்
மெத்தப்பெரியவராய் வேடன்வடிவெடுத்தார்
பிரமதேவன்தானும் பெரியதொருவேடரானார்

விக்கினவிநாயகரும் வேடர்வடிவெடுத்தார்
நாற்றுலம்வெகுமுத்த சுப்பிரமணியர்வேடமானார்
அமராபதியானும் அங்கவிரான்வேடமானார்
அடியளந்தமாயவரும் அங்கேகூடவேடமானார்
அரக்கனைக்கொல்லவென்று அனைவரும்வேடமானார்
ஈஸ்வரியைத்தானழைத்து இப்போசமயமென்றார்
ஈஸ்வரியாள்தன்னுடனே பழுவேர்வேடமானார்
வேடுவர்வடிவெடுத்து வாள்விஜயன்தன்னருகே
கால்செருப்புங்கோல்குல்லாவும் கையில்துப்பாக்கிகளும்
பாண்வலையுந்தில்லைக்கோல் மருந்துகேப்புண்டுகளும்
பொட்டணமுண்டு துப்பாக்கி தெரிசமும்தோளில்வைத்து
பின்னேவேடன்பெரியவேடன் சிவனார்கிழவேடமானார்
பொன்குல்தழுக்காத்துப் புறப்பட்டார்வேடரெல்லாம்
மற்றுமுள்ளதேவதைகள் வயிரவனார்வடிவெடுத்தார்
சருகாயுஞ்செந்நாயும் கணக்கில்லாநாய்கள்வர
காட்டைவளைந்தார்கள் கருநாயைச்சுத்திவிட்டார்
அம்புவில்லையுந்தாம் பூண்டவனார்கைபிடித்து
வாருங்கள்வேடரெல்லாம் வளைத்துத்துரத்தியல்லோ
அந்தவண்டவேடுவரும் அர்ச்சுனரருகில்வந்து
ஆர்காணுஞ்சங்கமரே அறிவைப்படைத்தவரே
புதிதாய்தவசுபண்ணி புத்திமெத்தக்கற்றவரோ
திரும்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
மறைகண்டாய்வேடுவனேன் எட்டுநாள்காத்திருந்தேன்
காத்திருந்தின்வேனமதைக் கலையாமல்வைத்துவிட்டேன்
காயம்பட்டேனம் கடிகியேவந்ததிங்கே
ஏனம்வந்தசாடையிது இப்போதடிபிடித்து
அடிபிடித்துவந்தோம்நாம் ஆனதொருசங்கமரே
கம்பத்துடனேநீர் கட்டிவைத்தகாரியமேன்
பசியோடிருக்கிறோம் பன்றிதனைவிட்டுவிடும்
பிள்ளையுங்குட்டிகளும் பெரும்பசியாய்ப்புலம்புகிறோம்
அட்டவிழ்த்துவிட்டுவிடும் கடுகப்புசித்திடுவோம்
என்றுசொல்லிக்கொண்டு சவ்வாருந்தான்வரவே
காண்டீபனருச்சுனனுங் கடிகியேதுசொல்வான்
வைத்தியானமாகவே சிலைவிஜயனேதுசொல்வான்

ஆட்டாதேவேடுவனே அப்புறத்தேபோய்விடுங்காண்
ஆயக்குரல்கேட்டால் ஆதரிப்பேனல்லாமல்
இனிமேல்விடுவேனென்று எண்ணுதேஉன்மனதில்
பன்றியைத்தின்றுமேலே பசியாறிப்போவாயோ
குழந்தைக்குழந்தனுக்குங் குலத்தார்க்கும்போதுமோகாண்
தன்னைப்போலசிவன்களை தான்கொல்லஎண்ணுவரோ
சிவனுரைநோக்கியே செய்கிறேன்தவசுநிலை
எதிரிட்டுக்கொள்ளாதே இடையுங்கள்வேடுவரே
அரகரா அரனேயென்று அடித்தானேசெயகண்டியை
சம்போசிவனேயென்று தொனித்தானேசங்குதனை
ஆதிசிவனும் அர்ச்சுனற்குஏதுசொல்வார்
எத்தனைசொன்னாலும் இரங்கிலையேஉன்மனது
தருமம்நினைத்தாக்கால் சாமிவந்துதுணையாவார்
வயிறுபசிதீர்த்தாக்கால் மகாதேவர்துணையாவார்
உன்-தாயார்தகப்பனுக்குந் தமையற்குந்தம்பிமார்க்கும்
ஒருகோடிமோட்சமுண்டு உச்சாகஞ்செய்யுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனரேதுசொல்வார்
ஒருகாலுரைத்தேனே மறுகாலுரைப்பேனோ
தவசுநிலைவேளையிலே சத்தங்கள்போடாதே
சந்திரசூரியர்கள் தவறிநிலைதப்பினாலும்
காலம்புரண்டு கலியுகம்வந்தாலும்
நறுக்கிப்பிழிந்துஎன்னை நரகத்திற்போட்டாலும்
வாயாரச்சொன்னசொல்லு மறந்துவிடப்போறதில்லை
ஆதரிப்பேனல்லாமல் அலையவிடப்போறதில்லை
மறுவார்த்தைபேசாதே வல்லுயிரைவாங்கிடுவேன்
எதிரேவரவேண்டாம் இடையனில்லும்வேடுவரே
அரகரா அரனேயென்றான் அரன்மேலேதியானமானான்
அப்போதுபரமசிவன் அர்ச்சுனற்குஏதுசொல்வான்
நான்-ஏழையென்றோசங்கமரே என்னைமிரட்டுகிறாய்
என்னைத்துரத்திவிட்டேன் பன்றியைத்தின்னவென்றோ
என்னைமிரட்டுகிறாய் இவ்வார்த்தைநானறிவேன்
நான்போவேனென்று எண்ணுதேஉன்மனதில்
ஆறுபேர்வேடுவர்கள் அருங்கிளியாள்வேடுவச்சி
உத்தமரேநீயொருவன் வுகந்துபேசுடியல்லோ
பன்றிதனைச்சுட்டு பங்கிட்டுக்கொள்ளுவோம்வா

பங்குபோட்டுத்தின்று பசியாறிக்கொள்ளுமென்றார்
என்றதுகேட்டு ஏதுசொல்வார்சங்கமரும்
ஜாதிக்குத்தக்கபுத்தி தானிருக்கும்வேடருக்கு
என்றுசொல்லவேடரும் ஏதுசொல்வாரப்போது
ஆண்டிப்பயலுக்கு அறிவுகிடையாது
பசிக்குதெனவேண்டி பன்றிமேலம்புதொட்டேன்
தப்பித்துவோடிவரத் தம்பமதிற்கட்டலாமோ
கீழேயிறங்கிவாடா கேடுகெட்டஜங்கமனே
என்சமத்தும்உன்சமத்தும் இப்போ தெரியுமடா
சண்டைக்குவாடாநீ சமர்த்துள்ளசங்கமனே
என்றவுடன்கம்பம்விட்டு இறங்கினான்வாள்விசையன்
வாள்விசயன்தன்முதுகில் மட்சரேகைபார்க்கவென்று
பரமசிவனும்வந்து பார்த்தனுடன்சண்டைபண்ணார்
ஆண்டவனென்றறியாமல் அடித்தான்காண்வில்லாலே
பரமருங்கீழ்விழுந்து பார்த்தனையெடுத்துக்கொண்டார்
பார்வதியாள்பார்த்தாளே பார்த்தனிடமட்சரேகை
பார்த்தீபனென்று பார்வதியாள்பேர்கொடுத்தாள்
பாசுபதாஸ்திரம் பரமருந்தான்கொடுத்தார்
அநேகவரம்பெற்று அர்ச்சுனனுந்தான்வாறான்
அண்ணனிடம்வந்து ஆசையுடனுரைத்தான்
பன்னிரண்டுவருஷமும் பாரவனந்திரிந்து
ஐவர்பஞ்சபாண்டவரே ஆரணியம்விட்டுநீங்கள்
அக்கியாதவாசம் அருந்தபசுசெல்லுமென்று
இச்சையுடனுரைத்து எம்பெருமாள்பயணமானார்
வட்டமாங்கருடனேறி மாயவரும்போகலுற்றார்
துவாரகாபுரிநோக்கி சுவாமியவர்போகலுற்றார்
அப்பால்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
பரமருடதன்தயவால்|பன்னிரண்டுவருஷஞ்சென்று
வனவாசமேதிரிந்து வாறார்கள்பஞ்சவர்கள்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்விட்டலவோ
…டேவருகிறார் ராமருடன்தயவால்
…க்கதையிலே எழுத்துப்பிழையிருந்தால்
…ப்பிழைதிருத்தி தயவுபண்ணிரட்சிக்கவும்
…பால்தழைத்து அறுகுபோல்வேரூன்றி
…பால்ருசிக்கப் பாரில்மிகத்தான்வாழி

மூங்கில்போல்சுற்றம் முசியாமல்தான்வாழி
ஓங்கியநால்வேத முயிர்பலவுந்தான்வாழி
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனார்.

## விருத்தம்.

இப்பெருங்கதையை யுரைத்தவர்படித்தோ
ரெழுதினோர்பொருள்விரித் திசைத்தோர்
செப்பருமன்பாற் கேட்டுளோரிதன்பேர்
செப்பினோர்தீமையிற் றீர்ந்தே
எப்பெருஞ்சிறப்பு மைந்தரும்வாழ்வு
மிசைந்ததீர்க் காயுளுமுளராய்
ஒப்பருங்கதியி னிலைபெறவிளக்கி
யும்பரும்புகழ் வாழ்குவரே.

பஞ்சபாண்டவர் வனவாசம்

முற்றிற்று.

---

